# உங்கள் கேசத்திற்கு உரிய

# பராமரிப்பை அளிக்கிறீர்களா?

இராஸ்மிக் பர்ப்யூம்ட் கோகனட் ஹேர் ஆயில் உபயோகித்து அன்றாடம் பராமரித்துவந்தால் உங்கள் கேசம் அடர்த்தியாகவும், பளபளப்புடனும் மிளிரும். சுத்தமான தேங்காயெண்ணெயான இராஸ்மிக், கேசத்திற்கு போஷாக்களித்து சம்ரட்சிக்கும். உங்களுக்குப் பிடித்தமான—ரோஜா அல்லது மல்லிகை—நறு மணத்துடன் கிடைக்கும் சீசா ஒன்றை இன்றே வாங்கி உபயோகித்துப் பாருங்கள்.




## இராஸ்மிக்

பர்ப்யூம்ட்

கோகனட் ஹேர் ஆயில்




ECH. 3-50 TM

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

அந்த

# இளமைப் பொலிவை

பராமரிக்க

மைசூர் சந்தன சோப் பெரிதும் உதவும். அதன் செழிப்பான நுரையும் மனோஹரமான சந்தன நறுமணமும் உங்கள் சருமத்திற்கு உண்மையான போஷாக்களித்து மேனியழகை வளம்பெறச் செய்யும். இன்றே உபயோகித்துப் பாருங்கள்! பிறகு விரும்பி உபயோகிப்பீர்கள்.





தராதரமறிந்தோருக்கான
தனிச் சிறப்பு மிகுந்த டாய்லட் சோப்

மைசூர்

# சந்தண சோப்

கவர்ன்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்-3




| மலர் 18<br>இதழ் 26 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற<br>தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | விளம்பி ௵<br>தை 12 |
|---|---|---|


# புதிய தைரியம் வேண்டும்!

ஜவாஹர்லால்ஜி மிகுந்த தைரியசாலி என்று உலகம் போற்றுகிறது. மாபெரும் கூட்டத்திடையே துணிந்து நுழைந்து விடுகிறார். நடக்க முடியாத மலைப் பிரதேசங்களில் தைரியமாக ஏறிச் சென்று விடுகிறார். இப்படி அவருடைய அஞ்சா நெஞ்சத்தைப் பற்றியும் சாகசச் செயல்களைப் பற்றியும் மக்கள் கதை கதையாகப் பேசுகிறார்கள்.

அப்படிப்பட்ட தீர உள்ளம் படைத்த ஜவாஹர்லால் நேரு மற்றொரு மகத்தான தீரச்செயல் புரிய வேண்டி யிருக்கிறது. அதைச் செய்யும்படி அறிவுறுத்துகிறார், தமிழ்நாட்டிலிருந்து ஒருவர்.

அந்த ஒருவர் யார்? தேசத்தின் கஷ்ட நஷ்டங்களைப் பார்த்தபோதெல்லாம், தேசமக்களின் நலனில் அக்கறை கொண்டு தேசத் தலைவர்களுக்கு அறிவுறுத்தி வந்த தலைவர் ராஜாஜிதான் மீண்டும் கடமையுணர்ச்சியினால் உந்தப்பட்டு நேருஜியைத் தமது தைரியத்தைக் கடைப்பிடிக்கச் சொல்கிறார்.

நேருஜியை ஏழு சமுத்திரத்தைக் கடக்கச் சொல்லியோ, ஏழு மலைகளைத் தாவச் சொல்லியோ, இமயமலையைத் தூக்கச் சொல்லியோ அவர் சொல்லவில்லை.

அவர் சொல்வது மிக மிக எளிய செயல்தான்! ஆனால் அதற்கு மேற்கூறிய அத்தனை சாகசச் செயல்கள் செய்யக்கூடிய தைரியம்தான் வேண்டும்.

அப்படிப்பட்ட செயல் என்ன என்பதை ராஜாஜியின் மொழிகளிலேயே கேளுங்கள்:

"நான் புத்தம் புதிதாக ஒன்றும் சொல்லிவிட வில்லை. நான் சில நாட்களாகச் சொல்லி வருவது ஜவாஹர்லால் நேருஜியின் உள்ளத்தில் இருந்து கொண்டே வருகிறது. சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாகக் கடைப்பிடித்து வந்த கொள்கைகளும், திட்டங்களும், செயல்களும் விளைத்துள்ள பயன்களைப் பார்க்கும்போதும், மனித உள்ளம் எவ்வளவு மோசமான கீழ்நிலையை அடைந்து வருகிறது என்பதை நாளுக்கு நாள் உணர்ந்து வரும்போதும், அவர் உள்ளம் வேதனைப்படுகிறது."

இதற்குப் பரிகாரம், தனது பிரியமான கொள்கைகளையும் திட்டங்களையும் விட்டுத் தொலைப்பதுதான். யுத்தம் நடந்தால், அமைதி இழக்காமல் பின்செல்வது மிகவும் கஷ்டம். தவறுயினும் மேலே செல்லலாம் என்றுதான் தோன்றும். நமது தவறுகளை உணர்ந்து பகிரங்கமாக ஒப்புக் கொள்வதோ அல்லது அந்தத் தவறுகளைத் திருத்திக் கொள்வதோ கஷ்டமான காரியமாகத்தான் இருக்கும். ஆகவே இன்றைய நிலையில் ஒரு அதிசயம் விளைக்கும் தைரியம்தான் வேண்டும். நிதானமாகப் பின்வாங்கும் சாமர்த்தியம் வேண்டும். பின்வாங்குவதனால் சில நஷ்டங்கள் ஏற்படலாம். அதைத் தாங்கும் மனத்திடம் வேண்டும். அப்படிப் பின்வாங்குவதால் சில லாபங்களையும் அடைய லாம். அந்த லாபத்தைக் கொண்டு, அஹிம்சா முறை சோஷலிஸம் காந்தி மகானின் யோசனைக்கு உகந்தபடி அமைக்கலாம் என்று கூறுகிறார்.

இப்பொழுது நேருஜி அமைக்க விரும்பும் சோஷலிஸத்துக்கும் காந்திமகான், ராஜாஜி முதலியவர்கள் கருத்தில் கொண்டுள்ள சோஷலிஸத்துக்கும் என்ன வித்தி யாசம் என்ற ஐயம் எழலாம்.

காந்தி மகான், ராஜாஜி முதலிய பெரியோர்கள் தனி நபர் சுதந்திர உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுக்கிறார்கள். அவர்கள் கூறும் சோஷலிஸம் சட்டங்களின் பலாத்கார மின்றி ஒவ்வொரு தனி நபரும் தாமாகவே மனமுவந்து ஒப்புக் கொண்டு ஏற்றுக் கொள்ளும் சோஷலிஸமாகும்.

ஆனால் இன்று என்ன நடைபெறுகிறது? கேளிக்கைகளும் கூத்துக்களும் வைத்து, லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவழித்துக் கூட்டத்தைத் திரட்டி, ஒரு சோஷலிஸ தீர்மானமும், நிலப் பறிமுதல் செய்யும் தீர்மானமும் கொண்டுவரப் படுகின்றன. கட்சிக் கூட்டத்தில் தீர்மானித்ததைக் காங்கிரஸ் முன் வைத்து பெருவாரியான மக்கள் அங்கீகரித்து விட்டதாகச் சொல்லி 'ஜனநாயக சோஷலிஸம்' தயாரித்து விட்டோம் என்கிறார்கள். இது காந்தி மகான் காட்டிய ஜனநாயகமுமல்ல; சோஷலிஸமுமல்ல. இது பலாத்காரத்தின் அடிப்படையில் விளைந்த சோஷலிஸமாகும்.

தடியைக் கொண்டோ, துப்பாக்கியைக்கொண்டோ அடித்தால்தான் பலாத்காரம் என்பதல்ல. சும்மா தடி, துப்பாக்கியைக் காண்பித்து மிரட்டினாலே பலாத்காரம்தான். அதேபோல், சட்டசபையில் சட்டம் இயற்றி மக்களின் உரிமைகளைப் பறிமுதல் செய்வதும் பலாத்காரம்தான். அத்தகைய பலாத்காரம்தான் நடைபெற்று வருகிறது!

நில உச்சவரம்புச் சட்டம் கொண்டு வந்து, ஏதோ ஈடு அல்லாத நஷ்டஈடு பெயருக்குக் கொடுத்து, சட்டப்படி நடந்து கொண்டு விட்டோம் என்று சொல்லிக் கொள்வது காந்திமகான் வழி வந்த நாம் கடைப்பிடிக்கக் கூடிய வழியல்ல. காந்திமகானின் சோஷலிஸமுமல்ல.

காந்திமகான் தனிநபர்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுத்தவர். மக்களின் உணர்ச்சிகளை மாற்றி, அவர்கள் சம்மதத்தைப் பெற்றே சீர்திருத்தம் செய்வார். ஆனால் இன்று வெகு வேகமாகப் பல காரியங்களைச் சாதித்துவிட வேண்டும் என்று பலாத்காரத்துக்குச் சமமான வழிகளைத் தேடிக் காரியங்கள் நடத்தக் காங்கிரஸ் சர்க்கார் பார்க்கிறார்கள். இதன் காரணமாக, சுதந்திரத்துக்கு முந்தியிருந்த நாட்களைவிட, மக்களிடையே பயமும் பீதியும் அதிகரித்திருக்கின்றன. மக்கள் ஆத்ம பலம் இழந்திருக்கின்றனர். தைரியமும் ஆத்ம பலமும் இழந்த மக்கள் தொழில் துறையில் எவ்வளவு முன்னேறித்தான் என்ன பயன்?

காந்திமகான் ஆத்மாவின் சுதந்திரத்தைப் பேணி வந்தார். பாரத மக்கள் அடிமை நாளிலும் தைரியத்தோடு வாழச் செய்தார். தொழில், வேலை, உத்தியோகம் அவ்வளவையும் துறந்து தியாக வாழ்க்கை நடத்தி, காங்கிரஸ் கட்சிக்குப் பலம் தந்த காங்கிரஸ்காரர்கள், இன்று காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து பணம் சம்பாதிக்க, உத்தியோகம் தேட, செல்வாக்கைப் பெற வழி தேடுகிறார்கள். இதனாலேயே காங்கிரஸ் முன்போல் மக்கள் எழுச்சியைக் கிளப்பும் கட்சியாக இல்லை.

இதற்கும் ராஜாஜி பரிகாரம் கூறுகிறார். தொழில் இல்லாத காங்கிரஸ்காரர்கள் இருக்கக் கூடாது. ஒவ்வொருவரும் அவர்களுக்கென்று பிழைப்புக்கு வேலையுள்ளவர்களே, காங்கிரஸ்காரர்களாக இருக்க வேண்டும் என்று காங்கிரஸில் விதி முறைகளை மாற்ற வேண்டும் என்கிறார் ராஜாஜி. இதைக் காங்கிரஸ் தலைவர் தேபரிடம் ராஜாஜி தெரிவித்தார். இது நல்ல யோசனை என்று ஏற்றுக் கொண்டார். நிச்சயமாகக் காங்கிரஸ் தூய்மைப்படும் என்று ஒப்புக் கொண்டார். ஆனால் இதைச் செயல் முறையில் கொண்டுவரக் கஷ்டப்படும் என்றாராம்.

இதில் என்ன கஷ்டம் இருக்கமுடியும்? இப்பொழுது பதவியிலும் செல்வாக்கிலும் உள்ள ஒரு சில காங்கிரஸ்காரர்களின் அதிருப்திக்கும் கோபத்துக்கும் ஆளாக நேரிடும். அவ்வளவுதான். ஆனால் இந்தக் கோபத்துக்குப் பயப்படாமல் காரியத்தில் தைரியமாக இறங்கினால் காங்கிரஸ் தூய்மைப்படும். மக்களின் மதிப்பையும் செல்வாக்கையும் பெறும்.

ராஜாஜி தேச நிர்வாகத்துக்கும் காங்கிரஸ் கட்சிக்கும் நல்ல யோசனைகளைக் கூறியிருக்கிறார். இவற்றைக் கடைப்பிடித்தாலன்றி விமோசனமில்லை!

## சக்கரவர்த்தித் திருமகன்

பாரத நாட்டின் ஆண் பெண் அனைவருடைய உள்ளத்தையும் கவர்ந்த தெய்வப் பிறவிகள் ராமனும் சீதையும். அவர்கள் இந்த நாட்டு மக்களின் உள்ளத்தில் வீற்றிருக்கும் வரை நமது பண்பாட்டுக்கு அழிவில்லை. இதை உணர்ந்தே, தமிழ் மக்களின் பண்பைப் பேண, 'சக்கரவர்த்தித் திருமகனின்' கதையைத் தமக்கே உரிய எளிய இனிய தமிழில் வாரந்தோறும் கல்கி மூலம் சொல்லி வந்தார் ராஜாஜி. கல்கி படித்த நேயர்கள் தாங்கள் பெரிதும் பயனும் மகிழ்ச்சியும் அடைந்து வந்ததாக நமக்கும் ராஜாஜிக்கும் எழுதி வந்தார்கள்.

இந்தப் பலன் தமிழ் மக்கள் மட்டும் அடைந்தால் போதாது என்று ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்து வெளியிட்டார். அது வெளியான ஒருசில மாதங்களிலேயே 50,000 பிரதிகள் விற்பனையாகி விட்டன. இது ஒன்றே போதும், சக்கரவர்த்தித் திருமகனைப் பிறமொழி பேசும் மக்கள் எவ்வளவு ஆர்வத்துடன் படித்திருக்கின்றனர் என்பதை எடுத்துக்காட்ட. அதனால் கன்னடம், ஹிந்தி முதலிய மொழிகளிலும் வெளியாயிற்று. விரைவில் மலையாளம், தெலுங்கு மொழிகளிலும் வெளியாகும். இப்படிப் பாரத மக்கள் அனைவருடைய உள்ளத்தையும் கவர்ந்த 'சக்கரவர்த்தித் திருமகன்' எழுதிய ராஜாஜிக்குப் பாரத சர்க்காரின் சாஹித்திய அகாடமி 1958-ம் வருஷத்திய இலக்கியப் பரிசு வழங்கியிருக்கிறது. ராஜாஜிக்குப் பரிசளித்ததால் பரிசின் தகுதியும் உயர்ந்து விட்டது.




தேசத்தில் உணவுப் பற்றாக்குறை ஏற்படுவதற்குக் காரணம் மோசமான உணவு தான்யச் சேமிப்பு முறைதான். என்று அறிக்கை வெளியாகியிருக்கிறது.




சென்னை ராஜ்யப் பெண்மணிகள் மற்ற ராஜ்யத்தினருக்கு வழிகாட்டப் போகிறார்களாம்!



# அருள் வாக்கு

சகல ஜனங்களுக்கும் இன்பத்தைத் தருவது பரிபூரண சந்திரன். சந்திரமண்டலத்தில் அம்பிகை வசிக்கிறாள். சந்திரோதயத்தால் குழந்தைகள், ஸ்திரீகள், விருத்தர்கள் முதலிய எல்லோருக்கும் மகிழ்ச்சி உண்டாகிறது.

நிலாச் சாப்பாடு, பாட்டுக் கச்சேரி முதலிய ஆனந்தமான காரியங்களை அப்பொழுது அநுபவிக்கின்றனர். அந்தகாரத்தைச் சூரியன், சந்திரன் இருவரும் போக்குகிறார்கள். சூரியன் வெப்பத்துடன் இருளை நீக்குகிறான். சந்திரன் ஒளியுடன் குளுமையைத் தருகிறான். அதுபோல் அம்பிகையின் கிருபை மனத்தைக் குளிர்வித்து அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்கிறது. இந்தச் சரீரத்துக்கு ஒரு தாய் இருக்கிறாள். பசி, கஷ்டம் வரும் சமயத்தில் உடனே தாயாரை நினைத்துக் கொண்டு ஓடுவோம். கருணையே உருவான தாயாரை நினைக்கும்பொழுதே ஆவல் உண்டாகிறது. இந்தப் பேராவல் பசுக்களிடத்தில் அதிகமாக இருக்கிறது. கன்றுக்குட்டி, "அம்மா!" என்று பிரேமையுடன் கூப்பிடுவதைப் பார்த்துத்தான் மனிதர்கள் தாயாரை "அம்மா" என்று கூப்பிட ஆரம்பித்தார்கள் என்று தோன்றுகிறது. பசுவின் கன்று எவ்வாறு மனம் உருகி "அம்மா!" என்று கதறுகிறதோ, அவ்வாறு லோக ஜனனியான அம்பிகையிடம் மனம் கசிந்து உருகிப் பிரார்த்திக்க வேண்டும். அம்பிகையின் அருள் எப்படிப்பட்டவனையும் கைதூக்கி விடும். அவளைப் "பரதேவதை" என்று வேதம் கூறுகிறது. 'தாயாரைத் தெய்வமாக நினை' என்று சொல்லுவதால் அவ்வாறு நினைக்க முடியும் என்று தெரிகிறது. அதையே திருப்பித் தெய்வத்தைத் தாயாக நினைத்து பக்தி செய்வதுதான் அம்பிகையின் தியானம்.

கிருஷ்ணனை அர்ஜுனன் நண்பனாகப் பாவித்தான். யசோதை கண்ணனைக் குழந்தையாகச் சீராட்டினாள். ருக்மிணி, சத்யபாமை இருவரும் பர்த்தாவாக நினைத்து வணங்கினார்கள். நாம் எல்லோரும் தேவியின் குழந்தைகளானதால் பரதேவதையைத் தாயாக நினைத்துப் பிரார்த்தனை செய்தால் அவ்வாறே தடையின்றி அருள் புரிவாள். எந்த ரூபமாகப் பாவிக்கிறோமோ அவ்வாறே அருள்பாலிப்பாள். அம்பிகை ஆராதனை பண்ணி எண்ணற்ற மகாபுருஷர்கள் அருளைப் பெற்றிருக்கின்றனர்.

அம்பிகையை ஏகாந்தமாக ஏகாக்கிர சித்தத்துடன் உபாசிப்பவனுக்கு முதலில் புத்தி உண்டாகும். ஸரஸ்வதியின் கருணை உண்டாகி வித்தைகள் அனைத்தும் நிறைந்தவனாக இருப்பான். பிறகு லக்ஷ்மி கடாக்ஷம் உண்டாகிக் குறைவற்ற சம்பத்தை அடைவான்.

விவாக சமயத்தில் அம்பாளை அவசியம் ஆராதிக்க வேண்டும். ருக்மிணி கிருஷ்ணனைப் பர்த்தாவாக அடைய எண்ணி, விடாமல் கௌரி பூஜை பண்ணி அந்தப் பாக்கியத்தை அடைந்தாள்.

ஸரஸ்வதி, லக்ஷ்மி பூஜைகளைச் செய்து அடையக் கூடாதா? ஏன் அம்பிகையைப் பூஜித்தாள்? அதற்குக் காரணம் என்னவென்றால் விவாகமாகாத கன்னிகைகள் திருமணம் முடிந்த பின்பு பாதிவிரத்தியத்துடன் இருக்க வேண்டும். பர்த்தா எப்படிப்பட்டவனோ அதை அநுசரித்து நடக்க வேண்டும். இதற்குத் திடமான சித்தம் வேண்டும். அப்படி இருப்பதற்கு யார் பதிவிரதையோ, யார் பாதிவிரத்தியத்தையே உருவமாகக் கொண்டவளோ அந்த தேவியைப் பூஜித்தால்தான் அப்படி இருக்க முடியும். உத்திர தேசத்திலும் ஆந்திர தேசத்திலும் கன்னிகைகள் கௌரீ பூஜை செய்யும் சம்பிரதாயம் இருக்கிறது.

அம்பாளுக்கு சதியென்று பெயர். தக்ஷனுடைய பெண்ணாக ஆவிர்ப்பவித்த பொழுது யாகத்தில் சிவ தூஷணையைக் கேட்டதால் தன் சரீரத்தை அக்னியில் விட்டுத் தியாகம் பண்ணி ஹிமவானுடைய புத்திரியாக அவதரித்து மீண்டும் அதே பரமசிவனை அடையக் கடும் தவம் பண்ணி, அந்தப் பரமசிவனையே அடைந்த சதியைப் பூஜித்தால் என்றும் பதிவிரதையாக இருக்கும் அநுக்கிரஹம் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. லக்ஷ்மி பதிவிரதையாக இருப்பது ஒரு விசேஷம் இல்லை. அழகு, அலங்காரம் முதலிய குணங்களை உடையவர் மகாவிஷ்ணு. அப்பேர்ப்பட்ட பதியினிடத்தில் பாதிவிரத்தியமுடையவளாக இருப்பது ஒரு பிரமாதமல்ல. அம்பிகையினுடைய பர்த்தா எப்படிப்பட்டவர்? மயானத்திலுள்ள பஸ்மத்தை உடலெல்லாம் பூசிக்கொண்டு ஜடாதாரியாய், பாம்பை ஆபரணமாக உடையவர். கையில் கபாலத்தை ஏந்தி பிக்ஷாடன மூர்த்தியாக விளங்குபவர். உடலில் யானைத் தோலைப் போர்த்திக் கொண்டு கோரத் தாண்டவம் புரிகிறவர்.

இப்பேர்ப்பட்டவரைப் புருஷனாக அடைந்து பாதிவிரத்தியத்தை அநுஷ்டித்து வரும் ஜகன்மாதாவின் சரண கமலங்களை வணங்கினால் எந்தக் காலத்திலும் மகத்தான சிரேயஸை அடையலாம்.

ஸ்ரீ சங்கராச்சாரியார் • காஞ்சி காமகோடி பீடம் •

# இசைக் கலைஞருக்குப் பாராட்டு

ரஜனி

— கொழும்பு, ஜனவரி, 18உ

சென்னையில் தமிழிசைச் சங்கத்தாரால் அண்ணாமலை மன்றத்தில் நடத்தப்பட்ட இசை விழாவில் கலந்துகொண்டுவிட்டு இலங்கை திரும்பியுள்ள யாழ்ப்பாணம் தவில் வித்துவான் திரு தக்ஷிணாமூர்த்திக்கு யாழ்ப்பாணம் இசையாளர் சங்கத்தினர் "லயஞான குபேர பூபதி" என்ற பட்டத்தை வழங்கிக் கௌரவித்திருக்கிறார்கள். இந்த வைபவத்துக்கு வடமாகாண வித்தியாதிகாரி திரு யூ. சோமசேகரம் தலைமை வகித்துப் பேசுகையில், சேய்நாடாகிய ஈழத்திலிருந்து ஒரு வித்துவான் தாய்நாடாகிய இந்தியாவுக்குச் சென்று வெற்றிக்கொடி நாட்டிவிட்டு வந்திருப்பது தங்களுக்குப் பெருமையளிப்பதாயும் இதற்காக ஈழத்தமிழர்கள் அனைவரும் அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்களென்றும் கூறினார். இலங்கையில் கலைஞர்களைப் போற்றிப் பாராட்டும் பண்பு அதிகரிக்க வேண்டுமென்றும் அப்போதுதான் கலைகள் வளருமென்றும் அவர் தெரிவித்துக் கொண்டார்.

சென்ற வருடத்தைப் போலவே இவ்வருடமும் கொழும்பு சைவ மங்கையர் கழகத்தைச்சேர்ந்த மாணவிகள் அடங்கிய ஒரு இசைக்கோஷ்டி சென்னை இசை விழாவில் வெற்றிகரமாக கலந்துகொண்டுவிட்டுத் திரும்பியிருக்கிறது. இவர்கள் சென்னை விழாவில் கலந்து கொள்ளுவது இது இரண்டாவது தடவையாகும். இயல் இசைக் கலைகளுக்குச் சைவ மங்கையர் கழகம் சென்ற பல ஆண்டுகளாக ஆற்றி வரும் அரும் பணி யாவரும் அறிந்ததே.

## மிலேச்சத்தனமான தாக்குதல்

பூசலாவைப் பகுதியிலுள்ள வவ்வாப்பிட்டி என்ற ஒரு தோட்டத்தில் இவ்வாரம் போலீஸார் தொழிலாளர்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்ததில் 11 தொழிலாளர்கள் காயமடைந்து ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருப்பதாயும் அவர்களில் ஒருவரது நிலைமை கவலைக்கிடமாக இருப்பதாயும் தகவல் கிடைத்திருக்கிறது. போலீஸார் குடிபோதையில் தொழிலாளர் வசிக்குமிடத்தில் பிரவேசித்து நிறைமாத கர்ப்பிணிகளைக்கூட வெளியே இழுத்துப் போட்டு மிலேச்சத்தனமாகத் தாக்கியதாய்க் காங்கிரஸ் தலைவர்கள் புகார் செய்கிறார்கள். இந்தத் தோட்டத்தில் தொண்டைமான் தலைமையிலுள்ள தொழிலாளர் காங்கிரசும் எதிர்க்கட்சித் தலைவரான டாக்டர் என். எம். பெரைரா என்பவர் தலைமையில் இயங்கும் இன்னொரு தொழிலாளர் யூனியனும் செயல்பட்டு வருகின்றன. சமீபத்தில் பொதுத் தேர்தல் நடைபெறக் கூடுமென்ற எண்ணத்தில் பெரைராவின் யூனியன் சென்ற சில மாதங்களாகத் தனது திருஷ்டியைத் தோட்டங்களின் பக்கம் அதிகம் திருப்பியிருக்கிறது.

வவ்வாப்பிட்டித் தோட்டத்தில் இரு போட்டி தொழிலாளர் யூனியன்களுக்கிடையில் 'புகைச்சல்' இருந்து வந்து அது குழப்பத்தில் முடிந்திருக்க வேண்டுமென்றும் குழப்பத்தை அடக்கவே போலீஸார் தலையிட்டுத் துப்பாக்கிப் பிரயோகம் செய்திருக்க வேண்டுமென்றும் தெரிய வருகிறது. இதுமாதிரியான சந்தர்ப்பங்களில் போலீஸார் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதற்கு போலீஸாருக்கும் தோட்ட முதலாளிகளுக்கும் தொழிலாளர் யூனியன்களுக்கு மிடையில் ஏற்பட்ட முக்கூட்டு "கனவான்" ஒப்பந்தம் ஒன்று இருக்கிறது. அமைதிக்குப் பங்கம் விளையும் போலத் தோன்றினால் அருகிலுள்ள உயர்தரப் போலீஸ் அதிகாரி தோட்டதுப்பிரண்டையும் சம்பந்தப்பட்ட தொழிலாளர் யூனியன் பிரதிநிதிகளையும் அழைத்துப் பேசிச் சமரசம் செய்ய முயல வேண்டுமென்று இந்த ஒப்பந்தம் கூறுகிறது. இதற்கு மாறாக வவ்வாப்பிட்டி தோட்ட விஷயத்தில் காங்கிரசுக்கு எவ்விதத் தகவலும் கொடுக்காமலும் சமரசத்துக்கு முயற்சி செய்யாமலும் போலீஸார் தலையிட்டுத் துப்பாக்கிப் பிரயோகம் செய்தது அத்துமீறிய அடாத செயலென்று காங்கிரஸ் வன்மையாகக்கண்டித்தது. இது சம்பந்தமாக ஒரு பகிரங்க விசாரணை நடத்தவேண்டுமென்று கோரியிருக்கிறது.

பொங்கல் திருநாளையொட்டி நண்பர்களும் அன்பர்களும் அனுப்பிய வாழ்த்துகளுக்கு என் நன்றி. எல்லாருக்கும் கடிதம் எழுதி மகிழ்வதற்கு என் உடல்நிலை இடம் தரவில்லை. இதையே கடிதமாக ஒப்புக் கொள்ளும்படி வணக்கத்துடன் கேட்டுக் கொள்கிறேன்.

இராஜகோபாலாச்சாரி

## NEWS OF THE INDUSTRY





இந்தியாவில் தயாரிக்கப்பட்ட அழகு சாதனங்கள் இப்பொழுது மேல் நாடுகளில் வெகுவாகப் பாராட்டப்படுகின்றன.

இங்கிலாந்திலிருந்து பிரசுரிக்கப்படும் "சோப்ஸ், பேர்பியூமர்ஸ் & காஸ்மேடிக்ஸ்" என்ற பத்திரிகையில் எங்கள் தயாரிப்பான "ஸான்டால்" "ஸான்டல்வுட்" முகப் பவுடர்களை வெகுவாகப் புகழ்ந்து எழுதியதை அப்படியே இங்கு பிரசுரிப்பதில் பெருமிதமடைகிறோம்.

மேல்நாட்டு பெண்மணிகள் எங்கள் தயாரிப்புகளின் அபூர்வ குணங்களை மிகவும் பாராட்டுகிறார்கள்.

**தரத்தையே பெரிதாகக் கருதுவோர்கள்**

# டி. எஸ். ஆர்.

**தயாரிப்புகளையே உபயோகிக்கிறார்கள்**

**T.S.R. of Kumbakonam**

Last year we had the pleasure of receiving trial samples of their Sandalwood Face Powder from T.S.R. & Company, manufacturing perfumers, of Post Box 24, Kumbakonam, South India. As a result of our comments, the trial formula has been slightly revised. The sandalwood used in this powder is now effectively micronised, at which fine particle size it becomes smooth, adherent and very pleasant to touch.

We illustrate below T.S.R. & Company's new Face Powder and Talcum Powder, both based on this finely divided sandalwood. The perfuming of the products has been ably accomplished, with the result that the sandalwood-type odour is well rounded and very persistent. Further details may be had direct from the makers.

**Packaging for Men**

A new luxury range of men's toilet preparations was introduced in July by Cyclax of London, under the style o



# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

66

உயிரின் நிலையாமையையும் வாழ்க்கையில் அடையும் செல்வத்தின் நிலையாமையையும் விளக்கிச் சொல்லுகிறார் முனிவர் :

கூத்தாட்டு அவைக்குழாத்து
அற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந்
தற்று

ஒரு தெருக்கூத்தைப் பார்க்க மக்கள் திரளாக வந்து தெருவில் கூடுகிறார்கள். இரவு வெகு நேரம் தெரு கலகல என்று நிறைந்து விளங்குகிறது. ஆட்டம் முடிந்து போய் மறு நாட் காலை அந்தத் தெருவில் ஒன்றும் இராது. இதைப்போல் செல்வம் வந்து கூடுவதும் மறைந்து போவதும்.

சிறு கிராமத்தில் இரவில் தீவட்டியும் மக்கள் கூட்டமும் கூத்தும் பாட்டும் கூடிய தெருக்கூத்தைப் பார்த்து விட்டு மறுநாட் காலை எல்லாம் எங்கோ மறைந்து போய், வெறும் புழுதித் தரையைப் பார்த்தவர்களுக்கு உவமையின் வேகம் விளங்கும்.

விளிதல்-முடிதல்.

இருந்தபொழுதும், அடங்கெழில் சம்பத்தெல்லாம் கூத்தாட்டத்தைப் போன்றதேயாகும். அந்தச் செல்வமும் சம்பத்தும் திடீர் என்று மறைந்து போவதும், கூத்தாட்டத்தின் போக்கேயாகும்.

* * *

நாள்என ஒன்றுபோல்
காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப்
பெறின்.

சூரியோதயம் மிக அழகாகத் தரிசனம் தருகிறது. அதைக் கண்டு உள்ளத்தில் மகிழ்ச்சி உண்டாகிறது. ஆனால் உண்மை என்ன? உன் ஆயுளில் ஒரு நாள் தீர்ந்தது. இதைத்தான் சூரியன் உனக்குச் சொல்லுகிறான். வாளால் உயிரைக் காலமானது ஈர்க்கிறது. நாள் என்கிற காலப் பகுதி அந்த ஈர்தலின் அளவு—அவ்வளவே.

ஈர்தல்—உறிஞ்சி விடுதல்.

இருளைத் தீர்த்து மகிழ்ச்சிக்குரிய பொருள் போல் ஒவ்வொரு நாளும் உதயமாகிறது. ஆனால் அது உன் ஆயுளை அறுக்கும் வாள் என்று உணர்வாய்.

நாள் என்பது ஒரு கால வரையளவு. அது ஒரு பொருள் அல்ல. அதன் தன்மை மரத்தை நிற்காமல் அறுத்துக் கொண்டே போகும் கருணையற்ற ஒரு வாளின் தன்மை. ஆயுளை நாள் நாளாக அறுக்கிறது காலம்.

* * *

ஆனபடியால் செய்ய வேண்டிய நற்கருமத்தை இப்போதே செய். பிறகு நாக்குக் குழறி மரண விக்கல் எழுந்து ஒன்றும் செய்ய முடியாமல் போகும்.

நாச்செற்று விக்குள்மேல்
வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப்
படும்.

நாச்செற்று - நா வழங்காமல் செயலற்றுப் போய். மேற்சென்று செய்யப்படும் - மேல் விழுந்து விரைந்து செய்ய வேண்டும்.

மரணம் எப்போது வரும் என்று சொல்வதற்கில்லை. நல்லது செய்வதற்குத் தாமதம் செய்யாதே—என்கிறார்.

# சோக்ரதர் சம்வாதங்கள்

க. சந்தானம்

## 2. முதுமையும் வறுமையும்

சோக்ரதர் க்ளக்கோனுடு பைரேசத்தில் தெய்வத்தை வழிபடுவதற்கும், அங்கு நடைபெறும் விழா வைபவத்தைக் காண்பதற்கும் சென்றார். அதன் விமரிசையான ஊர்வலத்தைக் கண்டு மகிழ்ந்து, பூஜை செய்து ஆதென்ஸ் நகருக்குத் திரும்பினார். வழியில் ஒரு சேவகன் ஓடி வந்து உடையைப் பற்றி நிறுத்தினான்.

"பொலிமார்க்கேசர் உங்களைச் சற்று இங்கு காத்திருக்க வேண்டுகிறார்" என்றான்.

சோக்ரதர் திரும்பிப் பார்த்து "உன்னுடைய எஜமான் எங்கே?" என்று வினவினார்.

"சிறிது பொறுத்தால், இதோ வந்துவிடுவார்" என்று கூறினான் சேவகன்.

சில நிமிஷத்தில் பொலிமார்க்கேசனும், அவனுடன் க்ளக்கோன் சகோதரன் ஆதிமந்தேசனும், நிசேசரேசனும் மற்றும் பலரும் வந்து சேர்ந்தனர்.

பொலிமார்க்கேசன் கூறினான்: "தோழரும் நீங்களும் நகருக்குத் திரும்புவது போல் தோன்றுகிறதே, சோக்ரதரே!"

"உனது ஊகம் தவறல்ல" என்றார் சோக்ரதர்.

"எங்கள் கூட்டத்தில் எத்தனை பேர்கள் என்று பார்த்தீர்களா?" என்று வினவினான்.

"பார்த்தேன்" என்றார்.

"நீங்கள் இருவரும் எங்களை விடப் பலசாலிகளா? இல்லையேல் எங்களோடு இருக்க வேண்டியதுதான்" என்று சிரித்தான்.

"வேறுவழியில்லையா? எங்களைப் போக விடுமாறு உனது சம்மதத்தைப் பெறமுடியாதோ?" என்று வினவினார் சோக்ரதர்.

"நாங்கள் அதற்குச் சம்மதியோம்" என்று பொலிமார்க்கேசன் கூறிய பொழுது ஆதிமந்தேசன் அன்றிரவு நடக்கப்போகும் தீவட்டியுடன் குதிரைப் பந்தய ஓட்டத்தைப் பற்றிச் சொல்லிச் சோக்ரதர் சம்மதத்தைப் பெற்று அனைவரும் பொலிமார்க்கேசனின் வீட்டுக்குச் சென்றனர். அங்கே அவனது சகோதரர்கள் லயேசனும், எதிதாமேசனும், சால்சிடோனைச் சேர்ந்த தரசிமகேசனும், கார்மந்திதேசனும், களித்தப்பனும் இருந்தனர். பொலிமார்க்கேசனுடைய தந்தை கபாலேசர் ஓர் மெத்தை நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். அவர் மிகக் கிழவர். தெய்வ பூஜையிலிருந்து வந்திருந்ததால் தலையில் ஓர் பூமாலை அணிந்திருந்தார். சோக்ரதரைக் கண்டு நமஸ்கரித்து ஆவலுடன் அவர் கூறலானார்:

"சோக்ரதரே! இப்பொழுதெல்லாம் என்னை நீங்கள் பார்க்க வருவதில்லை. எனக்குச் சக்தியிருந்தால், நானே வந்து உங்களைக் கண்டிருப்பேன். ஆனால் என் வயதில் நகருக்குச் செல்ல முடியாது. ஆதலால் நீங்கள்தான் இங்கு அடிக்கடி வரவேண்டும். தேகத்தின் இன்பங்கள் குன்றவே, சாது சம்வாதத்தின் ஆனந்தம் அதிகரிக்கிறது. ஆதலால், என் வேண்டுகோளைப் புறக்கணிக்காமல், என் வீட்டை உங்களுடையதாகப் பாவித்து, இவ் வாலிபர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும். நாம் பழந் தோழர்கள். என் வீட்டில் இருப்பதில் எவ்விதக் கூச்சமும் இருக்கலாகாது" என்றார் கபாலேசர்.

சோக்ரதர் பதிலாக "முதியோரின் சம்வாதத்தை விட நான் அதிகம் விரும்புவது வேறொன்றுமில்லை. ஏனெனில் நான் செல்லவேண்டிய வழியில் அவர்கள் ஏற்கனவே பிரயாணம் செய்திருக்கின்றனர். அவ்வழி சுகமாகவும், எளிதாகவும் இருக்கிறதா அல்லது கரடுமுரடாகவும், கஷ்டமாகவும் இருக்கிறதா என்று நான் அறிய வேண்டும். நீங்கள் முதுமையின் எல்லையை நெருங்கி யிருப்பதால், இறுதிக் காலத்தில் வாழ்க்கை அதிகப் பாரமாகி விடுகிறதா என்று வினவ விரும்புகிறேன்" என்றார். "எனது உணர்ச்சியை உனக்குக் கூறுவேன்" என்று கபாலேசர் தொடங்கினார். "இனப்பறவைகள் ஒன்று கூடுவது போல், என்னைப் போன்ற கிழவர்களும் இங்கே அடிக்கடி கூடுகிறார்கள். அப்போதெல்லாம் அவர்கள் கூறுவது, 'என்னால் சாப்பிட முடியவில்லை. அந்தப் பானம் ஒத்துக் கொள்ளாது. இளவயதின் சுகங்களும், காதல்களும் மறைந்து விட்டன. வாழ்க்கை சாரமற்று விட்டது' என்பதே.

["கழிந்தது இளமை களியாக்கம் தீர்ந்தது
ஒழிந்தது காதல்மேல் ஊக்கம்—கழிந்து
கருநெறியும் சுந்தரர் காதல்நோய்-தீர்ந்தது
ஒருநெறியே சேர்ந்தது உளம்"

என்ற தண்டியலங்கார மேற்கோள் பாட்டு இக்கருத்தோடு ஒத்திருக்கிறது. தத்துவங்களும

எண்ணங்களும் ஞானப் பிரபஞ்சத்தை மூலமாகக் கொண்டிருப்பதால் உலகத்து மொழிகளில் எல்லாம் அதன் ஆணிவேர் வேறு வேறு உருவில் ஆழ்ந்து பரவியிருக்கிறது.]

சிலர் தங்களுடைய உறவினர்களின் ஏளனத்தையும், முதுமையின் இதர தீமைகளையும் பற்றிப் பரிதபிக்கின்றனர். ஆனால் அவர்களின் குறைகளை முதுமை மீது சுமத்துவது சரியென்று நான் எண்ணவில்லை. நமது புகழ்பெற்ற கவி சோபக்ளேசர் இதற்கு உரைத்த பதில் எனக்கு நன்கு நினைவிருக்கிறது. 'முதுமையில் உமது உணர்ச்சிகள் குன்றவில்லையா, நீங்கள் முன்போலவே இருக்கிறீர்களா' என்று வினவப்பட்ட பொழுது அவர் "வாயை மூடுங்கள். நீங்கள் குறிப்பிடும் பாசங்களிலிருந்து தப்பியதனால் மகிழ்ச்சியடைகிறேன். ஒரு பயங்கரமான, மதியில்லாத எஜமானின் சேவகத்திலிருந்து விடுதலை அடைந்தது போல் நிம்மதி அடைகிறேன்' என்று பதிலுரைத்தார். இம்மொழிகள் அடிக்கடி எனது ஞாபகத்துக்கு வருகின்றன. அச்சமயம் அவருக்கு இருந்த நிம்மதி எனக்கு இப்பொழுதிருக்கிறது. முதுமையில் சாந்தியும், பந்தங்களிலிருந்து விடுதலையும் கிட்டுகின்றன. பாசங்களின் பிடிப்பு தளரவே, ஒருவரல்ல, பல மதம் பிடித்த நாயகர்களிடமிருந்து தப்புகிறோம். சோக்ரதரே, உண்மையில் முதுமையைப் பற்றிய வருத்தங்களும், உறவினரின் ஏளனங்களைப் பற்றிய குறைகளும் வயதால் வருவனவல்ல. மனிதரின் மனோபாவங்களாலும் ஒழுக்கங்களாலும் உண்டாகின்றன. சாந்தமும் அகமகிழ்ச்சியுமுடையவனுக்கு வயதின் சுமை தோன்றாது. ஆனால் அதற்கு எதிரான மனப்பான்மையுள்ளோருக்கு யௌவனம், முதுமை இரண்டுமே பாரங்களாக இருக்கும்."

இதைக் கேட்டுச் சோக்ரதர் அவரைப் போற்றி மேலும் தூண்டுவதற்காகக் கூறினார்: "ஆம், கபாலேசரே! ஆயினும் நீங்கள் கூறுவதைப் பொதுவாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். முதுமையை நீங்கள் இப்படி இலேசாக வகிப்பதற்குக் காரணம் உங்கள் மனோபாவமல்ல, செல்வமே என்று எண்ணுவார்கள். பணத்தால் நல்ல வசதிகள் ஏற்படுவது உலகமறிந்த விஷயமல்லவா?"

"நீங்கள் கூறுவது சரியே" என்று அவர் பதிலுரைத்தார். "பொதுமக்கள் என் வாதத்தை ஏற்க மாட்டார்கள். செல்வத்தைப் பற்றி அவர்கள் சொல்வதிலும் சிறிது உண்மை இருக்கிறது. ஆனால் அவர்கள் நினைக்கும் அளவுக்கு இல்லை. சற்குணமுள்ள ஏழைக் கிழவனுக்கு முதுமை முற்றிலும் இலேசாக இராது. தீய தனவந்தனுக்கோ என்றும் மன அமைதி கிடையாது."

"கபாலேசரே! உமது செல்வம் சொந்தமாகச் சம்பாதித்ததா, அல்லது பிதுரார்ஜிதமா?" என்று சோக்ரதர் கேட்டார்.

அவர் பதிலுரைத்தார்: "சோக்ரதரே, என் செல்வத்தில் எவ்வளவு எனது சொந்த சம்பாத்தியமென்று தெரிய விரும்புகிறீர் அல்லவா? சொத்து சேகரிப்பதில், நான் எனது பாட்டனுக்கும், தந்தைக்கும் நடுவில் நிற்கிறேன். என் பாட்டனாரோ தமக்குக் கிடைத்த சொத்தைப் பன்மடங்கு பெருக்கினார். எனது தந்தை அதை இப்பொழுதிருப்பதைக் காட்டிலும் சுருக்கினார். எனக்குக் கிடைத்ததைவிட எனது குமாரர்களுக்குச் சிறிது அதிகம் வைத்துச்சென்றால்திருப்தி அடைவேன்."

'அதற்காகத்தான் வினவினேன்' என்றார் சோக்ரதர். "நீங்கள் பணத்தைப்பற்றி



அலட்சியமாக இருப்பதைக் கவனித்தேன். சொந்தமாகச் சம்பாதிக்காமல் சொத்து பெற்றவர்களின் அறிகுறி இது. தானாகப் பணம் சேர்த்தவர்களுக்குத் தங்கள் செல்வத்தின்மீதும், கவிகளுக்குத் தம் கவிதை மீதும் பெற்றோர்களுக்குத் தங்கள் மக்கள் மீதும் பற்று ஏற்பட்டுவிடுகின்றது. ஆதலால் அவர்களுடைய சகவாசம் விரும்பத் தக்கதல்ல. எப்பொழுதும் தங்கள் பணத்தைப் போற்றுவதைத் தவிர, வேறு எவ்வித சம்வாதத்தையும் அவர்கள் விரும்புவதில்லை."

"அது உண்மையே" என்றார் கபாலேசர். "அதைப்பற்றிச் சந்தேகமில்லை. ஆனால் ஒரு கேள்வி கேட்கலாமா? உங்களுடைய செல்வத்திலிருந்து நீங்கள்பெற்ற

நன்மைகளில் சிறந்தது யாது?" என்று வினவினார் சோக்ரதர்.

"அதனை நான் சொன்னால் மற்றவர் நம்ப மாட்டார்கள். சாவு நெருங்கும் பொழுது, முன்னிராத கவலைகளும், அச்சங்களும் மனத்தில் புகுந்து விடுகின்றன. நரகத்தின் துயரங்களை முன்னர் வெறும் கட்டுக் கதைகளாக எண்ணிப் பரிகசித்திருந்தவன், ஒரு கால் அவை உண்மையாக இருக்கலாமென்று நினைக்கிறான். முதுமையின் தளர்ச்சியாலோ, அந்திம காலத்தில் மனக்கண் கூர்மையாவதாலோ உலகின் இயல்பு தெளிவாகிறது. நடுக்கங்களும், தயக்கங்களும் அவனைச் சூழ்ந்து விடுகின்றன. தான் பிறருக்குச் செய்த தீங்குகளைச் சிந்திக்கத் தொடங்குகிறான். தனது குற்றங்களின் குவியலைக் கண்டு, தீய கனவு கண்ட குழந்தை தூக்கத்தில் கதறுவதுபோல் நடுங்குகிறான். தூய வாழ்க்கையுள்ள மனிதனுக்கோ பக்தி, முதுமையில் பணிவிடை செய்யும் சோதரியாகிறான். சான்றோனின் செல்வத்தின் முக்கிய பிரயோசனமென்னவெனில், வேண்டுமென்றோ, அறியாமலோ பிறரை வஞ்சிக்க அவசியம் ஏற்படுவதில்லை; வேறுலகு செல்லுங்கால் தெய்வங்களுக்கோ, மனிதர்களுக்கோ கடனாளியாகப் போக வேண்டியதில்லை. இதனால் அவனுக்கு மன அமைதி உண்டாகிறது. செல்வத்தின் பலன்களிலெல்லாம், இதுவே சிறந்தது என்பது எனது துணிபு!" என்றார்.*

"மிகவும் அழகாகப் பேசினீர்கள்" என்று சோக்ரதர் போற்றி மேலே கூறினார்: 'நீதி என்பது யாது? உண்மை பேசி, கடன்களைத் தீர்ப்பது மட்டும்தானா? இவற்றுக்குக்கூட விலக்குகளில்லையா? புத்தி சுவாதீனமுள்ள ஓர் நண்பன் என்னிடம் ஆயுதங்களை இருப்பு வைத்திருந்தால், அவன் மதி குலைந்த காலத்தில் திருப்பிக் கேட்டால் அவைகளைக் கொடுப்பது நியாயமாகுமா? அவ்விதமான மனிதனிடம் ஆயுதங்களைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்றோ, எப்பொழுதும் ஒளிக்காமல் உண்மை கூறவேண்டுமென்றோ எவரும் சொல்ல மாட்டார் அல்லவா?"

"தமக்குத் தெய்வ வழிபாடு" இருக்கிற தென்னும் சம்வாதத்தைத் தொடர்ந்து போலிமார்க்கேசர், அவருடைய நண்பர்கள் முதலியவரோடு நடத்துமாறும் கூறிவிட்டுக் கபாலேசர் போய் விட்டார்.

* "கற்றதனாற் கற்றபட ஒழுகச் செல்வந்தான் பெற்றதனாற் பெற்ற பயன்" என்னும் தமிழ் மறை இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

---

## சுடச் சுட ஒரு கப் டீ, சார்!



இது என்ன புது மோஸ்தர் மோட்டார் என்று யோசிக்கிறீர்களா? இன்னொரு தரம் உற்றுப் பாருங்கள். இப்போது தெரிகிறதா? ஆமாம், இந்தியத் தேநீர்ப்பானம் தயாரித்து வழங்கும் மோட்டார் இதுதான். பிரசாரத்துக்காகத் தேநீர் கெட்டில், தேநீர் கோப்பை, தட்டு வடிவத்தில்; பார்த்த மாத்திரத்தில், "சுடச் சுட ஒரு கப் தேநீர் சாப்பிட்டால் தேவலை" என்ற ஆர்வத்தை உண்டாக்கும் வண்ணம் தோற்றமளிக்கிறது. உள்ளே ஐந்து பேர்கள் தாராளமாக உட்காரலாம். 50 கப் தேநீர் பத்தே நிமிஷத்தில் தயார்செய்து அளிப்பதற்குவேண்டிய சாதனங்கள் செட்டாக இருக்கின்றன. முன் பக்கத்தில் ஒலிபெருக்கியும், மின்சாரத்துக்கென ஒரு சிறு டைனமோவும், திரைப்படக் காட்சிக்கும் கிராமபோன் இசை வழங்க வசதியும் பிரசாரத்துக்கு வேண்டிய எல்லா வசதிகளுடன் அமைக்கப்பட்டுள்ளது இம் மோட்டார். இது ஊர்ஊராகச் சுற்றித் தேநீர் மணம் குன்றாமல் எப்படித் தயாரிப்பது என்று சொல்லிக் கொடுக்கவும், தயாரித்துக் காட்டவும் உபயோகப்படுத்தப்படும். "தேயிலை போர்டு" என்ற ஸ்தாபனத்தில் தென் மண்டலத்துக்கு இது போல் ஐந்து அல்லது ஆறு மோட்டார்கள் மக்களிடையே தேநீர் அருந்தும் பழக்கத்தை உண்டாக்கத் தமிழ் நாடெங்கும் வேலை செய்யும். சோர்வை ஒழித்து உற்சாகத்தை அளிப்பது ஒரு கப் டீ என்பது உங்களுக்குத் தான் தெரியுமே! இந்த வண்டியை நீங்கள் எங்கேயாவது கண்டால் நிறுத்தித் தேநீர் எப்படித் தயாரித்தால் சுவையுடன் இருக்கும் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.




இன்ப உலகத்தில் சுற்றுப் பிரயாணம்!
Parle's
FRUIT DROPS
பார்லேயின்
ப்ரூட்
ட்ராப்ஸ்
பெப்பர்மிண்ட்
ஒரு
பாக்கெட்டிற்கு
ராப்பரில்
Parle's
மார்க்கு பார்த்து
வாங்குங்கள்
பார்லே ப்ராடக்ட்ஸ் மானுபு. கம்பெனி
பிரைவேட் லிட். பம்பாய்-24

பாகவதமாகிய

# பக்திவயல்

பௌராணிகர்

## 21. பிரஹ்லாத சரிதம்

காச்யப முனிவருக்குத் திதி என்ற மனைவியினிடம் ஹிரண்யாக்ஷன், ஹிரண்ய கசிபு என்று இரண்டு மைந்தர்கள் பிறந்தனர் என்று வராக அவதாரத்தை வர்ணிக்குங்கால் கூறினோம். ஹிரண்யகசிபுவையும் விஷ்ணுவே நரசிம்மனாய் வந்து வதம் செய்தார் என்று சுகர் பரீக்ஷித்திடம் உரைத்தார். "அனைவருக்கும் அன்பனாகி, வேற்றுமையே பாராட்டாமல் விளங்கும் விஷ்ணு, இந்திரனுடைய கட்சியில் சேர்ந்தவனைப்போல் எதற்காகத் திதியின் இரு மைந்தரையும் கொன்றார்?" என்று அரசன் முனிவரிடம் கேட்டான்.

அதற்குச் சுகர் பதில் கூறினார்:

"அரசே! நன்கு வினவினை. ஹரியின் கதைகள் அவருடைய தொண்டர்கள் பெருமையைப் பெருக்கிக் காட்டுகின்றன. பக்தியை வளர்க்கின்றன. ஆண்டவனுக்கு அனைவரும் ஒன்றே. தீயவரைத் தண்டிக்கவே தன் மாயையை ஆட்கொண்டு பல வேடம் பூண்டிருப்பார் பரமன். முக்குணங்கள் மாயையைச் சேர்ந்தவை. அவை மிகுந்தும் குறைந்தும் வரும். சத்வம் மேலிட்டபொழுது தேவரையும் ரஜஸ் பொங்கியபொழுது அரக்கரையும் தமஸ் ஏறுங்கால் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் தாங்கிநிற்பார். ஜீவனுக்கு உடலை அளிக்கக் கடவுள் எண்ணமுறுங்கால் ராஜஸம் ஓங்குகிறது; படைத்த பொருளுடன் லீலை செய்யுங்கால் ஸத்வம் மேலிடுகிறது; போதுமென்று துயிலுறுவது தாமசத்தின் தன்மையில் காலமென்பது படைப்பதற்கோர் கருவி. ஓயாது ஓடுமோர் விந்தை. பற்றளிக்கும் பிரகிருதிக்கும் பற்றில்லாப் புருஷனுக்கும் சேவகம் செய்து வருகிறது.

(இதைக் கபிலர் செய்த உபதேசத்தில் விவரித்தாகி விட்டது.)

ஸத்வம் மேலிடும் காலத்தில் கடவுள் தேவரைக் காத்து ராஜஸமும் தாமஸமும் மிகுந்த அரக்கரை அழிக்கும் தோற்றத்தைத் தருகிறார்.

இந்தத் தத்துவத்தை விளக்கவே, தருமபுத்திரர் செய்த ராஜசூய யாகத்தின் பொழுது நடந்ததோர் நிகழ்ச்சியைக் கேளாய். சேதி மன்னன் சிசுபாலன் யாகத்துக்கு எழுந்தருளிய கண்ணனைப் பலவாறு வைதான். கண்ணன் அவனைத் தன் சுதர்சனத்தால் கொன்றான். அப்பொழுது விழுந்த சிசுபாலனிடமிருந்து ஒரு ஜோதி வெளியேறிக் கண்ணனிடம் கலந்து கொண்டது. இந்த ஆச்சரியத்தைக் கண்ட தருமன், அருகில் இருந்த நாரதரிடம் அதன் காரணத்தைக் கேட்டான்.

"அசையா மனத்துடன் ஆராதனை செய்பவருக்கும் அகப்படாத பரம்பொருளை விரோதியான சிசுபாலன் அடைந்தது என்ன விந்தை! அச்சுதனை அவமதித்த வேனன் அழிந்துபோனான். சிசுபாலனும் தந்தவர்த்ரனும் பேசத் தெரிந்த நாள் முதல் கண்ணனை ஏசி வந்தனர். அவர்கள் நாவும் புண்ணாகவில்லை, அவர்கள் நரகத்திலும் விழவில்லை. இது எனக்கு விளங்கவில்லையே?" என்றான் தருமன்.

இந்தக் கேள்வியைக் கேட்டு மகிழ்ச்சி மிகுந்த நாரதர் பின்வரும் கதைகளைத் தருமனுக்குச் சொன்னார்.

"உடல் எய்துவதற்கு அவிவேகம் தான் காரணம். அவிவேகி 'நான்' என்றும் 'என்னுடையது' என்றும் வேறுபாட்டில் வேரூன்றிப் புகழ்வதையும், இகழ்வதையும், பெருமையையும், சிறுமையையும் அனுபவிக்கிறான். வசவைக் கேட்டு வருந்துகிறான். அபிமானத்துக்குக் காரணமான தேகம் மடியும் பொழுது மடிகிறான். ஆனால் தன்னை விட வேறில்லாது அனைவருக்கும் ஆன்மாவான கண்ணனுக்குத் தான் என்றும், மற்றவன் என்றும் வேற்றுமை ஏது? கொடியவரைத் தண்டித்தே கை தூக்க வந்த பரமன் தீங்கு இழைப்பான் என்பதும் உண்டோ?

ஆகையால் பகையுடனோ, அன்புடனோ, பயத்தோ, நட்பினாலோ, காமத்

திலோ, எவ்விதத்திலாவது மனத்தைக் கண்ணனிடம் செலுத்த வேண்டும். அவ்விதம் லயிப்பவன் கண்ணனைத் தவிர வேறொன்றையும் காண மாட்டான். பக்தனைவிடப் பகைவனே ஓயாது கண்ணனை எண்ணி நிற்பான். குளவியால் கூண்டில் அடைபட்ட புழு, வெறுப்புடன் குளவியையே எண்ணி எண்ணிக் குளவியைப் போல் மாறுகிறது. அவ்வாறே கண்ணனையே நினைத்துப்பாபங்களை அகற்றிஅவனை அடைவது அரிதன்று. பக்தி செய்து வரும் பாக்கியத்தைக் காமத்தாலும், பகையினாலும், பயத்தாலும், நட்பினாலும் மனத்தைக் கண்ணனிடம் செலுத்தப்பெற்றவர் பலர். காமத்தால் கோபிகள் கண்ணனிடம் மனத்தை இழந்தனர். பயத்தினால் கம்சன் கண்ணனை இடைவிடாது மனத்திலே எண்ணி வந்தான். சிசுபாலன் பகையுடன் ஓயாது சிந்தித்தான். ஆயர்பாடியில் குடியிருந்தவர்கள் சுற்றமென்ற முறையில் கண்ணனோடு கலந்து வாழ்ந்தனர். நீங்கள் (பாண்டவர்கள்) நட்பினால் கூடியிருக்கிறீர். என்னைப் போன்றவர்கள் பக்தி செய்து நினைவிலே நிறுத்துகிறோம். இவ்வைந்து வகையில் ஒன்றிலுமே வேனன் உட்படவில்லை. எவ்விதத்தாலாவது கண்ணனை மனத்தில் எண்ண வேண்டும் என்பதுதான் இன்றியமையாதது. தருமனே! சிசுபாலனும் தந்தவர்த்ரனும் ஸனகர் சாபத்தால் வைகுண்டத்திலிருந்து வீழ்ந்த விஷ்ணுவின் சேவகர் என்று அறிவாய்.



[இவ்வரலாற்றை வராக அவதாரத்தில் கூறியிருக்கிறோம்.]

''சபிக்கப்பட்ட இவ்விருவரும், முதல் பிறவியில் திதியின் மைந்தரான இரண்யாக்ஷனாகவும் இரண்யகசிபாகவும் தோன்றினார்கள். வராக ரூபம் எடுத்து ஹிரண்யாக்ஷனை ஹரி கொன்றார். விஷ்ணு பக்தனான தன் மகன் பிரகலாதனைப் பகைத்த ஹிரண்யகசிபுவை நரசிம்ம ரூபம் எடுத்துக் கொன்றார்.

இரண்டாவது ஜன்மத்தில் ராவணனாகவும் கும்பகர்ணனாகவும் இவர்கள் பிறந்தனர். ராமர் என்ற அவதாரத்தில் விஷ்ணு இவ்விருவரையும் மாய்த்தார். சிசுபாலன், தந்தவர்த்ரன் என்பது இவர்களுடைய மூன்றாவது பிறப்பு. இத்துடன் அவர்களுக்குச் சாபம் தீர்ந்தது. அவர்கள் மறுபடியும் அனந்தனுடன் கலந்து தங்களுடைய உண்மையான பதவியை அடைந்து விட்டார்கள்.''

நாரதர் உரைத்ததைக் கேட்ட தருமன் ''தன் மகன் பிரஹ்லாதனிடம் ஹிரண்ய கசிபுவுக்கு வெறுப்பு வந்தது எக்காரணம் பற்றி? பிரஹ்லாதனுக்கு விஷ்ணுவினிடம் தனிமையான பக்தி எவ்விதம் தோன்றியது?'' என்று வினவினார்.

நாரதர் ஹிரண்ய கசிபுவின்வரலாற்றை விவரிக்கலானார்.

''வராக வேடம் பூண்ட விஷ்ணு, தம் உடன் பிறந்தோனாகிய ஹிரண்யாக்ஷனைக் கொன்று விட்டார் என்று கேட்ட ஹிரண்யகசிபு கோபத்தாலும் துயரத்தாலும் மாறி மாறித் தவித்தான். உதடு துடிக்கக் கண் சிவந்து பொறி பறந்து பரவிய புகையால் வானமே இருண்டதெனத் தோன்ற, சூலத்தை மேல் தூக்கித் தன் இனத்தவரை நோக்கி அலறினான். ''கூடி இருக்கும் அரக்கரே! கேளுங்கள். என் கட்டளையைக் கேட்டுத் தாமதமின்றிச் செய்யுங்கள், நான் சொல்வதை. நமக்கு எதிரிகளான தேவர் ஹரியைத் தூண்டி அவரைக் கொண்டு என் அருமைத் தம்பியைக் கொல்லச் செய்தனர். ஹரியும் தன்னுடைய தாரதம்யம் இல்லாத் தன்மையை மறந்து பன்றிவேடம் கொண்டு சதியால் வதம் செய்தான். உரமற்ற மனத்தவன். துதி செய்பவர் பின் செல்லும் சிறுமைத்தனம் படைத்தவன். அவனை என் சூலத்தால் மாய்ப்பேன். அவன் ரத்தமே ரத்தப் பிரியனான என் தம்பிக்குத் தர்ப்பணமாகும். அவன் மடிந்ததும் வேர் அறுந்த மரமென தேவர்கள் சாய்ந்து விடுவார்கள். நீங்கள் மண்ணுலகத்துக்குச் சென்று தவம் செய்வோரையும், வேள்விகளை வளர்ப்போரையும், மறை ஓதுவோரையும், விரதங்கள் நடத்துவோரையும் அழித்து விடுங்கள். இவைதான் விஷ்ணுவுக்கு ஆதாரங்கள். அழிக அந்தணரும், பசுவும் சாதியும் சாத்திரமும். நெருப்புக்கு இரையாக்குங்கள், வெட்டி வீழ்த்துங்கள் இவர்களையெல்லாம்!''

மன்னன் ஆணையை ஆதரவுடன் ஏற்றுக்கொண்டு, அரக்கர்கள் அனைவரை

யும் துன்புறுத்தலாயினர். நாட்டையும் நகரத்தையும், பசுமடத்தையும், பூங்காவையும், வாயிலையும், வீட்டையும் அழித்தார்கள். சிலர் பாலங்களை உடைத்துக் கோட்டைகளைத் தகர்த்தனர். சிலர் கனியால் பசி நீக்கும் மரங்களை வெட்டினர். சிலர் பந்தங்களால் கூரையை எரித்தனர். விண்ணுலகை விட்டகன்று தேவரும் புவிமீது கண் காணாது பதுங்கி வாழ்ந்தனர்.

தம்பிக்கு எள்ளும் நீரும் இறைத்து விட்டு ஹிரண்யகசிபு மகனைப் பறி கொடுத்து வருந்தி நிற்கும் தன் தாய்க்கும் தம்பியின் மனைவிக்கும், மைந்தருக்கும் ஆறுதல் கூறினான்.

“தாயே! வீரத்துடன் போரில் மடிந்தவனைக் குறித்து வருந்தலாகாது. தண்ணீர்ப் பந்தலில் சந்திக்கும் வழிப்போக்கரைப் போல் நாம் கூடுகிறோம்; சில காலத்துக்குப் பின் பிரிகிறோம். இது விதியின் விளையாட்டு. ஆன்மாவுக்கு அழிவில்லை. உடலோடு பற்றில்லை. மதியீனர் உடலையே தான் என்று எண்ணி வீணாகத் துன்புறுகின்றனர். ஒரு கதை சொல்கிறேன், கேளுங்கள்.

உசீநரம் என்ற நாட்டை ஸுயக்ஞன் என்ற அரசன் ஆண்டு வந்தான். ஒரு சமயம் அவனுக்கும் சில எதிரிகளுக்கும் போர் நடந்தது. எதிரிகளால் கொல்லப்பட்டுப் போர்க்களத்தில் விழுந்து விட்டான். உதிரம் பெருகித் தலைவிரித்துக் கவசம் சிதறுண்டு மார்பில் ஊடுருவிப் பாய்ந்த அம்புடன் அலங்கோலமாய்க் கிடக்கும் மன்னவனை மனைவியரும்சுற்றத்தாரும் சூழ்ந்து கொண்டு வாய் விட்டு அழுதார்கள். “அழிந்தோமே நாங்கள்” என்று மார்பில் அடித்துக் கொண்டு அரசியர் கால் பக்கம்சாய்ந்தனர். “கண் காணாத இடத்துக்குப் போய் விட்டீரே! காத்து வரும் வேந்தனே, துயருக்குத் தாண்டுகோலென்றுளீரே! சேவையிலே களிப்புறும் அன்பனை விட்டகன்று எவ்வாறு உயிர் வாழ்வோம்? தான் பற்றித் தவித்திருக்கும் எங்களையும் சென்ற விடத்துக்கு அழையுங்கள்” என்று பலவாறு புலம்பினார்கள்.



மடிந்த மன்னவனின் சுற்றத்தார் படும் துயரைத் தெரிந்து பாலகன் உருவோடு யமதர்மன் அவ்விடம் வந்து அவர்களுக்கு உபதேசம் செய்தான்.

“வீட்டுக்குத் திரும்பியவன், வீட்டைக் காத்திருப்போரை எண்ணி வருந்துவதும் முதியவர்க்கு அழகோ? தாய் தந்தை இல்லாது என்னைப் போல் தனிமையிலே திரிபவரே துயரின்றி மேலானவர். கருவிலே காத்தவன் கொற்றவன். லீலையால் ஜீவரை ஆக்கியும் போக்கியும் பணி புரியும் பரமனே காக்கவும் வல்லவன். பாதையிலே நழுவிவிட்ட பண்டத்தைப் போஷித்து வீட்டிலே பூட்டி வைத்த செல்வத்தைச் சிதறடிக்கும் சக்தியைக் காண்கிறோம். மண்ணாலும், தண்ணாலும், தீயாலும் சேர்ந்த இச்சடலம் மாறுண்டு மாய்ந்து போகும்; ஆனால் கட்டையில் உள்ளிருக்கும் தீயைப் போலும், உடலிலே ஊசலாடும் காற்றைப் போலும், பண்டத்தோடு ஒட்டாத ஆகாயம் போலும் ஆன்மா தேகத்துடன் கூடியும் பற்றின்றித் தனிமையில் நிற்கின்றது. இதோ, புவிமீது கிடக்கின்றது அரசனின் உடல்! இதனுள் நின்று பேசியவனை யாராகிலும் கண்டதுண்டா? உள்ளிருப்பவன் உடலும் இல்லை, பிராணனும் இல்லை. பதினறு உறுப்போடு கலந்த லிங்க சரீரமும் இல்லை. இவையுடன் ஆன்மாவை ஒன்றெனக் கருதுவோர் துன்புறுவார். முக்குணங்கள் புலனோடு சேர்வதே துயரென்ற தோற்றம்; உண்மையை அறிந்தவர் நிலைப்பதை நினைத்தும் வருந்துவதில்லை, நீங்குவதை நினைத்தும் வருந்துவதில்லை.

வேடனொருவன், பறவைகள் கூட்டத்துக்குக் கூற்றமென வந்தவன், வலை விரித்துத் தந்திரத்தால் பறவைகளைப் பிடித்து வந்தான். ஊர்க்குருவிகள் இரண்டு, ஆணும் பெண்ணும் வலையருகில் பறந்து கொண்டிருக்கப் பெண் குருவி வலையில்விழுந்துவிட்டது. ஆண்குருவி பெண்ணை விடுவிக்க வழியின்றிப் பரிதவித்தது. “என்னை எண்ணி ஏங்கும் பெண்மணியை விதிதான் எக்கதிக்கு ஆளாக்குமோ? தனித்திருந்து என் செய்வேன்? அரையுடலைப் பறிகொடுத்த பாவியானேன், நானும் மடிந்து போய்ப் பேடையுடன் கூடப் போவேன். கூட்டிலே குஞ்சுகள் தாய் வரவுக்காகக் காத்



# தலை மாணவி - சுசீலா

செலவழிந்த சக்தியை அவளுக்கு திரும்பத்தந்து உதவும் சமையல் சாதனம் காமதேனு வனஸ்பதி

சுசீலா வகுப்பிலும், விளையாட்டிலும் எப்பொழுதும் முதல் வருபவள். தேக ஆரோக்கியம், புத்திசாலித்தனம் இரண்டும் உள்ளவள்; உற்சாகம், தெம்பு நிறைந்தவள்.

சுசீலாவின் இல்லத்தில் உபயோகிக்கப்படும் சமையல் சாதனம் காமதேனு வனஸ்பதி. கைபடாமல், சாஸ்திரீய முறையில் தயாரிக்கப்படும் காமதேனு வனஸ்பதி நெய்போன்றது. ஆனால் விலை குறைவானது. கண்பார்வைக்கு தேவையானதும், சரும உபாதைகளை போக்க வல்லதுமான வைடமின் 'A' கலக்கப்பட்டது.

36 பவுண்டு டின்களிலும் 10, 5, 2 பவுண்டு டின்களிலும் கிடைக்கும்

## காமதேனு - இல்லாள் கைகண்ட வனஸ்பதி




தயாரிப்பு:

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:

சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

HC-527




தேனாம்பேட்டையில் காங்கிரஸ் மைதானத்தில் நடந்து வரும் கண்காட்சியில் ப்ருக் பாண்ட் இந்தியா (பிரைவேட்) லிமிடெட் கம்பெனியின் நிலையத்தைச் சென்ற டிசம்பர் 21-ந் தேதி சென்னை மேயர் திரு கே. கமலக்கண்ணன் திறந்துவைத்தார். மேயரையும், அவருக்குப் பக்கத்தில் இத்தேயிலைக் கம்பெனியின் கிளை மானேஜர் கே. பி. தாமோதரனையும் காணலாம்.

---

திருக்கின்றனை'' என்று புலம்பிக்கொண்டிருக்கையில் அம்பினால் ஆண் குருவியையும் வேடன் கொன்றுவிட்டான். தன் சாவைப் பாராத பாமரப் பெண்களே! நூறாண்டு நாட்களெல்லாம் அழுது புரண்டாலும், மணாளன் மீளமாட்டான்'' என்று தத்துவத்தை எடுத்துரைத்தான் யமன்.

பாலகன் பேச்சைக் கேட்ட ஸுயக்ஞனின் சுற்றத்தார் வியந்து, வாழ்வெல்லாம் நிலையற்ற தோற்றம் என்று தெளிவுற்றனர். யமன் மறைந்தான். ஆகையால் நமக்கென்று வருந்துவதிலும் பயனில்லை; வேறொருவர்க்கு அழுவதிலும் மதியில்லை.''

மைந்தனின் மொழி கேட்ட தாயும் ஆறுதலை அடைந்தாள்.

ஹிரண்யகசிபு வெல்ல முடியாத வீரத்தையும், அழியாத ஆயுளையும் மூவுலகையும் அடக்கியாளும் பெருமையையும் பெற வேண்டி, மந்தர மலைச்சாரலில் கடுந்தவம் புரிந்தான். கால் கட்டை விரலைக் கீழே ஊன்றிக் கைகளை மேலே தூக்கி அண்ணாந்து நோக்கி நின்றான். கற்பத்தின் கடைசியில் காணும் கதிரவனின் கிரணங்களென விரிந்த செஞ்சடையுடன் காட்சி அளித்தான். ஹிரண்யன் தவத்தில் ஆழ்ந்தான் என்றறிந்த தேவர்கள் தைரியமாய் வீடு திரும்பினர். ஆனால் அவனுடைய தவத்தின் தீவிரத்தால் தலையினின்று புகை கிளம்பி மூவுலகையும் சூழ்ந்து கொண்டது. ஆறும் கடலும் கொந்தளித்தன. மலையோடு பூமியும் ஆடியது. நட்சத்திரமும் கிரகமும் நிலைவிட்டு நீங்கின. திக்குகள் தீப்பற்றிக் கொண்டன. தீயால் தவித்த தேவர்கள் பிரம்மனிடம் ஓடினார்கள். அண்டங்கள் அழிவதற்கு முன் ஏதாவதொரு உபாயத்தைத் தேடித் தங்களைக் காப்பாற்றும்படி வேண்டிக் கொண்டனர். ஹிரண்யனுடைய எண்ணத்தைப் பிரமனிடம் எடுத்துரைத்தார்கள். ''தன்னுடைய தவத்தாலும் யோகத்தின் பலத்தாலும் தாவரஜங்கம சிருஷ்டியைச் செய்துவிட்டுப் பிரமதேவன் சத்தியலோகத்தில் வீற்றிருக்கிறான். 'காலத்துக்கு எல்லை இல்லை; ஆன்மாவுக்கு அழிவு இல்லை; ஆகவே நானும் தவம் செய்து யோக சமாதியில் அமர்ந்து அப் பதவியை அடைவேன். அடைந்ததும் மூவுலகப் பண்பையும் மாற்றிடுவேன். தேவரையும் முனிவரையும் கீழுலகில் தள்ளிடுவேன்; மேலுலகில் அரக்கரே ஆட்சி செய்வார். முன்னிருந்த முறையெல்லாம் மாய்ந்து போகும். விஷ்ணுவே வீற்றிருக்கும் வைகுண்டத்தை என்ன தான் செய்ய மாட்டேன்?'' என்ற தீமை மிகு திண்ணத்துடன் தவம் புரியும் அரக்கனை அடக்காவிடில் அந்தணரும் ஆவினமும் அனைவருமே அழிந்து போவோம்'' என்று மன்றாடினர்.

தேவர்கள் கூறியதைக் கேட்ட பிரமன் ஹிரண்யன் இருக்கும் ஆசிரமத்துக்கு ஏகினார். புற்றாலும் புதராலும் மூடுண்டு எறும்பரித்த தோலும் சதையுமே மிஞ்சிய அரக்கனை முதலில் பிரமதேவன் கண்ணுறவில்லை. பின்னர், தன் தவத்தால் மூவுலகைத் திகைக்கும் தானவனை மேகத்தால் மறைத்திருக்கும் ரவியெனக் கண்டு கொண்டார். புன்முறுவலுடன் அவனிடம் பேசினார். 'வேண்டிய வரத்தைக்கேள்' என்று கூறினார். எறும்பரித்த அரக்கன் மீது தம்முடைய கமண்டலத்து நீரைத் தெளித்தார். புதர்சூழ்ந்த புற்றினின்று கட்டையில் மூண்ட தீயென அரக்கன் வெளிவந்தான். உருக்கிய

பொன்மேனியுடன் பிரமனின் முன்னின்று வணங்கினான். கூப்பிய கையொடு வாய்விட்டுத் தோத்திரம் செய்தான். தனக்கு வேண்டிய வரங்களை யெல்லாம் கேட்டான்.

“நீங்கள் படைத்த ஒருவராலும் எனக்குச் சாவு வரக்கூடாது. நான் வீட்டுக்கு உள்ளிலோ, வெளியிலோ, இரவிலோ, பகலிலோ இறக்கக் கூடாது. ஆயுதங்களால் ஆயுள் போகக்கூடாது. புவிமீது உயிர் போகலாகாது. ஆகாயத்தில் மாளவும் கூடாது. மானிடரும் விலங்குகளும் என்னைக் கொல்லத் திறமற்றிருக்கவேண்டும். வேறு தாவரமோ, ஜங்கமமோ, தேவரோ, அரக்கரோ, சர்ப்பமோ என்னை மாய்ப்பதற்கு முடியாதிருக்க வேண்டும். நிகரான எதிரியே இல்லாதிருக்க வேண்டும். மூவுலகைத் தனிமையிலே ஆள வேண்டும். லோகபாலகருள் தேவரீர் அனுபவிக்கும் பெருமையைப் பெறவேண்டும். தவத்தாலும் யோக சமாதியாலும் அடையக்கூடிய சக்திகள் அனைத்தையும் அடைய வேண்டும்” என்று கோரினான்.

கேட்ட வரங்களை ஹிரண்யனுக்குப் பிரமன் தந்தருளினார்.

---

## குமாரி மிருதுளா ராவின் பரதநாட்டிய விருந்து

சங்கீத உலகில் இரண்டாவது அணியாக விளங்கும் இளம் வித்வான்கள் ஒவ்வொரு வருஷமும் ரசிகர்களுக்கு அறிமுகமாவது போல் பரதநாட்டியத்திலும் பல உயர்குடும்பத்துப் பெண்மணிகள் ஆண்டுதோறும் முன்னணிக்கு வந்து கொண்டிருப்பது இக் கலையின் வளர்ச்சிக்கு அறிகுறி. இவ்வகையில் சென்ற 2-ந் தேதி அண்ணாமலை மன்றத்தில் தமிழ் இசைச் சங்கத்தின் ஆதரவில் நடந்த குமாரி மிருதுளா ராவின் பரதநாட்டியம் குறிப்பிடத்தக்க ஒரு நிகழ்ச்சி. பெங்களூரில் பிரமுகரும் தொழிலதிபருமான திரு எஸ். எம். ராமகிருஷ்ண ராவ் அவர்களின் புதல்வி இச்சிறுமி. நடன ஆசிரியர் பந்தணைநல்லூர் முத்தையா பிள்ளையின் சிஷ்யை. பெற்றோர்களின் கலை ரஸனையும் குருவின் முதிர்ந்த அநுபவமும் இச் சிறுமி விஷயத்தில் நல்ல பலனளித்துள்ளன. நீண்ட அப்பியாசத்தாலும் தளராத ஊக்கத்தாலும் அடவு ஜாதிகளில் லயசுத்தம் இருக்கிறது. அடவுகளில் துரித காலமும் விறுவிறுப்பு மிருந்தால் மட்டும் பிரபல நாட்டிய கலா பூஷணங்களைப் போல் ரசிகர்களைக் கவர முடியும் என்று சாதாரணமாக எண்ணி அவர்களைப் பின்பற்றும் ஆர்வம் சிறுமிகளுக்கு ஏற்பட்டு அதனால் நிலை தவறுவதும் உண்டு. இந்த மாதிரி அதிக உற்சாகத்துக்கு உட்படவில்லை குமாரி மிருதுளா ராவ் என்பது பாராட்டத் தக்க அம்சம். சற்று நிதானத்துடனேயே, கவனம் குன்றாது இருந்தது நிருத்தியம். அபிநயப் பகுதியில் இப்



பெண்மணிக்குள்ள கலையுணர்ச்சிகள் ஆங்காங்கே மிளிர்ந்தன. ‘எத்தனை சொன்னாலும்’ என்ற சாவேரி ராக பதத்துக்கும், ‘தெருவில் வாரானோ’ என்ற கமாஸ் ராக பதத்துக்கும் ‘ஏன் பள்ளி கொண்டீரய்யா’ என்ற மோகன ராக கீர்த்தனைக்கும் அபிநயங்கள் பாவத்துடன் இருந்தன. பின்னணியாகப் பதங்கள் பாடிய திருமதி சகுந்தலா சீனிவாஸனின் கானம் மிருதுளாவின் அபிநயத்துக்குத் தூண்டுதலளிக்கும் வகையில் சவுக்க காலத்தில் ரஞ்சகமாகவும் இனிமையாகவும் இருந்தது. காலப் போக்கில் குமாரி மிருதுளா ராவின் நாட்டியக் கலை மிகவும் உன்னதமாகப் பிரகாசிப்பதற்குப் போதிய அறிகுறிகள் காணப்படுகின்றன. நடன நிகழ்ச்சிக்குச் சென்னைப் பிரதமர் திரு காமராஜ் அவர்களும் மற்றும் பல பிரமுகர்களும் விஜயம் செய்தனர்.

சாமி

என் மனைவி மிக

திவ்யமாகச் சமைக்கிருள்

# துஷார்

வைடமின் நிறைந்த வனஸ்பதி





துஷார் வனஸ்பதி சமையலுக்கு ஏற்ற சாதனம் மட்டுமல்ல. இதில் ஏ, டி, வைடமின் சத்துக்கள் நிறைந்து, சமையலின் ருசியையும் வாசனையை ஊட்டமளிக்கும் சக்தியையும் அதிகரிக்கச் செய்கின்றன:

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட், கர்நூல்

---

தளராத சக்திக்கு அவர்களுக்கு ஷாலிமர் கொடுங்கள்








# பாண்டிமாதேவி

நா. பார்த்தசாரதி

அத்தியாயம் 20

## கண்கள் இட்ட கட்டளை

"நீ வல்லபா! வடக்கு எல்லையில் கரவந்தபுரம், கொற்கைப் பகுதிகளில் நம் பகைவர்கள் உண்டாக்கும் கலவரங்களையும், குழப்பங்களையும் பற்றி நீ கேள்விப்பட்டிருப்பாய். நாம் அவர்களை எண்ணிப் பயமும், பதற்றமும் அடைவதற்காக உடனடியாகப் படையெடுப்பு நடக்க இருப்பது போல் ஒரு மிரட்டலைச் செய்து கொண்டிருக்கிறார்கள் அவர்கள். கன்னம் வைத்துத் திருடப் போகிற திருடன் தந்திரசாலியாக இருந்தால் கன்னத்துவாரத்துக்குள் முதலில் தன் தலையை நீட்ட மாட்டான். உள்ளே சொத்துக்கு உரியவர் விழித்துக் கொண்டிருக்கிறாரா, இல்லையா என்று சோதிப்பதற்காக ஒரு குச்சியில் பழைய மண் சட்டியை மாட்டித் துவாரத்தின் வழியே நீட்டுவான். ஆள் விழித்திருந்தால் அவன் நீட்டிய சட்டியைத் திருடனின் தலையாக எண்ணி உள்ளிருப்பவர் ஓங்கிப் புடைப்பார். சட்டி உடைகிற சத்தம் கேட்டுத் திருடன் ஓடித் தப்பித்துக் கொள்ளுவான். இது போன்ற வேலையைத்தான் வட திசை அரசர்கள் இப்போது நம்மிடத்தில் செய்து கொண்டிருக்கிறார்கள். நாம் ஒன்றுமே அறியாமல் தூங்கிக் கொண்டிருக்கிறோமென்பது அவர்கள் நினைப்பு. வைரத்தை வைரத்தால் அறுக்கப் போகிறேன். முள்ளை முள்ளால் எடுக்கப் போகிறேன். சூழ்ச்சியைச் சூழ்ச்சியால் வெல்லப் போகிறேன். அவர்கள் கற்றுக் கொடுத்த பாடத்தை அவர்களுக்கே திரும்பக் கற்பிக்கப் போகிறேன். சிந்திக்கவும், சூழ்ச்சி செய்யவும், திட்டமிடவும் அறிவுள்ளவர்கள் தென்பாண்டி நாட்டில் இடையாதென்று தீர்மானித்து விட்டார்கள் போலிருக்கிறது. சோழ நாட்டில் சோறு இருக்கிறது. சேர நாட்டில் யானைகள் இருக்கின்றன. பாண்டி நாட்டில் தமிழ் அறிஞர்கள் இருக்கிறார்கள் என்பதை அவர்கள் மறந்து விட்டார்கள். இந்த நாவலந் தீவிலேயே சிறந்த அறிவாளிகள் தொண்டை நாட்டிலும், தென்பாண்டி நாட்டிலும் இருக்கிறார்கள். தொண்டை நாட்டு அறிவாளிகள் எதையும் மன்னித்து விடும் இயல்புள்ள சான்றோர்கள். ஆனால் பாண்டி நாட்டான் பாதகத்தை மன்னிக்க மாட்டான். தென்திசை எல்லாத் தீமைகளையும் அழித்தொழிக்கும் காலனுக்குச் சொந்தமென்பார்கள். அதே தென் திசையில்தான் இப்போது நாமும் இருக்கிறோம்."— காரியங்களைக் கண் பார்வையிலேயே



சாதித்துக் கொண்டு போகிற மகா மண்டலேசுவரர் அன்று மெய்க்காவற் படைத்தலைவனிடம் சற்று அதிக மாகவே பேசினார்.

நாட்டின் உயிர்நாடியான படைகளை ஆளும் பொறுப்புள்ளவர்கள் தம் மேற் சந்தேகப்படும்படியாகத் தான் தொடர்ந்து நடந்து கொண்டிருப்ப தாக மகாமண்டலேசுவரருக்கே ஒரு பயம் உண்டாகி விட்டிருந்தது. தளபதி வல்லாளதேவன் மனத்தில் தம்மைப் பற்றி அவ்வளவாக நல்ல எண்ணம் இல்லையென்று அவரே அறிந்திருந்தார். ஆபத்துதவிகள் படைத் தலைவன் மகர நெடுங்குழைக் காதனுக்கும் அவர் மேல் ஓரளவு பகை இருந்தது. சீவல்லமாறனையும் அப்படிப் பகைத்துக் கொண்டால் இந்த மூவருமே தமக்கு எதிராக ஒன்றுகூடி மாறுபடுவார்களோ என்ற உட்பயம் அவருக்கு ஏற்பட்டது. தொடக்கத்தில் சீவல்லபனும் அதற்கேற்றாற் போல் நடந்து கொள்ளவே அவனும் ஆகாதவனாகி விடுவானோ என்ற அச்சம் அந்தக் கணமே சூழ்ந்து கொண்டது அவரை.

அந்தக் கணத்திலிருந்தே அவனைத் தட்டிக் கொடுத்து அவனோடு அதிக மாகப் பேசத் தொடங்கி விட்டார் அவர். துணிவு வந்து விட்டால் அறிவுள்ளவனுக்கு ஆயிரம் யானைப் பலம் ஏற்படுகிறது. பயம் வந்துவிட்டால் அவனைவிடக் கோழை உலகத்தில் வேறு எவனும் இருக்க முடியாது. மகாமண்டலேசுவரர் அன்று நடந்து கொண்ட விதம் இந்த உண்மைக்கு முற்றிலும் பொருத்தமாக இருந்தது.

சீவல்லபமாறனே உண்மையில் அவருடைய கண்பார்வைக்கே பயந்து நடுங்கிக் கொண்டிருந்தான். தளபதி, ஆபத்துதவிகள் தலைவன், எல்லோருக்குமே அவர் மேல் பிணக்கு இருந்தாலும் அந்தப் பேரறிவுக்கு முன்னால் தலைவணங்கி விடுகிற நடுக்கம் நிச்சயமாக உண்டு. ஆனால் அப்படியிருந்தும் அவர் அவர்களை எண்ணிப் பயந்து கொண்டுதான் இருந்தார். யானைக்குத் தன் பலம் தெரியாதல்லவா? சங்க காலத்தில் கிள்ளிவளவன் என்றொரு அரசன் இருந்தான். அவனுடைய கண் பார்வைக்கு நினைத்ததைச் செய்து முடிக்கும் ஆற்றல் இருந்ததை,

"நீ உடன்று நோக்கும்வாய் எரிதவழ
நீ நயந்து நோக்குவாய் பொன்பூப்ப
செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்
வெண்திங்களுள் வெயில் வேண்டினும்
வேண்டியது விளைக்கும் ஆற்றலை"—

என்று ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவர் மிகையாகப் புகழ்ந்து பாடி.



யிருந்தார். அப்படிப்பட்ட வேண்டியது விளைக்கும் ஆற்றல் தம் கண்களுக்கு இருந்தும் மனத்தின் ஒரு மூலையில் வேண்டாத வீண் பயத்தை எண்ணிப் பயப்படும் அறிவுள்ளவனுக்கே சொந்தமான தாழ்வு மனப்பான்மையும் வெளிக்குத் தெரியாமல் மகாமண்டலேசுவரரிடம் ஒளிந்து கொண்டிருந்தது.

பேசிக் கொண்டே சென்ற அவரும், சீவல்லபமாறனும் அரண்மனைக் காவற்படை மாளிகைக்குள் நுழைந்தனர். மாளிகை முன்றிலில் சீவல்லபன் தேர்ந்தெடுத்து நிறுத்தி விட்டு வந்திருந்த வீரர்கள் ஐம்பதின்மரும் அணி வகுத்து நின்று கொண்டிருந்தனர்

''இதோ இவர்கள்தான், தாங்கள் கூறிய செயலுக்காகத் தேர்ந்தெடுத்து நிறுத்தப் பட்டிருப்பவர்கள்''— சீவல்லபன் அவர்களைச் சுட்டிக்காட்டினான். மகாமண்டலேசுவரர் அந்த வீரர்களுக்கு முன்னால் ஒரு சொற்பொழிவே செய்து விட்டார்.

''அன்பார்ந்த மெய்க்காவற்படை வீரர்களே! நீங்கள் சூழ்ச்சியும், சாதுரியமும் மிக்க பெரிய காரியத்தைச் செய்யப் பெறுவதற்காக அனுப்பப் படுகிறீர்கள். உயிரின்மேலும், உடலின் மேலும் பற்றுள்ளவராக இருந்தாலும் துணிவோடு செல்லுங்கள். முன்பு பாண்டி நாடாக இருந்து இப்போது வடதிசையரசர்களினால் கைப்பற்றி ஆளப்படும் பகுதிகளிலும், கோனாட்டுக் கொடும்பாளூரிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களிலும் கூட்டமாகவோ, தனித்தனியாகவோ சென்று மறைந்திருந்து உங்களால் இயன்ற குழப்பங்களையும், கலவரங்களையும் செய்யுங்கள். நாம் அவர்கள மேல் படையெடுக்கப் போவதாகவும், பிறகு ஈழத்திலிருந்தும், சேர நாட்டிலிருந்தும், நமக்குப் பெரும் படையுதவி கிடைக்கப் போவதாகவும் செய்திகளைப் பரப்பி அவர்களை நம்ப வையுங்கள். நீங்கள் ஒருவர் கூட முடிந்த வரை எதிரிகள் கையில் அகப்பட்டுக் கொண்டு விடாமல், இந்த வேலைகளைச் செய்ய வேண்டும். தப்பித் தவறி யாராவது அகப்பட்டுக் கொண்டால் சதையைத் துண்டு துண்டாக்கினாலும் உண்மைகளைச் சொல்லி நாட்டைக் காட்டிக் கொடுக்கும் துரோகத்தைச் செய்யக் கூடாது. நம் நாட்டு வடக்கு எல்லையில் கொற்கையிலும், கரவந்தபுரத்திலும், அவர்கள் செய்கின்ற குழப்பங்களைப் போல் நீங்கள் அங்கே போய்ச் செய்ய வேண்டும். அவ்வப்போது அங்கே உங்களுக்குக் கிடைக்கும் உளவுச் செய்திகளை இங்கே எனக்குத் தெரியுமாறு

அனுப்ப வேண்டும். இந்தக் காரியங்களை யெல்லாம் நன்றாகச் செய்து உயிர் தப்புவதற்கு உங்களுக்கு என்னென்ன திறமைகள் வேண்டுமென்று தெரியுமா? முதலாவதாகப் பொய்களை உண்மைகள் போல் சொல்லத் தெரிந்திருக்க வேண்டும். சமயத்துக்கு ஏற்றாற்போல் வேடமிட்டு நடிப்பதற்குத் தெரிந்திருக்க வேண்டும். மிக முக்கியமான மூன்றாவது திறமை உயிர், உடல், பொருள் எதையும், எந்த விநாடியும் இழக்கத் தயாராயிருக்கவேண்டும். அவ்வளவுதான்! இறுதியாக உங்களுக்கு நான் கூறும் எச்சரிக்கை ஒன்று உண்டு. இங்கிருந்து இந்தக் காரியத்தைச் செய்வதற்காக இன்று நீங்கள் புறப்பட்டுச் செல்வது கூடியவரையில் பரம இரகசியமாகவே இருக்க வேண்டும். ...நீங்கள் எல்லோரும் புறப்பட்டுச் செல்வதற்கு முன் கடைசியாக மிக வேடிக்கையான முறையில் உங்கள் திறமையைப் பரீட்சை பார்க்கப் போகிறேன்" என்று சொல்லிவிட்டுக் குறும்பாகச் சிரித்தார்.

"அந்தச் சோதனை யாதோ?" — சிவல்லபன் வினயமாகக் கேட்டான்.

"உங்களில் யாருக்கு அதிகப் பொய் கூறும் திறமை இருக்கிறதென்று பரீட்சை செய்யப் போகிறேன்."

அவருடைய இந்தச் சொற்களைக் கேட்டு எல்லோரும் சிரிப்பை அடக்க முடியாமல் சிரித்து விட்டனர்.

"சுவாமீ! மெய்க்காவற்படை வீரர்களிடம் பொய் சொல்லும் திறமையை எதிர்பார்த்தால் தங்களுக்குப் பெருத்த ஏமாற்றம்தான் கிட்டும்!"

"பரவாயில்லை, சிவல்லபா! உலகத்தில் பொய் சொல்லத் தெரியாத ஆட்களே கிடையாது. நன்றாகப் பொய் கூறத் தெரிந்த கூட்டத்தில் இருந்துதான் கவிகள், கதாசிரியர்கள், பௌராணிகர்களெல்லாம் உருவாகிறார்கள். எங்கே பார்க்கலாம்? முதலில் உன் திறமையைக் காண்கிறேன். அழகாக ஒரு பொய் சொல்."

சிவல்லபன் நாணித் தலையைக் குனிந்தான். அவனால் முடியவில்லை.

"நீ தோற்றாய்" என்று சொல்லிவிட்டு அடுத்த வீரனைக் கேட்டார் அவர். அவன் ஒன்றும் புரிந்துகொள்ள முடியாமல் ஏதோ உளறினான்.

"சே! சுகமில்லையே? உங்களில் ஒருவருக்குக் கூட அழகாகப் பொய் சொல்லத் தெரியவில்லையே?" என்று உதட்டைப் பிதுக்கினார் மகாமண்டலேசுவரர். அப்போது அந்த வீரர்களில் கோமாளி போன்ற முக அமைப்பும் கோணிய வாயும் நீளமான மூக்கும் உள்ள ஒரு வீரன் முன் வந்தான்.

"நான் சொல்கிறேன் ஒரு பொய்!"

"எங்கே சொல், பார்க்கலாம்!"

அவன் சிரித்து விடாமல் சொன்னான்: "என்னைப் பெற்ற அப்பாவுக்கும் அம்மாவுக்கும் கலியாணமாகும் போது நான் சிறு பையனாயிருந்தேன். அப்பா அம்மாவுக்குத் தாலி கட்டுகிற போது நான் அம்மாவின் மடியில் ஏறி உட்கார்ந்துகொண்டு பக்கத்தில் வைத்திருந்த உலக்கையின் கொழுந்தைக் கிள்ளிப் போட்டுக் கொண்டிருந்தேன். அப்போது ஊர்வலத்துக்குக் கொம்புள்ள குதிரை ஒன்றாவது கிடைக்கவில்லையே என்று எல்லோரும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள். நான் உடனே ஓடிப் போய்த் தெருக்கோடியிலிருந்த மலடியின் எட்டாவது மகனிடம் சொல்லிக் கொம்புள்ள குதிரைக்கு ஏற்பாடு செய்தேன்."......

"அபாரம்! அற்புதம்! இன்னும் பல நூற்றாண்டுகள் கழித்து இதே திறமையோடு இதே தமிழ் நாட்டில் நீ பிறந்தால் அந்தக் காலத்துக்கே நீதான் மகாகவியாக இலங்குவாய். என்ன அருமையான பொய்." மகாமண்டலேசுவரர் கூறினார். அவரும் மற்றவர்களும் நெடுநேரம் அடக்க முடியாமல் வயிறு குலுங்கச் சிரித்தார்கள். சிரிப்பு முடிந்ததும் மகாமண்டலேசுவரரின் கண் பார்வை சிவல்லபமாறனுக்குக் கட்டளை யிட்டது. அவன் அந்த வீரர்களை அவர்களிடம் ஒப்பித்த காரியத்தைச் செய்யப் புறப்படுமாறு ஆணையிட்டான்.

## அத்தியாயம் 21

# காந்தளூர் மணியம்பலம்

ஒரு ஏழைத் தாயின் கண்ணீரைத் துடைத்த மகிழ்ச்சியோடு சுசீந்திரம் தாணுமாலய விண்ணகரத்திலிருந்து வெளியேறிய மகாராணி வானவன் மாதேவி நேரே அரண்மனைக்குத் தான் திரும்பிச் செல்வாரென்று புவனமோகினி எண்ணினாள்.

இருவரும் சிவிகையில் ஏறி அமர்ந்து கொண்டதும், "நேரே காந்தளூர் மணியம்பலத்துக்குப் போக வேண்



# மழமழப்பான சுகமான க்ஷவரத்திற்கு...

வாழ்வில் வெற்றி கண்டவர்கள் வேறெந்த தயாரிப்பையும் நாடாமல்

## பாமாலிவ்

ஷேவிங் கிரீமைத்தான் உபயோகிக்கிறார்கள்







நுரையுடனே அல்லது பிரஷ் இல்லாமலோ நீங்களே தேர்ந்தெடுங்கள்

பாமாலிவ் என்றாலே உயர்ந்த ரகம்!

---

# கால்கேட்டின்

துப்புரவாக சுத்தம் செய்யும் வன்மை உங்களது பற்களேயும் ஈறுகளேயும் பாதுகாக்கிறது!

சாஸ்திரீயமாக அமைக்கப்பட்ட கால்கேட் டூத் பிரஷ் உங்கள் பற்களின் இடுக்குகளில் சுலபமாக நுழைகிறது... உட்புறத்தையும், வெளிப்புறத்தையும் துப்புரவாக சுத்தம் செய்கிறது... பல் ஈறுகளே மிருதுவாகத்தடவி உறுதிப்படுத்துகிறது! உங்கள் பற்களேயும், ஈறுகளேயும் கால்கேட் டூத் பிரஷ்ஷால் பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

4 சைஸ்கள் : ★ அடல்ட் ★ ஜூனியர் ★ சைல்ட் ★ பேபி

★ ஹார்ட் ★ மீடியம் ★ ஸாப்ட்




டீலக்ஸ் சுகாதார பிளாஸ்டிக் குழாயில் கிடைக்கும். ரெகுலரும் கிடைக்கிறது.

அழகான பிளாஸ்டிக் பிடிகளில் உறுதியாகப் பொருத்தப்பட்ட ஸ்டெரிலைஸ் செய்யப்பட்ட நைலான் பிரிஸில்கள்




இந்தியாவில் சிறந்த டூத்பேஸ்ட் செய்பவர்களால் தயாரிக்கப்படுகிறது!





இந்த இளைஞர் தொழில் சம்பந்த
மான கண்காட்சி கூடங்களை
திட்டமிட்டு நிர்மாணித்தார்.
இரண்டாவது ஐந்தாண்டுத்
திட்டத்தின் கீழ் தொழில்
துறையில் இந்தியா அடைந்
திருக்கும் மகத்தான முன்
னேற்றத்திற்கு இந்த கண்
காட்சிகள் ஒரு எடுத்துக்
காட்டாக இருக்கிறது.



SCISSORS

அவருடைய சிகரெட்
சிஸர்ஸ்
Issued by The Imperial Tobacco Company of India Limited

டும். வேகமாகச் செல்லுங்கள்" என்று சிவிகை தூக்குவோருக்குக் கட்டளை பிறந்த போதுதான் புவனமோகினிக்கு மகாராணியின் நோக்கம் புரிந்தது. ஏதோ ஒரு காரணம் பற்றி மகாராணிக்கு அரண்மனையில் அடைபட்டுக் கிடப்பதில் வெறுப்பு ஏற்பட்டு விட்டதென்பதை வண்ணமகள் நினைத்து உணர முடிந்தது.

எவ்வளவுதான் துன்பம் நிறைந்த சூழ்நிலையாக இருந்தாலும், மகாராணியின் முகத்தில் ஏக்கத்தைக் காட்டிலும் சாந்த குணத்தை வெளிக் காட்டும் சால்புமிக்க மலர்ச்சி ஒன்று பதிந்திருக்கும். ஆனால் இன்று சுசீந்திரம் கோவிலில் அந்தத் தாயைச் சந்தித்து விட்டு வந்தபின் தெய்வத்தின் திருவடிகளில் அர்ச்சிப்பதற்கு மலர்ந்த பெரிய செந்தாமரைப் பூவைப் போன்ற மகாராணியின் முக மண்டலத்தில் எதையோ மீண்டும் மீண்டும் எண்ணி மனத்துக்குள்ளேயே நினைவுகளின் சூட்டினால் வெந்து புழுங்கித் தவிக்கும் சோகச்சாயை கோடிட்டிருந்தது. அந்த முகத்துக்கு எதிரே அமர்ந்து கொண்டு அந்த முகத்தையே பார்ப்பதற்கு வேதனையாக இருந்தது. வண்ண மகளுக்கு. தன் மன வேதனைகளைத் தெரிந்து கொண்டு தனக்கு வேண்டியவர்கள் தன்னை எண்ணி வருந்தக் கூடாதே என்கிற அளவுக்குக் கூச்சம் நிறைந்த மெல்லிய மனம் மகாராணியுடையது.

அந்த முகத்தைத் தொடர்ந்து பார்த்துக் கொண்டிருப்பதற்கு அஞ்சித் தன் பார்வையைப் பல்லக்கின் வெளிப் பக்கத்துக்கு மாற்றிக் கொண்டாள் புவனமோகினி. பல்லக்கு விரைந்து கொண்டிருந்தது.

பெருமூச்சோடு மெல்ல விம்மி அழுவது போன்ற ஒலியைக் கேட்டுத் திகைத்துத் திரும்பினாள் வண்ண மகள். அவள் கண்களுக்கு எதிரே சிவிகையில் வீற்றிருந்த மகாராணி ஓசைப்படாமல் மெல்ல அழுதுகொண்டிருந்தார். அந்தத் தாமரைப் பூ முகத்தில் கண்ணீர்த் துளிகளைக் கண்ட போது புவனமோகினி திடுக்கிட்டாள். அவளுக்குத் துயரங்கலந்த ஒருவகைப் பயத்தினால் மெய்சிலிர்த்தது. 'மகாராணியிடம் என்ன பேசுவது? 'ஏன் அழுகிறீர்கள்?' என்று எப்படிக் கூசாமல் கேட்பது?' — ஒன்றும் புரியாமல் திகைத்துக் கலங்கும் மன நிலையோடு மகாராணியையே பார்த்துக் கொண்டிருந்தாள் அந்த எளிய வண்ண மகள்.

"புவனமோகினி! என் அழுகையின் காரணம் புரியாமல்தானே நீ இப்படி என்னைப் பார்க்கிறாய்? கேட்டால் நான் 'வருந்துவேனோ' என்று தயங்குகிறாய், இல்லையா?"

சாம்பலை ஊதிக் கனிய வைத்த மங்கலான நெருப்பின் ஒளிபோல் அழுகையின் நடுவே ஒரு புன்னகையோடு கேட்டார் மகாராணி.

"தாயே! தங்கள் முகத்தையும், கண்ணீரையும் பார்க்கும்போது எனக்குப் பெரிதும் வேதனையாயிருக்கிறது. அதே சமயத்தில் தங்களைக் கேட்பதற்கும் பயமாக இருக்கிறது."

"பயம் என்ன வந்தது? உனக்குத் தோன்றிய எண்ணத்தை நீ கேட்க வேண்டியதுதானே?"

"திருவட்டாற்றுச் சோழியப் பெண்ணின் தாய்மைத் துன்பத்தை எண்ணி உங்கள் மனம் கலங்குகிறதென்று நான் அனுமானிக்கிறேன். நீங்கள்தான் அந்தப் பெண்ணின் துன்பத்தைப் போக்குவதற்கு ஏற்பாடு செய்து விட்டீர்களே! இனியும் ஏன் கலங்க வேண்டும்?"

"கலக்கமல்ல, பெண்ணே இது! உலகத்தின் கசப்பு நிறைந்த உண்மைகளைத் தெரிந்து கொள்ளும்போதெல்லாம் எனக்கு அழுகை வருகிறது. எனக்கு அழுகை வரும்போதெல்லாம் உண்மைகளை அடைகிற தகுதியும் வருகிறது புவனமோகினி! இந்த மாதிரித் தத்துவங்களெல்லாம் உனக்குப் புரியாது. என்றாலும் சொல்கிறேன். மெய்யைத் தெரிந்து கொள்வதற்கு நூல்களைப் படித்தலும் அறிவுரைகளைக் கேட்டலுமே போதுமான கருவிகளென்று பல பேர்கள் தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். உண்மைகளைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் உலகத்துத் துன்பங்களை யெல்லாம் உணர்ந்துணர்ந்து உருகி அழுகின்ற மனம் வேண்டும். உள்ளம் உருகி அழுதால் உண்மை விளங்கும். நெஞ்சம் கலங்கிக் குமுறினால் நியாயம் பிறக்கும். பிறவி என்ற பிணிவாசனை தொலைக்கும் மணிவாசகர் ஒரே ஒரு வாக்கியத்தில் இதை, "அழுதால் உன்னை பெறலாமே" என்று விளக்குகிறார். இப்போது நான் அழுகின்ற அழுகை உண்மையை அறிந்தும், அறிய முயன்றும் அழுவதே தவிர, வேறொன்று நீ வருந்த வேண்டாம்."

மகாராணியின் இந்தச் சொற்களைக் கேட்டதும், புவனமோகினிக்கு ஒரு சிலிர்ப்பு உடல் முழுவதும் பரவியது.

கண்களில் பக்திப் பரவசத்தின் ஒளி சுடர்க் கோடிட்டது. மின்னல் மின்னும் நேரத்தில், ஒரு கணத்தின் ஒரு சிறு பகுதிப் பொழுதில், அந்த வண்ண மகளின் கண்களுக்கு முன்னால் மகாராணி வானவன்மாதேவியாரின் கண்ணீர் சிந்திய முகம் தெரியவில்லை. நீலத்திரைக் கடலோரத்திலே கோலக் கன்னிமை பெறும் தவம் பூண்டு நிற்கும் வாலைக் குமரிவடிவம் சிவிகையினுள் வந்தமர்ந்து கொண்டு, "ஐயோ! தலைமுறைக்குத் தலைமுறை உலகில் தாய்க் குலத்தின் துன்பங்கள் பெருகி வருகின்றனவே" என்று கதறிக் குமுறிக் கலங்கி யழுவது போல் ஒரு பொய்த் தோற்றம் – ஒரு பிரமைக் காட்சி – புவனமோகினியின் கண்களுக்குமுன்பு தெரிந்து மறைந்தது. புவனமோகினி தன் வசமிழந்த நிலையில் அந்த ஒரு கணம் உடலெங்கும் பரவி நின்ற எல்லையற்ற பரவசத்தினால் என்ன செய்கிறோமென்ற நினைவே யின்றி இரண்டு கைகளையும் மேல் எழும்பிக் கைகூப்பி வணங்குவதற்குத் தயாராகி விட்டாள்

"ஆகா! எவ்வளவு விந்தையான பரந்த மனம் இவருக்கு வாய்த்திருக்கிறது! உலகத்தில் முக்கால்வாசிப் பேருக்குத் தங்கள் சொந்தத் துன்பத்தை எண்ணி வருந்துவதற்கே நேரமில்லை. கால்வாசிப் பேருக்குத் துன்பங்களே நிரந்தரமாகப் பழகி விட்டதால் அவற்றையே இன்பங்களாக எண்ணிச் சிரித்துக் கொண்டே வாழப் பழகி விட்டார்கள். கண்களின் பார்வைக்கு இவர் பாண்டிமாதேவி மட்டும்தான். கருணையின் பார்வையில் இவர் உலக மகாதேவி! நாட்டையும், மகனையும், கண்ணீரையும் அடக்கிக் காக்க முடியாத சூழ்நிலை. உலகத்தையே துன்பமின்றிக் காக்க வேண்டுமென்ற ஆவல். உண்மைக்காக அழுது உயர உயரப் போகும் உலகளாவிய மனம். இந்த மனம்?...... இது மனிதப் பெண்ணின் மனமில்லை." தெய்வப் பெண்ணின் மனத்தோடும், மனிதத் தாயின் உடலோடும் அந்தச் சமயத்தில் புவனமோகினியின் கண்களுக்குத் தோன்றினார் மகாராணி

"தாயே! உணவைக் கூட முடித்துக் கொள்ளாமல் அரண்மனையிலிருந்து கிளம்பினீர்கள். சுசீந்திரத்திலிருந்து நேரே அரண்மனைக்கே திரும்பி விடலாமென்று எண்ணியிருந்தேன். தாங்களோ திடீரென்று காந்தளூர் மணியம்பலத்துக்குப் புறப்பட்டு விட்டீர்கள்" என்று வண்ண மகள் கவலையோடு வினவினாள்.

"உணவுக்கென்ன? எங்கும் கிடைக்கக்கூடியதுதான். நிம்மதியை அல்லவா நான் தேடிக் கொண்டு போகின்றேன். திரும்பத் திரும்பக் கூட்டுக்குள் அடைபடும் பறவையைப் போல் அரண்மனைக்குள் போய் அடைபட்டுக்கொண்டிருக்க என் மனம் ஒப்பமாட்டேன் என்கிறதே! ஆசிரியர், பவழக்கனிவாயர் போன்றவர்கள் அரண்மனையில் வந்து தங்கியிருந்தார்கள். அவர்களும் திரும்பிச் சென்று விட்டார்கள். என்னோடு உடன் இருப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தாள் அந்தப் பெண் விலாசினி. அவளும் திடீரென்று தந்தையோடு புறப்பட்டுப் போய் விட்டாளே. வல்லாள தேவனின் தங்கைக்கு என்னிடம் சொல்லிக் கொள்வதற்குக்கூட நேரமில்லை போலிருக்கிறது. அவளும் போய் விட்டாள். மனம் விட்டுப் பேசுவதற்கு யார் இருக்கிறார்கள் அரண்மனையில்? காந்தளூர் மணியம்பலத்துக்குப் போய் நிம்மதியாக இரண்டு நாட்கள் தங்கி விட்டுக் கொஞ்சம் மெதுவாகத்தான் திரும்பிப் போகலாமே. இப்போது என்ன அவசரம்?"

"அவசரம் இல்லை! ஆனால் நாம் கூடியவரையில் யாருக்கும் தெரியாமல் புறப்பட்டிருக்கிறோமே என்றுதான் கவலைப்படுகிறேன்."

"ஒரு கவலையும் உனக்கு வேண்டாம். பேசாமல் என்னோடு வா!"

கண்களைத் துடைத்துக் கொண்டு அழுவதை நிறுத்தி விட்டு மகாராணி இவ்வாறு உறுதிமொழி கூறியதும் புவனமோகினி அமைதியடைந்தாள்.

மகாராணியையும், வண்ணமகளையும் சுமந்துகொண்டு அந்தப் பல்லக்கு அப்படியே காந்தளூரை அடைவதற்குள் நேயர்களுக்கு ஒருவாறு காந்தளூர் மணியம்பலத்தைப் பற்றி அறிமுகப்படுத்தி வைத்து விடுகிறேன்

பல்லாயிரங் காலத்துப் பேரெல்லை வரை பரவிக் கிடக்கும் தமிழக வரலாற்றுப் பெருக்கில் தமிழ் மூவேந்தர்களிற் சிறப்பெய்திய எவரும் காந்தளூருடன் தொடர்புற்றிருப்பர். எந்த மகா மன்னனுடைய மெய்க்கீர்த்தியும் காந்தளூர்ச் சாலையில் கலமறுத்தருளிய பெருமையைப் பறைசாற்றத் தவறியதில்லை எத்தனை முறைகள் தோல்வியடைந்தாலும் பாண்டியனை எதிர்த்துக் காந்தளூரை வென்றிடும் ஆசையை எவரும் விடத் தயாரா

யில்லை. இவ்வாறு மன்னுதி மன்னர்களின் ஆசைகளை வளர்க்கும் அழகுக் கனவாகத் தென்பாண்டி நாட்டில் இலங்கி வந்தது காந்தளூர்.

> செருவல ரானைதனுஞ் சிந்தியார் போலும்
> மருவலராய் வாள்மாறன் சீறக்—கருவிலே
> கண்டோற்ற வண்டரவம் கார்தோற்றும் காந்தளூர்
> மண்டோற்ற வேந்தர் மனம்.

சாலை என்றும், காந்தளூர்ச் சாலை என்றும் இதே இடத்துக்கு வேறு பெயர்கள் வழங்கும். இராசசிம்மனின் தந்தை பராந்தக பாண்டியனுடைய காலத்தில் விழிஞத்தையும், காந்தளூரையும் சேர மன்னனிடமிருந்து கைப்பற்றினார். பராந்தக பாண்டியர் மிக இளைஞரா யிருக்குங் காலத்திலே முதல் முதலாகச் செய்த கன்னிப் போர் காந்தளூரில்தான் நிகழ்ந்தது. கன்னிப் போர் திருமணமாகாமல் இளைஞராயிருந்த அவருக்கு ஒரு கன்னியையே அளித்து விட்டது. சேர மன்னன், பராந்தகனுக்குத் தன் மகளை மணம் முடித்துக் கொடுத்தான். அந்தப் பெண்ணை பட்டமகிஷியாய் வானவன்மாதேவி என்னும் பெயரோடு பராந்தகன் வாழ்விற் பங்கு பற்றினள். விழிஞத்தில் நிறையக் கடற்போர்களைச் செய்து, பகைவர்களின் கப்பல்களை அழித்து வாகை சூடும் பெருமை பராந்தகனுக்குக் கிடைத்தது. அதையெல்லாம் விடப் பெரிய பெருமை அவன் காந்தளூரில் திருத்தி யமைத்து நிறுவிய மணியம்பலமே ஆகும்.

இந்த மணியம்பலத்தில் ஆயிரத்தெட்டுப் பேர் எல்லாக் கலைகளிலும் வல்லவர்களாக இருந்தார்கள். மறையவர்கள் பெரும்பாலோரும், கவிஞர்களும், கலைஞர்களும், தர்க்க நியாய சாத்திரங்களில் வல்லவர்களுமாகச் சிலரும் காந்தளூர் மணியம்பலத்தில் இருந்ததனால் தென்பாண்டி நாட்டின் பல்கலைக் கழகம் போன்றிலங்கி வந்தது இது. பவழக்கனிவாயர் இந்த மணியம்பலத்தின் அறக்காவலராகவும், அதங்கோட்டாசிரியர் கலை, கல்வி, தமிழ் போன்ற அறிவுத் துறைகட்குக் காவலராகவும் பொறுப் பேற்றிருந்தனர்.

அதே போல் திருநந்திக் கரையிலும் குழித்துறையாற்றங் கரையில் திருச்சேரண நகரிலும் சமணர்களின் கலாசாலைகள் இருந்தன. அவற்றையும் பராந்தகன் ஆதரித்தான். காந்தளூர் மணியம்பலத்திலிருந்த மறையவர்களும், அற நூலாசிரியர்களும் மிக உயர்ந்த கருத்துக்களைக் கல்லில் செதுக்கச் செய்து நாட்டின் பல பகுதிகளிலும் அக்கற்களை நடுவித்தனர். காந்தளூரில் மரங்களும், செடிகொடிகளும், மலர்வனங்களும் நிறைந்த அற்புதமான இயற்கைச் சூழலின் நடுவே மணியம்பலம் அமைந்திருந்தது. இந்த மணியம்பலத்தில் இருந்த ஆயிரத்தெட்டு மறையவர்களும், பிறரும், போட்டி, பொறாமை, புலமைக் காய்ச்சலின்றி ஒற்றுமையாக இருக்க வேண்டுமென்பதில் பராந்தகனுக்கு அக்கறை அதிகமா யிருந்தது.

திருச்சேரணத்துச் சமணர்களும் தங்கள் கலாசாலை மூலம் பெரிய காரியங்களைச் சாதித்தனர். தெய்வங்களின் கோவில்கள் பல இருந்தது போல் அறிவின் ஆலயங்களாக மணியம்பலமும், பிறவும் விளங்கி வந்தன.

எனவே, மகாராணியாகிய வானவன் மாதேவி தாணுமாலய விண்ணகர மென்னும் சுசீந்திரம் தேவாலயத்தைத் தரிசனம் செய்த பின் அறிவாலயமாகிய மணியம்பலத்துக்குப் புறப்பட்டது மிகவும் பொருத்தமும் ஆகி விட்டது.

பவழக்கனிவாயர் முதலியவர்களும் கூட அன்று அதிகாலையில்தான் அரண்மனையிலிருந்து அங்கே திரும்பி வந்திருந்தார்கள். யாருக்கும் தெரியாமல், யாரும் எதிர்பாராதபோது அப்படித் திடீரென்று மகாராணி அங்கே வருவார் என்று எவரும் நினைத்திருக்க முடியாது. சுசீந்திரத்திலிருந்து புறப்பட்ட சிவிகை காந்தளூர் மணியம்பலத்தை அடையும்போது மாலை மயங்கி இருள் சூழத் தொடங்கியது.

இயற்கையின் அழகான பசுமைக் கோலத்தின் நடுவே தீப ஒளியில் அமைதியாகக் காட்சியளித்தது மணியம்பலம். பகுதி பகுதியாகப் பிரிந்திருந்த அந்தப் பேரம்பலத்தில் ஒவ்வோர் பகுதியிலிருந்தும் ஒவ்வொரு வகைக் கலையைக் கற்பிக்கும் ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. ஒருபுறம் மறையொலி, இன்னொருபுறம் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களின் விரிவுரை, வேறோர் பகுதியில் பாதச் சிலம்புகள் குலுங்கும் நாட்டிய ஒலி, இசைக் குரல்களின் இனிமை—எல்லா ஒலிகளுமாகச் சேர்ந்து வேறு வகையில் அந்த இடத்தின் அமைதியைத் தெளிவுபடுத்தின.

சிவிகையை விட்டு இறங்கி மணியம்பலத்துக்குள் நடந்தனர் மகாராணியும், புவனமோகினியும்.

"நான் முன்னால் ஓடிப் போய்த் தங்கள் வரவைப் பவழக்கனிவாயருக்கு அறிவித்து விடுகிறேன்" என்று சிறிது விரைவாக முன்னால் நடக்க முயன்ற புவனமோகினியைத் தடுத்து நிறுத்தினார் மகாராணி.

"நமக்குக் கால் இருக்கிறது நாமே நடந்து செல்லலாம். அவரவர் கடமைகளை அந்தந்த நேரத்துக்கு ஒழுங்காகச் செய்து கொண்டிருக்கும் இந்தக் கலைக் கோவிலில் இப்போது நீ போய் என் வரவைக் கூறினால் இங்குள்ள அத்தனை மறையவர்களும், கலைஞர்களும், மாணவர்களும், ஆசிரியர்களும் பரபரப்படைந்து என்னை வரவேற்பதற்கு ஓடிவந்து வீண் கூட்டம் போடுவார்கள். அந்த ஆடம்பர ஆரவாரத்தை எதிர்நோக்கி நான் இங்கு வரவில்லை."

புவனமோகினி பதில் சொல்ல வாயின்றி உடன் நடந்தாள். மணியம்பலத்தில் யாருமே இவர்கள் உள்ளே வந்ததைக் கவனிக்கவில்லை.

தர்க்க நியாய சாத்திரங்களையும், சமய நூல்களையும் கற்பிக்கும் ஒரு பகுதிக்கு அருகே வந்ததும் மகாராணியும் புவனமோகினியும் நின்றார்கள். அங்கே ஒரு முதுபெரும் புலவர் மணியம்பலத்தைச் சேர்ந்த சீடர்களைத் தம்மைச் சுற்றிலும் உட்கார வைத்துக் கற்பித்துக் கொண்டிருந்தார். அதில் ஒரு சில வார்த்தைகள் உள்ளத்தைத் தொடவே, தாம் நிற்பது தெரியாமல் மறைந்து நின்று கேட்கத் தொடங்கினார் மகாராணி.

"துன்பங்கள் குறைவதற்கு எதையும் இழக்கத் துணிகின்ற மனம் வேண்டும். 'இது வேண்டும், அது வேண்டும்' என்று ஆசையை வளர்த்துக் கொண்டு போகிறவனைக் காட்டிலும் எதுவுமே வேண்டாமென்று மனத்தைக் கட்டுகிறவன் பெரிய செல்வன். வேண்டாமையைப் போன்ற சிறந்த செல்வம் வேறில்லை. எந்தெந்தப்பொருளை அடையவேண்டுமென்று ஆசைப் படுகிறோமோ, அந்தந்தப் பொருளால் வரும் துன்பங்களையும் தாங்கத் தயாராயிருக்க வேண்டும். எந்தெந்தப் பொருளை வேண்டாமென்று விட்டு எது எதிலிருந்து நம்மை நீக்கித் தனியே பிரித்துக் கொள்கின்றோமோ, அந்தந்தப் பொருள்களை விரும்புவதால், பெறுவதால் வரும் துயரங்கள் நமக்கு இல்லை.

**"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்"**

"மாணவர்களே! சமய நெறி ஒப்புக் கொண்ட வாழ்க்கை இதுதான். இதுவே தவம்" மூதறிஞர் கூறி முடித்தார்.

"எதையும் இழக்கத் துணிகின்ற மனம் வேண்டும்." மகாராணி தமக்குள் மெல்லக் கூறிக் கொண்டார் அந்த வாக்கியத்தை. விளக்குக் கண்டவுடன் மாயும் இருள்போல் நெடுநேரமாக மனத்தை வதைத்துத் துன்புறுத்திக் கொண்டிருந்த ஏதோ ஒன்றை அந்த முது பெரும் புலவர் கூறிய திருக்குறள் கருத்து நீக்கி விட்டது போலிருந்தது. "புவனமோகினி! வா...நாம் அரண்மனைக்கே திரும்பிப் போய்விடலாம்" இவ்வாறு கூறிவிட்டு இருளில் மறைந்து நின்று கொண்டிருந்த மகாராணி புறப்பட்டபோது புவனமோகினிக்கு ஒரே ஆச்சரியமாகி விட்டது. மகாராணியின் மனம் ஒரு நிலையில் நிற்காமல் ஏதோ காரணத்தால் அலை பாய்ந்து கொண்டிருக்கும்போலுமென்று அவளுக்குத் தோன்றியது

"இரண்டு நாட்கள் இங்கே நிம்மதியாகத் தங்கி விட்டுப் போக வேண்டுமென்று கூறினீர்களே. இப்போது உடனே புறப்படவேண்டுமென்கிறீர்களே? சுசீந்திரத்திலிருந்தே அரண்மனைக்குத் திரும்பியிருந்தால் இதற்குள் போய்ச் சேர்ந்திருக்கலாமே?" என்று மெல்லிய குரலில் மகாராணியைக் கேட்டாள் வண்ணமகள்.

"பெண்ணே! அப்போது அப்படித் தோன்றியது. சொன்னேன். இப்போது இப்படித் தோன்றுகிறது. சொல்கிறேன். இரண்டு நாட்கள் இந்த மணியம்பலத்தில் தங்கி என்னை தெரிந்து கொண்டு நிம்மதி அடைய வேண்டுமென்று எண்ணி வந்தேனோ அந்த நிம்மதி இரண்டு கணங்களில் இந்தப் புலவரின் சொற்களில் கிடைத்து விட்டது."

"போகுமுன் பவழக்கனிவாயரைப் பார்க்க வேண்டுமல்லவா?"

"யாரையும் பார்க்க வேண்டாம்! யாருக்கும் தெரியாமல் நாம் திரும்பி விடுவோம்."

ஓசைப் படாமல் திரும்பிச் சென்று வந்தது போலவே வெளியேறினார்கள் அவர்கள். மணியம்பலத்தின் வாயிலில் அலுத்துப் போய் உட்கார்ந்திருந்த பல்லக்குத் தூக்குவோரின் களைப்பையும் பொருட்படுத்தாமல் புறப்பட்டு விட்டார்கள். இருளின் நடுவே ஒளி நிறைந்த மனத்தோடு மகாராணியின் பயணம் தொடர்ந்தது. (தொடரும்)

---

**பாண்டிமாதேவியின் பின்னும் வரப்போகும் ஒரு நிகழ்ச்சியை இவ்விதழ் அட்டைப்படமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் வினு.**







PEPS
for
COUGHS
COLDS








ISEC
CAN HELP
YOU








REX
Raspberry







ஐதர் அலி போர் புரிவதில் பெரு விருப்பு உடையவன். அவன் வென்ற போர்களின் எண்ணிக்கை கணக்கிலடங்கா. அவன் தென்னாட்டில் வந்து பல கோட்டைகளைத் தன்னுடையதாக்கிக் கொண்டான். அதுமாத்திரமன்றி அவற்றைப் புதுப்பித்தும் வந்தான்.

அவ்வாறு அவன் பிடித்த கோட்டைகளுள் கோயமுத்தூர்க் கோட்டையும் ஒன்று. தென்னாட்டில் குறிப்பாகக் கொங்கு நாட்டிலே ஐதர் படையெடுப்புக்காக வரும் போதெல்லாம் அந்தக் கோட்டையிலேதான் தங்குவதுவழக்கம். அதனால் கோவையிலே அரண்மனை ஒன்றும் கட்டியிருந்தான். அது மிகவும் அழகு பொருந்திய அரண்மனை. பல இரகசிய அறைகள் அடங்கிய அரண்மனை அது. தான் பிடித்திருந்த நாடுகளில் சரிவர நிர்வாகம் நடக்க வேண்டுமென்று கோவையிலே தங்கி அதிகாரிகளை வரவழைத்து நாட்டு நிலைமைகளை அவ்வப்போது விசாரித்து வருவான் ஐதர்.

அதிகாரத்தைத் தவறான முறையில் உபயோகித்தவருக்கும், அதிகாரத்தைச் சரியாகச் செலுத்தி ஆளாத அதிகாரிகளுக்கும் அவன் அளிக்கும் தண்டனை மிகக் கொடிய தண்டனையாகவே பெரும்பாலும் இருக்கும்.

தன்னடிப்படுத்திக் கொண்ட நாடுகளிலே தான் சிறைப்படுத்திய பெருந்தலைவர்களையும், அவர்கள் குடும்பத்தினரையும் பல கோட்டைகளில் அடைத்து வைப்பது வழக்கம். கோவைக் கோட்டையும் இது போல் உபயோகப்பட்ட கோட்டைகளுள் ஒன்று.

* * *

ஐதர் கோவைக்குப் புறப்பட்டான். அவனுக்குத்தான் என்ன வெற்றிப் பெருமிதம்! தனக்கு அடிபணியப் பல்லாயிரம் பேர்கள் இருக்கின்றனர் என்ற பெருமை நெஞ்சிலே நின்று அவனுக்கு எல்லையில்லாத மகிழ்ச்சியை அளித்தது.

அவன் கோவையை அடைந்த போது அவனால் நியமிக்கப்பெற்ற அதிகாரிகள் அவனைப் பயபக்தியுடன் வரவேற்றனர்.

ஐதர் பெருமையிலேயும் புகழ்ச்சியிலேயும் அபார நம்பிக்கையுடையவன். எல்லோரும் தனக்கு அடிமைகளாகப் பணிபுரிய வேண்டும் என்ற ஆசை உடை

யவன். அப்படிப்பட்ட அரசன் கேட்ட தென்ன, தெரியுமா?

"சிக்கப்பக் கவுடன் குடும்பம் கோட்டையிலேதான் இருக்கிறதோ?"

இந்தக் கேள்வியை அதிகாரிகள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. இருந்தாலும் அவர்கள் பதில் சொல்வதற்குத் தயாராக இருந்தார்கள்.

ஒரு அதிகாரி கிணற்றிலிருந்து பேசுவது போல் பதில் சொன்னான்: "ஆமாம்! கோட்டையிலேதான் இருக்கிறார்கள் சிக்கப்பக் கவுடனின் குடும்பத்தினர். ஆனால் சிக்கப்பன்தான் முதலிலேயே இறந்து போய்விட்டானே?"

"எனக்குத் தெரியும். ஹா...ஹா... ஹா...! பாவம், சொன்ன சொல் தவறியதால் அவனுக்குக் கிடைத்த தண்டனை இது. ...சரி சரி...நீங்கள் போகலாம். மாலையில் நான் கோட்டைக்குச் செல்ல வேண்டும். கோட்டையைப் பார்த்தே வெகு நாட்களாகி விட்டன!"

* * *

சிக்கப்பக் கவுடன் சிக்குபெல்லாபுரம் என்ற ஊரின் பாளையக்காரன். அந்த ஊர் பெங்களூருக்கு வடக்கே இருக்கிறது. தென்னாட்டுச் சிற்றரசுகளையெல்லாம் சூறையாடிக் கொண்டு வந்த ஐதர் கண்களுக்கு இந்த ஊர் படாமற் போகவில்லை. இருந்தாலும் சமயம் வரட்டும் என்று காத்திருந்தான் ஐதர். அவனது படைகள் அப்போது உட்புறத் தென்னாட்டில் போர் புரிந்து கொண்டிருந்தன. அந்தப் போர் முடிந்தவுடன் தனது படையை அழைத்துக் கொண்டு சிக்குபெல்லாபுரத்தை நோக்கி விரைந்தான்.

அவனது படைகள் அவ்வூரை நன்றாகச் சூழ்ந்து கொண்டு விட்டன. பொறியில் சிக்கிய முயலைப் போல் சிக்கப்பக் கவுடன் தவித்தான். இருந்தாலும் எதிரியிடம் சரணடைய அந்த வீரனுடைய மனம் இடம் தரவில்லை. 'இருந்தால் சிம்மாசனம்; இல்லாவிட்டால் மரணப் படுக்கை' என்ற கொள்கை அவன் நெஞ்சிலே உறுதி பெற்றிருந்தது.

ஆனால்—

ஐதர் அலி கொடுமை பொருந்திய வெடிகளை உபயோகிக்க ஆரம்பித்தான். பகைவரை அச்சமுறச் செய்யச் சரியான ஆயுதம்தான் இந்த வெடிகுண்டுகள். ஆனால் சிக்கப்பக் கவுடன் சிறிதும் மனம் சோரவில்லை.

சிக்கப்பக் கவுடனிடம் ஊர்ப் பெரியவர்கள் வந்து முறையிட்டுக் கொண்டார்கள். மாதர்களெல்லாம் வந்து வேண்டிக் கொண்டார்கள்.

"அரசே! எப்படியும் நாம் எதிர்த்துப் போராடினால் தோற்று அடிமைகளாகி அவமானப்படப் போவது நிச்சயம். ஐதருக்கு வேண்டியது நாடு அல்ல, பணம், பொருள். இவைதான் அவனைச் சூறையாடத் தூண்டுவது. நாடுதான் நமக்குச் செல்வம். மற்றச் செல்வமெல்லாம் நாம் நினைத்தால் வாணிபத்தால் மீட்டுக் கொள்ளக் கூடியது" என்று யாவரும் ஒரே கருத்தையே வலியுறுத்தினர். அவர்கள் சொல்லுவதும் சிக்கப்பனுக்கு உண்மையாகவே பட்டது.

சிக்கப்பக் கவுடன் ஐதர் அலிக்குத் தூதுவன் மூலமாக ஒரு ஓலை அனுப்பினான். அதன்படி ஐதர் முற்றுகையை வாபஸ் பெற்றுக் கொண்டுவிட்டால், ஒரு மாதத்திலே ஆறு லட்சம் ரூபாய் அளிப்பதாக வாக்களித்திருந்தான்.

இந்த ஓலையைக் கண்டு ஐதர் துள்ளிக் குதித்தான். ஆறு லட்சம் ரூபாய்கள் என்றால் சாமானியமா? அந்தச் செல்வத்துக்குத்தானே அவன் படையெடுத்தது? படையெடுத்த பின் நாட்டைச் சூறையாடிச் செல்வம் சேர்ப்பது அவன் வழக்கம். அவசியமில்லாமல் பாளையக்காரனே செல்வம் கொடுக்க முன் வந்து விட்டான். ஆகவே, இரட்டிப்பு மகிழ்ச்சியுடன் திரும்பிச்சென்றான் ஐதர்.

* * *

சிக்கப்பக் கவுடன் சொல்லியிருந்த கெடுவும் கடந்து விட்டது. ஆனால் அவன் வாக்களித்திருந்தபடி பணம் வந்து சேரவில்லை. ஐதரின் ஆத்திரம் பன்மடங்காகப் பெருகிவிட்டது.

ஆனால் சிக்கப்பக் கவுடனோ மனத்திலே உறுதி பெற்றுவிட்டான். ஐதருக்குப் பணம் கொடுத்து ஆசை காண்பித்துவிட்டால் திரும்பவும் திரும்பவும் அச்சுறுத்திப் பணம் பறிக்க அவனுக்கு எண்ணம் இருந்து கொண்டே இருக்கும் என்று முடிவு செய்து, போருக்கு ஆயத்தமாகி விட்டான். தேசபக்தி மிகுந்த வீரர்கள் தோள் கொட்டி ஆர்ப்பரித்தனர்.

கடும்போர் நிகழ்ந்தது.

ஆனால் இறுதியில் ஐதரின் பெரும் படை சிக்கப்பக் கவுடனின் சிறிய படையைச் சிதற அடித்து விட்டது. ஆயிரக்கணக்கான வீரர்கள் கொல்லப்பட்டனர். ஊரிலுள்ள சொத்துக்களும் செல்வமும் சூறையாடப்பட்டன. சண்டையிலே சிக்கப்பக்கவுடன் இறந்துபோனான். சிறைப்பட்ட சிக்கபெல்லாபுரத்து வீரர்களில் ஐதர் அலியும், அவனது வீரர்களும் செய்த சித்திரவதையால் கண்ணும், மூக்கும், காதும் இழந்து அவதிப்பட்டவர்கள் பல பேர்கள். பிறகு ஐதர் உத்தரவுப்படி சிக்கப்பக் கவுடனின் குடும்




நங்கூரம் ⚓ மார்க்

புதிய தயாரிப்பு

# நவ்-தால்

## நவீன பித்தளை பாட்லாக்

60 ஆண்டுகளாக பலவித ரகமான
சிறந்த பூட்டுகள் தயாரித்த முதிர்ந்த
அனுபவத்தைக்கொண்டு, கோத்ரெஜ்
நவ்-தால் பாட்லாக் தயாரிக்கப்பட்டது
அது உறுதியாகவும், பார்ப்பதற்கு
அழகாகவும் இருக்கும். சிறந்த முறையில்
அதில் அமைக்கப்பட்டுள்ள
இயந்திர நுணுக்கங்கள், இதர சாவிகள்
திறப்பதற்கு இடம் கொடுப்பதில்லை—
நவ்-தால் பாட்லாக்கை
அதற்கென்றே தயாரிக்கப்பட்ட
சாவிதான் திறக்கும்.

★ பித்தளை லீவர்களும் கவசமும்
★ உறுதியான தயாரிப்பு
★ ஆணியால் இறுக்கப்படாதது
கச்சிதமாக மெஷினால் இணைக்கப்
பட்ட உறுதியான ஜாயின்ட்டுகள்
★ துருவைத் தடுக்கும் காட்மியம்
கோட்டிங் கொடுக்கப்பட்ட
வளையம்




7 லீவர்கள்
சைஸ் : 2¼"
ரூ. 8.50 ந. பை. தான்

கோத்ரெஜ் ஷோரூம்களிலும், ஸ்டாக்கிஸ்ட்களிடமும்,
இரும்பு சாமான் கடைகளிலும் கிடைக்கும் . . .




பாதுகாப்பு
இஞ்சினீரிங்கில்
முதன்மையானவர்கள்!

# புதிய குறவஞ்சி நாடகங்களுக்குப் பரிசு

## (மேடை நாடகங்கள்)

குறவஞ்சி (இசை நாடக நாடோடி நடையில் எழுதப்பட்ட) நாடகங்கள் பரிசுப் போட்டிக்கு வரவேற்கப்படுகின்றன. நாடகங்கள் 1959 பிப்ரவரி 10-ந் தேதிக்குள்,— டைரக்டர் (பாடல் மற்றும் நாடகப் பகுதி, ஆகாசவாணி பவன், 5-வது மாடி, பார்லிமெண்ட் தெரு, புது டெல்லி) வசம் கிடைக்கும்படி அனுப்ப வேண்டும்.

(நாடகங்கள் அந்தந்த மொழியின் (நாடோடி) - பேச்சு மொழி நடையில் அமைந்திருக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்படும் நாடகங்களுக்குக் கீழ்க்கண்ட வகையில் பரிசுகள் வழங்கப்படும்:—

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ... | ரூ. 1,000/- |
| இரண்டாம் பரிசு | ... | ரூ. 750/- |
| மூன்றும் பரிசு | ... | ரூ. 500/- |

இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டிராத ஆசிரியர்களால் இந்தியில் எழுதப்படும் நாடகங்களில் மூன்றுக்கு (ஒவ்வொன்றுக்கும்) ரூ. 600/- வீதம் மூன்று சிறப்புப் பரிசுகள் வழங்கப்படும். ஆனால் இவை இந்தி மொழிப் பகுதிகளல்லாத இடங்களில் வழங்கும் (இந்தி) பேச்சு மொழி நடையில் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

நாடகங்களின் அடிப்படைக் கருத்துக்கள் (Themes) தேசியப் புனரமைப்பு நிகழ்ச்சிகளில் ஏதாவது ஒன்றைப் பின்னணியாகக் கொண்டவையாக இருக்க வேண்டும். நாடகக் கதை வளர்ச்சி முறை விறு விறுப்புடன், ஆனால் அரசியல் கட்சிகளையும் தலைவர்களைப்பற்றி நேரடியாகப் பேசாமல், செல்ல வேண்டும்.

நாடகங்கள் குறைந்தது ஒரு மணி நேரமாவது நடைபெறக் கூடியனவாகவும் நாட்டுப்புறப் பகுதிகளில் வெற்றிகரமாக நடித்துக் காட்டக் கூடியனவாகவும் இருக்க வேண்டும். பாட்டுகளுக்கான மெட்டுகள் பற்றிய குறிப்பும் நாடகத்துடன் அனுப்ப வேண்டும்.

நாடகங்களில் இரண்டிரண்டு பிரதிகள் அனுப்ப வேண்டும். அவற்றுடன் இணைத்து அனுப்புவதற்கென்று உள்ள பாரம், மேற்கண்ட டைரக்டரிடமிருந்து இலவசமாகவே பெற்றுக் கொள்ளலாம்.

58/403

பத்தினர் கோவைக் கோட்டைக்கு இழுத்துச் செல்லப்பட்டனர்.

*　*　*

'ஐதர் அலி இங்கே வரப் போகிறார்' என்று அதிகாரி அறிவித்தவுடன் சிக்கப் பக் கவுடனின் குடும்பத்தினர் மனம் குமு றினர். சீரும் சிறப்புடன் வாழ்ந்திருந்த தங்களை எப்படித்தான் சீரழித்து விட் டான் என்பதை நினைத்தவுடன் அவர் களுக்குத் துக்கம் அதிகமாகிவிட்டது.

அதோ மூலையிலே உட்கார்ந்திருக் கிறானே, அவன் பெயர் பைச்சே கவுடன். உறைந்திருந்த வெண்பனி போல் நரைத் திருந்த வெண் முடி, பற்களை உதிர்த்து விட்டிருந்த வாய், பல ஆண்டுகளை அவன் உதிர்த்து விட்டதை அறிவித்துக் கொண்டிருந்தது.

அவன் சிறந்த வீரன். இளமையிலே தோள் பூரிக்கப் போர் புரிந்து புகழ் ஈட்டியவன்தான். மறப்புண் பல பெற்று மகிழ்ந்தவன்தான். இப்போது தான் உருகி விட்ட செங்கல்லைப்போல் ஒன்றுக்குமே உதவாதவனாகி விட்டான். ஆனால் உடலிலே தளர்ச்சி ஏற்பட்டா லும் உள்ளத்தின் உறுதி குன்றவில்லை.

அவன் மனைவி—அவளும் கிழவிதான். ஐதர் புரிந்த போரிலே இறந்து விட் டாள். அவள் நாட்டுப் பற்று மிகுந்த வள். தாய்நாட்டுக்காக எதையும் செய் வதற்காகத் தயாராக இருந்தாள். அவள் இறக்கும்போது கூறியது பைச்சே கவுடனுக்கு நினைவு வந்தது.

"உங்களுக்கு என்னதான் துன்பம் நேர்ந்தாலும், தாய்நாட்டை மறந்து விடாதீர்கள். ராஜ விசுவாசம் உங்கள் உயிர் உள்ள மட்டும் உங்கள் உள்ளத் திலே இருக்க வேண்டும். நம் நாட்டை யார் எதிர்த்தாலும், சிக்கபெல்லாபுரம் பெற்றெடுத்த வீர மைந்தன் நான் என்று பறையறைந்து போரிடுங்கள்."

அந்த வீரத்தாய் சொன்னது பைச்சே கவுடன் நினைவிலே நிலையான முத்திரை யாகப் பதிந்திருந்தது. "அவள் என் மனைவி, அந்தத் தேசத் தியாகி என்னு டையவள்" என்ற பெருமிதம் அப் போதுகூட அவனுக்கு உண்டாகியது.

அப்போதுதான் ஐதர் அலியின் அதி காரி வந்து ஐதர் அலி அங்கு வரப்போவ தாகவும் அப்போது அவர்கள் பணிவாக நடந்துகொள்ள வேண்டும் எனவும் கூறிவிட்டுச் சென்றான்.

இதைக் கேட்ட பைச்சே கவுடனின் மனம் பற்றி எரிந்தது. 'அவனிடம் பணிவாக நடந்து கொள்வதாம். வெட் கக் கேடு' என்று எண்ணினான் அந்த வீரக் கிழவன்.

மையிருளும், கதிரொளியும் சேர்ந்து மயங்கி நின்ற மாலைப்பொழுது. பொன் மூலாமிட்ட கோவைக் கோட்டை பொழுது போனதால் மைபூசிய கோட் டையாக மாறத் தொடங்கி யிருந்தது.

அதிகாரிகள் புடைசூழக் கோட்டைக் குள் நுழைந்தான் ஐதர். உள்ளே கோட்டையிலிருந்த பிரதான மண்டபத் துக்கு வந்தான். அங்கே அமைக்கப்பட் டிருந்த இருக்கையிலே அமர்ந்தான்.

மண்டபத்தைச் சுற்றுமுற்றும் நோட் டம் விட்டான். 'இதெல்லாம் நம்முடை யது' என்ற எண்ணம் மட்டும் அவன் மனத்தை விட்டு அகலவே இல்லை.

"எங்கே சிக்கப்பக் கவுடனுடைய குடும் பத்தினரை இங்கே வரவழையுங்கள்" என்றான் ஐதர் அலி. இதை எதிர் பார்த்தவர்கள் தானே அந்த அதிகாரி கள்! உடனே ஒரு அதிகாரி அவர்கள் சிறை வைக்கப்பட்டிருந்த இடத்துக்கு வேகமாக ஓடினான்.

"எல்லோரும் வரிசையாக எங்கள் அரசர் முன்னே வந்து வணக்கம் செலுத்த வேண்டும்!"

"யார் ஐதர் அலி முன்னேயா?"

"ஆமாம்!"

ஏங்கும் உள்ளத்தினர் அவன் இருந்த இடத்துக்குச் சென்றனர். ஆனால் அவன் மாத்திரம் இருந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை. யார் அவன்? அவன்தான் பைச்சே கவுடன்.

உறுதியாக அமர்ந்திருந்தான் பைச்சே கவுடன். அவன் முன்னே அவன் மனைவி உட்கார்ந்திருப்பது போன்ற பிரமை. 'நீங்கள் அயலாருக்குத் தலை பணியக் கூடாது' என்று உபதேசிப்பது போல் உணர்ச்சி.

"என்ன எழுந்திரு, எழுந்திரு!" என்று அதிகாரம் செய்தான் அதிகாரி.

"யாரை எழுந்திருக்கச் சொல்கிறாய்?"

"எங்கள் அரசர் வந்திருக்கிறார். நீ அங்கே வரவேண்டும். எங்கள் அரசரை வணங்க வேண்டும்."

பைச்சே கவுடன் 'ஹோ ஹோ' வென்று பலமாகச் சிரித்தான்.

"உங்கள் அரசரை நான் வணங்கு வதா? உங்கள் அரசரை நீங்கள் அல் லவோ வணங்க வேண்டும். நீங்கள் அவ னுடைய வேலைக்காரர்கள்."

அதிகாரிக்கு எரிச்சல் எரிச்சலாக வந் தது. அவன் வராவிட்டால் போகிறான் என்று எண்ணி அவன் பிரதான மண்ட பத்துக்கு வந்து விட்டான்.

ஒவ்வொருவரும் ஐதரை வணங்கி விட்டுத் தலைகுனிந்து நின்று கொண்டி ருந்தார்கள். ஐதர் மகிழ்ச்சியால் எக்




கானமிட்டான். தலைவணங்காத சிக்க பெல்லாபுரத்துக் குடும்பத்தினர் தனக்குத் தலை வணங்கிவிட்டார்கள் என்ற பெருமையும் கர்வமும் நிறைந்து வழிந்தது, அவன் நெஞ்சத்தில்.

''இன்னும் யாராவது இங்கே வராதவர்கள் இருக்கிறார்களா ?''

அதிகாரி தயங்கித் தயங்கி, ''இல்லை. ஒருவன் இன்னும் வரவில்லை'' என்றான்.

''யார் அவன் ?''

''அவன் ஒரு கிழவன். பெயர் பைச்சே கவுடன்'' என்றான் அதிகாரி.

''ஏன் அவனுக்கு உடல் நலம் சரியாக இல்லையோ !''

''இல்லை, வந்து...அவனால்...உங்களைப் பார்க்க முடியாதாம்.''

''என்ன ?'' ஐதர் அலி சிங்க கர்ஜனை புரிந்தான்.

''அவன் உங்களுக்குத் தலை வணங்க மாட்டானாம்.''

''ஆ !'' ஐதர் அப்படியே நிலைகுலைந்து போனான். கோபத்தில் வார்த்தைகளே வரவில்லை.

''நீ போ! அவனை அழைத்துக்கொண்டு வந்து சேர்.'' கோபத்தில் கையும் காலும் ஆடின.

அந்த அதிகாரி ஓடினான்.

''பைச்சே கவுடா! எனக்காக நீ அங்கே வா, வந்து விடு!''

ஆனால் கிழவன் உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை.

''நான் எதற்கு அயலானுக்குத் தலை வணங்க வேண்டும்? என் மனைவி என்ன சொல்லியிருக்கிறாள் தெரியுமா ? 'அயலானுக்குப் பணியாதே' என்று சொல்லி விட்டு இறந்து போயிருக்கிறாள். அந்த வீர மகளுடைய கணவன் நான். நானா உன் அரசனுக்குத் தலை வணங்குவேன்?''

கிழவன் ஆவேசத்துடன் பேசினான்; தன்னையே மறந்து பேசினான்.

அதிகாரியே அவனுடைய நெஞ்சுரத்தைக் கண்டு சிலையாக நின்று விட்டான். அப்போது இன்னொரு அதிகாரி ஓடி வந்தான்.

''ஐதர் அலிக்குத் தலை வணங்க வேண்டாம். அவனைப் பார்க்க வந்தாலே போதுமாம்.''

கிழவன் வெற்றிச் சிரிப்பு சிரித்தான்.

* * *

ஐதர் அலிக்கு எப்படியாவது அந்தக் கிழவன் தன்னை வணங்கித்தான் ஆக வேண்டும் என்ற முனைப்பு வேரூன்றி விட்டது. அவன் யோசித்தான். திடீரென்று ஒரு எண்ணம். உடனே பக்கத்தில் இருந்தவனிடம் அந்த யோசனையைச் சொன்னான் அவன்.

''நீ இந்த மண்டபத்துச் சுவரிலே இரண்டு அடிக்கு ஒரு குறுகிய வழி செய்ய ஏற்பாடு செய்'' என்று உத்தரவிட்டான். பிறகு இன்னொரு அதிகாரியைப் பைச்சே கவுடன் தன்னிடத்தில் வந்து பார்த்தால் போதும் என்று சொல்லி விட்டு அவனை அந்தக் குறுகிய வழியிலே குனிந்து வரச் சொல்லவும் பணித்தான். அப்போது பைச்சே கவுடன் வருவதையே தனக்குச் செலுத்திய வணக்கமாகக் கொண்டு விடலாம் என்பது அவன் யோசனை. எப்படியும் அந்தக் கிழவன் தன்னை வணங்கியே தீரவேண்டும் என்ற பிடிவாதத்தினால் ஏற்பட்ட போக்குத்தான் இது.

பைச்சே கவுடனை அழைத்துக்கொண்டு இரண்டு அதிகாரிகளும் மண்டபத்துச் சுவரின் மறு பக்கத்தில் குறுக்கு வழி

இருக்கும் இடத்தருகில் வந்து நின்றனர்.

"பைச்சே கவுடா! எங்கள் அரசனுக்கு நீ தலை வணங்க மாட்டாயா?"

"முடியாது. என் தலை உள்ளளவும் அது அயலானுக்காக வணங்காது!"

மண்டபத்துச் சுவரின் மறுபக்கத்தில் நின்று கொண்டிருந்த ஐதர் இதைக் கேட்டுக் கொண்டிருந்தான். அவனுக்கு ஆத்திரமும் அவமானமும் பொங்கிக் கொண்டு வந்தன.

"....நான் சுத்த வீரன். என் சிரம் நான் பிறந்த பொன்னாட்டுக்கு உரியது. சிக்கபெல்லாபுரத்து வீரன் நான். என்னை ஆண்ட அந்தச் சிக்கப்பக் கவுடனுக்கு எத்தனையோ முறை தலை வணங்கியுள்ளேன். என்னைப் பெற்ற அன்னைக்குத் தலை வணங்கி அன்புடன் நமஸ்கரித்தது எத்தனையோ முறை! இந்தச் சிரம் என்னைப் படைத்த ஆண்டவனுக்குப் பணியும் சிரம். அன்னைக்குப் பணியும் சிரம். ஆன்றோர்க்குப் பணியும் சிரம்."

திக்பிரமை பிடித்து நின்ற அதிகாரி, "போனால் போகிறது. எங்கள் அரசரை யாவது பார்த்து விட்டு வா" என்று கூறி அந்தக் குறுகிய வழியைப் பைச்சே கவுடனுக்குக் காண்பித்து விட்டான்.

பைச்சே கவுடன் திகைத்தான். அவ்வளவு பெரிய அரண்மனையிலே இவ்வளவு சிறிய குறுக்குவழி எதற்கு என்று மலைத்துப் போய் விட்டான்.

"போ, குனிந்து போ!"

அந்த அதிகாரி 'குனிந்து போ' என்பதை அழுத்திச் சொன்னவுடன் ஒரே நொடியில் விஷயத்தைப் புரிந்துகொண்டு விட்டான். சிற்றரசர்களுக்கெல்லாம் சிம்மத்தைப் போலப் பயம் தரும் ஐதர் ஒருபுறம்; இந்த அதிகாரிகள் இந்தப் புறம்.

நடுவிலே கிழவன் பைச்சே கவுடன்.

"உம், சீக்கிரம்" என்று அதிகாரி துரிதப்படுத்தினான்.

"முடியாது" என்று கூச்சலிட்டான் பைச்சே கவுடன்.

உடனே பரபரவென்று அந்தக் குறுகிய வழியாகச் செல்ல ஆரம்பித்தான்.

எப்படி?

தலையை முதலில் அதன் வழியாக விட்டுச் செல்வதற்குப் பதிலாகக் கால்களை முதலில் அந்த வழியிலே விட்டுப் படுக்கும் நிலையிலே நுழைந்தான் பைச்சே கவுடன். 'நீ சுத்த வீரன்' என்று வாய் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

இதைக் கண்ட அதிகாரிகள் திடுக்கிட்டு 'ஆ' என்று அலறினார்கள்.

தலை குனிந்து வணங்கியபடி பைச்சே கவுடன் வருவான் என்று எதிர்பார்த்து எதிர்பார்த்து அந்த வழியின் அருகிலேயே நின்றிருந்த ஐதர் தன் முன்னே வருகின்ற இரண்டு கால்களைக் கண்டு திகைத்தான். கால்களுக்குப்பிறகு உடல், பிறகு தலை. பைச்சே கவுடன் வந்தான். சுத்த வீரனாகத் தலை வணங்கா வீரனாக மார் தட்டி நிமிர்ந்து கொண்டு ஐதர் அலி முன்னே வந்து நின்றான்.

"ஏன் தலை வணங்காமல் காலைக் காட்டிக் கொண்டு வந்தாய்?" என்று பைத்தியம்போல் அலறினான் ஐதர் அலி.

"இந்த முடி வணங்கா முடி!" என்றான் பைச்சே கவுடன்.

ஐதரின் வெறி அதிகமாகி விட்டது. அவ்வளவு பெரிய அரசனாகிய தான் ஒரு கிழவனால் அவமானப்படுத்தப்பட்ட காட்சி அவன் முன்னே பைச்சே கவுடன் கால்களாகத் தோன்றிக் கேலி செய்தது.

"யார் அங்கே?" என்று கூவினான் ஐதர் அலி.

சவுக்கு கையிலே வந்தது. நல்ல பாம்பின் முனை போல் மெலிந்திருந்த சவுக்கு வீரனை அரவணைத்து அரவணைத்துப் பறந்தது. சிரம் கவிழா வீரனின் உடம்பெல்லாம் குருதி பரவியிருந்தது, அவனது நெஞ்சத்து உறுதி போல்.

ஐதர் அலியின் வெறி அடங்கியது.

"கொண்டு போங்கள் இந்த நாயை! என் முன்னே கால்களை முதலிலே காட்டிய அவனது கால்களை இரும்பு விலங்கிட்டுப்பிணைத்து இழுத்துப் போங்கள்."

பைச்சேயின் கால்களிலே இரும்பு விலங்குகள் பிணைக்கப்பட்டன. நினைவு இழந்த அவன் மெல்ல மெல்ல 'சிக்கபெல்லாபுரம் பெருமை ஓங்குக' 'சிக்கக் கடவுள் புகழ் வாழ்க' என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தான்.

ஐதர் அப்படியே கற்சிலையாக அமர்ந்து விட்டான். மாபெரும் மலையாகத் தன்னை எண்ணிக் கொண்டிருந்த அவன் மனத்திலே தான் ஒரு சிறு துரும்பாக ஒரு மூலையில் இருப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டு அடங்கி ஒடுங்கி நிலைகுலைந்து உட்கார்ந்து விட்டான். மெல்ல மெல்ல நிலைக்கு வந்த அவன் நினைவு அயலானுக்குப் பணியாத அந்தக் கிழவனின் அஞ்சாத வீரத்தை நினைக்க ஆரம்பித்தது!

அப்போது ஒரு அதிகாரி ஓடி வந்தான்.

"பைச்சே கவுடன் இறந்து விட்டான்" என்று படபடக்கக் கூறினான்.

"என்ன? இறந்து விட்டானா?" என்று படபடப்பாகக் கூவினான் ஐதர் அலி. பிறகு அவனையும் அறியாமல் அவன் வாய் "ஒரு சுத்த வீரன் வீர சுவர்க்கம் அடைந்து விட்டான்" என்று முணுமுணுத்தது. அந்த நினைப்பு அவன் விழிக்கடையிலே இரண்டு சொட்டுக் கண்ணீரை வரவழைத்தது.

# மார்ஷல் டிட்டோ விஜயம்

## எம். எஸ். சிவஸ்வாமி

இந்தியாவில் இப்போது சுற்றுப் பிரயாணம் செய்யும் யூகோஸ்லேவிய ஜனாதிபதி மார்ஷல் டிட்டோ நம் நாட்டுக்கு முற்றிலும் புதியவர் அல்ல. நான்கு ஆண்டுகளுக்கு முன்பு ஆவடியில் காங்கிரஸ் மகாசபையின் கூட்டம் கூடிய போது சென்னையில் இருந்தார். ஆவடி காங்கிரஸ் கூட்டத்தை நேரில் கண்டார். சோஷலிஸபாணி சமுதாயத்தை அமைப்பதுதான் நாட்டின் லட்சியம் என்று அப்போது நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தைக் கண்டு பாராட்டியதுடன் நமது அபிவிருத்தியில் அக்கறையும் கொண்டார். முதல் ஐந்தாண்டு திட்ட காலத்தில் நமது மாபெரும் அணைத் திட்டங்களையும் தொழிற்சாலைகளையும் நேரில் கண்டார். இப்போது சென்ற நான்காண்டுகளில் நாம் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறோம் என்பதை அறிந்து கொள்ளும் வாய்ப்பு இந்த விஜயத்தில் அவருக்குக் கிடைக்கும்.

நமது நாட்டினருக்கு ஜனாதிபதி டிட்டோவிடம் மதிப்பு அதிகம். அதற்கு முக்கியமாக இரண்டு காரணங்களை எடுத்துக் கூறலாம். பஞ்சசீலக் கொள்கையை வெளிநாட்டு விவகாரங்களில் இந்தியாவைப் போலவே யூகோஸ்லேவியாவும் அனுஷ்டிக்கிறது. இதர நாடுகளின் உள்நாட்டு நடவடிக்கைகளில் தலையிடுவதை அவர் விரும்புவதில்லை. மற்ற நாடுகளும் யூகோஸ்லேவியாவின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவதை அவர் கண்டிக்கிறார். இது ஒரு காரணம். உலக சமாதானம் நிலைக்க வேண்டுமென்று இதர நாடுகளுடன் ஒத்துழைக்கத் தயங்குவதில்லை. உலக அரங்கத்தில் சிக்கலான பிரச்னைகளுக்கெல்லாம் சமாதான முறையில் தீர்வுகாண முயற்சிகள் எடுத்துக் கொள்ளுகிறது. இவ்விஷயத்தில் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையும் யூகோஸ்லேவியாவின் வெளிநாட்டுக் கொள்கையும் ஏறக்குறைய ஒரேமாதிரி இருக்கின்றன எனலாம்.

மார்ஷல் டிட்டோவிடம் இந்தியா மதிப்பு கொண்டிருப்பது இதற்காக மட்டும் அன்று. யூகோஸ்லேவியா ஒரு கம்யூனிஸ்டு நாடு. மார்க்ஸ் தத்துவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளில் நம்பிக்கை கொண்ட நாடு. உலகிலிருந்து முதலாளித்துவம் நிச்சயமாக ஒழிந்தே தீரும். அந்த லட்சியத்தை நோக்கித்தான் சமுதாயம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் செல்லும் என்னும் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட நாடு. ரஷ்ய நாட்டுக் கம்யூனிஸத்தின் அடிப்படையும் அதே தான். ஆனால் இதர கம்யூனிஸ்டு நாடுகளெல்லாம் ருஷ்யாவின் ஆதிக்கத்துக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டு இரும்புத் திரை நாடுகள் என்று நிற்பது போல் யூகோஸ்லேவியா நிற்கவில்லை. ருஷ்யாவின் ஆதிக்கத்துக்குப் புறம்பாகவும் ருஷ்யாவின் நடைமுறைகளுக்கு எதிராகவும் ருஷ்ய பலத்தை எதிர்த்து நின்று சிறிய நாடாயினும் தனியாகச் சொந்தமுறையில் செயல்படும் நாடு யூகோஸ்லேவியா. இந்தத் தனிமை உணர்ச்சிக்குச் சின்னமாகவும் ஆதர்சமாகவும் விளங்குகிறார் மார்ஷல் டிட்டோ. அதற்காக அவரிடம் இந்திய மக்களுக்கு ஒரு தனி மதிப்பு.

இத்தகைய தனிமை உணர்ச்சி உருவானதற்குக் காரணம் அந்நாட்டின் சரித்திர வரலாறு. பார்லிமெண்டு மூலம் ஜனநாயகம் இயங்கும் அனுபவம் இந்நாட்டினருக்கு ஆதியிலிருந்தே இல்லை. முடியாட்சிதான் அவர்களுக்குத் தெரியும். அதுவும் அமைதியான முடியாட்சி அல்ல. ஒன்றன்பின் ஒன்றாகப் பல யுத்தங்களில்



சிக்கித் தவித்த நாடு. ஸெர்பியா என்ற பிரதேசத்திலிருந்து இந்நாடு உருவாயிற்று. மத்திய சகாப்த காலத்தில் இது துருக்கி ராஜ்யத்தின் ஒருபாகமாக இருந்தது. முதல் யுத்தகாலத்துக்குப் பிறகு, பழைய ஆஸ்டிரியா ஹங்கேரிய சாம்ராஜ்யம் சிதறுண்டு, ஒரு புது ராஜ்யம் உருவாயிற்று. இதில் இணைந்த பிரதேசங்கள் ஸெர்பியா, குரோஷியா, ஸ்லோவினியா, டால்மேஷியா, பாஸ்னியா, ஹார்ஸ்கோ

வினா, வாய்வடினா, மான்டி நீக்ரோ முதலியன. இவையனைத்தும் யூகோஸ்லேவியா என்ற பெயரில் பீட்டர் என்னும் அரசரின் ஆட்சியில் விளங்கியது. இரண்டாவது யுத்தத்தில் இரண்டே வாரத்தில் ஹிட்லரின் சேனைகள் யூகோஸ்லேவியாவைக் கைப்பற்றிக் கொண்டன. அரசர் இங்கிலாந்தில் சரண் புகுந்தார்.

நாடு ஹிட்லர் ஆதிக்கத்திலிருந்த போது தான் அந்நியர்களை விரட்ட வேண்டும் என்ற தேசிய இயக்கம் உருவாயிற்று. இயக்கத்துக்குத் தலைமை தாங்கி நடத்தியவர் ஜோஸப் ப்ரோஜ். மார்ஷல் டிட்டோவின் நிஜப் பெயர் இதுதான். யூகோஸ்லேவிய கம்யூனிஸ்டு கட்சியின் தலைவர் என்ற முறையில் இரண்டு தடவைகள் சிறை சென்று, விடுதலையடைந்த பின்னர் மறைந்திருந்து செயல் புரியும் நிர்ப்பந்தம் இவருக்கு ஏற்பட்டது. அப்போது வைத்துக்கொண்ட பல புனைபெயர்களில் 'டிட்டோ'வும் ஒன்று. பிற்காலத்தில் இந்தப் பெயரே அவருடைய பெயராக நிலைத்து விட்டது.

அவர் தலைமையில் தேசிய இயக்கம் வலுப்பெற்று நாஜிப் படையினர் 1945-ல் நாட்டை விட்டுவிரட்டப்பட்டனர். தேசத்துக்கு எதிராக வேலை செய்த எதிர்க் கட்சிகளும் ஒடுக்கப்பட்டு 1945 நவம்பர் 29-ல் யூகோஸ்லேவியா ஒரு சுதந்திர நாடாகப் பிரகடனம் செய்யப்பட்டது. தனித்தனியாக ஆறு குடியரசுப் பிராந்தியங்களைக் கொண்ட ஐக்கிய குடியரசாகச் சீக்கிரத்தில் மாறி அதற்கு மார்ஷல் டிட்டோ தலைவரானார். ஸ்டாலினை எதிர்த்து யூகோஸ்லாவ் நாட்டின் கம்யூனிஸ்டு கட்சியின் தனித்தன்மையை நிலைநிறுத்தியதுடன் முதலாளித்துவ நாடுகளான அமெரிக்கா, பிரான்ஸ், இங்கிலாந்து முதலிய வல்லரசுகளிடமிருந்தும், உலக பாங்கியிலிருந்தும் தேசத்தின் முன்னேற்றத்துக்கும் அபிவிருத்திக்கும் ஏராளமாகக் கடன்களையும் வாங்கி யிருக்கிறார்.

யூகோஸ்லேவியா ஒரு சிறிய நாடு. 98,766 சதுர மைல் பரப்புள்ளது. இதில் பெரும் பாகம் கரடு முரடான மலைப் பிரதேசம். அதிகமாகச் சாகுபடி செய்து விளைபொருள்களை உண்டாக்க முடியாது. ஜனத்தொகை 160 லக்ஷம். யுத்தகாலத்தில் மடிந்து போனவர்கள் ஏராளம். பத்தில் ஒருவர் மாண்டனர். இந்த நிலையில் நாட்டின் பொருளாதாரத்தை வளப்படுத்துவதற்குக் கம்யூனிஸ்டு கட்சி செயலில் புகுந்தது.

ஆனால் யூகோஸ்லேவியாவின் செயல் முறைக்கும் ருஷ்ய நாட்டுச் செயல் முறைக்கும் வித்தியாசங்கள் உள்ளன. லட்சியம் ஒன்றுதான்; ஆனால் அதை அடையும் முறையில்தான் வித்தியாசம் இருக்கிறது. முதலில் நிலங்களை யெல்லாம் தேசிய உடைமையாக்கினர். ஆனால் உற்பத்தி குறைந்து போனதைக் கண்டதும், 1953-ம் ஆண்டில் தனிப்பட்டவர்கள் நிலம் வைத்துக் கொள்வதை அங்கீகரித்து 10 ஹெக்டார் (24·7 ஏக்கர்) அளவில் உச்ச வரம்பையும் ஏற்படுத்தினார்கள். சமுதாயப் பண்ணையில் சேர யாரையும் நிர்ப்பந்தப்படுத்தவில்லை. அவரவர்கள் சுய விருப்பத்தின் பேரிலே செயல்படுவதை அனுமதித்தனர். அதேபோல் உற்பத்திச் சாதனங்கள் அரசாங்கத்தின் ஆதிபத்தியத்திலேயே இருக்க வேண்டுமென்று ஆலைத்தொழில்கள், சுரங்கங்கள், போக்குவரத்து, பாங்கிகள், வர்த்தகம், உணவுவிடுதிகள் முதலியவற்றைத் தேசியமயமாக்கினர். அரசாங்கத்தின் ஆதரவிலும், அதிகார வர்க்கத்தின் ஆதிக்கத்திலும், மக்களின் ஊக்கமும், உற்சாகமும், செயல் ஆர்வமும் குறைகின்றன என்பதைக் கண்டார்கள். ஆக்க வேலைகளைத் திட்டப்படி நிறைவேற்ற முடியாமல் அதிகார வர்க்கத்தினரின் ஆட்சி தடையாக நின்றதை உணர்ந்தனர். எனவே, படிப்படியாகத் தொழில்களையும் வர்த்தகத்தையும் அதிகாரிகள் பிடியிலிருந்து தளர்த்தி ஒவ்வொன்றும் சுயேச்சையுடன் அந்தந்த ஸ்தாபனத்திலுள்ளவர்களைக் கொண்டே இயங்கும்படி செய்திருக்கின்றனர். அரசாங்கத்தில் கீழ் மட்டத்திலுள்ளவர்களும் படிப்படியாக நிர்வாகச் சுதந்திரத்துடன் இயங்கும்படி வகை செய்யப்பட்டுள்ளது. விவசாயத்தில் தனியார் விவசாயமும் அங்கே இருக்கிறது. அத்துடன் சமூக விவசாயமும் இருக்கிறது. கூட்டுப் பண்ணைகளும், அரசாங்கப் பண்ணைகளும் ஆங்காங்கே இருக்கின்றன.

இவை யனைத்தும் நமக்குக் கலங்கரை விளக்கு போல் உதவுகின்றன. நமக்கும் அவற்றால் நன்மை உண்டாகுமேயானால், மற்ற நாடுகளின் அநுபவத்தை நாமும் பயன்படுத்திக் கொள்ளலாம். யூகோஸ்லேவியாவில் சோஷலிசம் இயங்கும் முறை இப்படித்தான் தனிப்பட்டு நிற்கிறது. அந்த நாட்டின் நிலைமைக்கு ஏற்ப, மக்களின் பண்பாட்டுக்கும் சுதந்திர உணர்ச்சிகளுக்கும் ஏற்ற முறையில் அவர்கள் திட்டம் போட்டு நிறைவேற்றுகின்றனர். அந்த முறையை மற்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் எண்ணம் இல்லை என்பதையும், ஒவ்வொரு நாடும் அதற்குத் தகுந்த முறை என்னவோ அதன்படி முன்னேற்றத்துக்கு வழி தேடிக் கொள்ள வேண்டுமென்றும் மார்ஷல் டிட்டோ கூறுகிறார். மேலும், சோஷலிஸ லட்சியத்தை அடைய ருஷ்ய மார்க்கம் ஒன்றுதான் வழி என்பதை அவர் ஒப்புக் கொள்வதில்லை. சோஷலிஸத்தில் பல வகைகள் இருக்கக் கூடும். ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று மாறுபட்டிருக்கக்கூடும். ஆகையால் லட்சியம் மட்டும் ஒன்றாக இருந்தால், முறைகளைப் பற்றிக் குறை கூறுவதில் அர்த்தமில்லை என்பது அவருடைய கொள்கை. பஞ்சசீலத்தை ஒத்த முறையிலேயே அவர் கொள்கை இருக்கிறதென்பது இதிலிருந்து தெரியவரும். பாரதம் மார்ஷல் டிட்டோவுக்கு ஏன் அவ்வளவு மதிப்புத் தருகிறது என்பதும் இதனால் நன்கு விளங்கும்.



தினசரி உணவை ஊட்டமிகச் செய்யும் டானிக்

மிக மிகச் சிக்கனமான செலவில், சாஸ்திரிய முறையில்—உணவை போஷாக்கு மிக்கதாகச் செய்கிறது. ஆல்போ-ஸாங் தினசரி உணவில் ஜீவ அணுக்களையும் வைடமின்களையும் வன்மூறச் செய்கிறது.

நோயுற்றகாலே ஆல்போ-ஸாங் எதிர்ப்பு சக்தியை எழுப்புகிறது. சிசுக்களும் சிறு குழந்தைகளும் உடல் உரமுறவும்—பலமுறவும் உணவு ஊட்டுகிறது. ஆல்போ-ஸாங் பாலூட்டும் தாய்மார்களையும், மூத்த வயதினரையும் ஆரோக்கியமாகவும் திடமாகவும் இருக்க உதவுகிறது. ஆல்போ-ஸாங் ருசியிக்க இனிக்கிறது—ஊட்டத்தைப் பெருக்கி விசேஷ பலன் அளிக்கிறது.

வனப்பு — வளம் நிறைந்த ஆரோக்கியத்திற்கு லட்சிய டானிக்கான ஆல்போ-ஸாங் சாப்பிடுங்கள்.




# ஆல்போ-ஸாங்

ஜே & ஜே டிஷேன்

ஹைதராபாத், தக்காணம்



# நவீன (நாகபுரி) வில்லுப்பாட்டு!

'அல்டாப்ஸ்'

" துந்தினத்தான் திங்குமிங்குத்தான்
தகிடுத்தான் கிடுத்தான் தகிடுகிடுத்தான்
தன்னனே தன்னத்தானே
துந்தினத்தான்
சொல்லு சொல்லு—ஆமாம் ஆமாம்!"

"என்ன மிஸ்டர் அளப்ஸ்! அமர்க்களமாக இருக்கிறதே பாட்டு! என்ன பாட்டு ஐயா இது?" என்று கேட்டேன் அளப்ஸ் என்று செல்லமாக அழைக்கப்படும் அளவிரியை.

"இது தெரியவில்லையா? அதுதான் அப்பா இப்ப பேஷன்! நாட்டுப் பாட்டு."

" தந்தானத்தான் தன்னேத்தானே
கெடுத்தான்
தன்னனே தன்னனே தில்லாலங்கடி—
சொல்லு சொல்லு—ஆமாம்! ஆமாம்!"

"ஒன்றும் விளங்கலியே அளப்ஸ்—விரிவுரை கூறுமின் பச்சை நாட்டுத் தமிழில்" என்று வேண்டினேன்.

"எந்த ஊரிலே, எந்தக் காட்டிலே, எந்த மேட்டிலேபிடிச்ச பாட்டு அப்பா, இது?" என்று விசாரணை செய்தேன்.

" நாட்டுப்பாட்டுக்கொரு மடையனடா-நான்
தன்னனேதானே—கேளு கேளு."

"சரி சொல்லு, சொல்லு!"

" ஆமாம், ஆமாம்."
ஆ...ஆ...ஆ...அஅஆ..."
நாகபுரியடா, ஆரஞ்சுப் பழமடா..."
"எங்கே எங்கே சொல்லு சொல்லு."

" அபயங்கரையடா ஆஆஆ....
சுபமான வாரமடா
மகத்தான காட்சியடா ஆஆஆ
மாபெரும் கூட்டமடா.
மண்டிவரும் மானிடமந்தையடா ஆஆஆ
மண்டைமேல் வெள்ளை கிரீடமடா
மூளைக்குள் ஒன்றுமில்லையடா
அதனை ஒட்டி அடக்கும்
அசகாய சூரனடா
அரிச்சனனும் கெட்டான்
விமனும் கெட்டான்
சோமனும் கெட்டான்
ராமனும் கெட்டான்
தில்லாலே தில்லாலங்கடி—
சொல்லு சொல்லு—
ஆமாம் ஆமாம்."

"அப்பனே! ஐயனே! அளப்பவனே! தயை கூர்ந்து கொஞ்சம் வசன நடைக்கு வரலாமோ?" எனப் பிரார்த்தித்தேன்.

"இந்த நாட்டுப் பாட்டை எங்கே கற்றுக் கொண்டாய் என்றால் ஒரேயடியாக அர்த்தமில்லாமல் பாடவே ஆரம்பித்து விட்டாயே, பெரிய வித்துவான் கணக்கா!" என்று வற்புறுத்தினேன்.

"இது கூடத் தெரியலையா பாய்ஜி! நாகபுரிக்குப் போனேனு! நான் ஏதோ ஆரஞ்சுப் பழ விஸனுச்சேன்னு அங்கே போனேன். போய் அந்தக் கும்பலிலேயும் அவர்கள் கிளப்பின புழுதியிலேயும் மாட்டிண்டேன். என்ன செய்ய! போனால் போகிறது என்று காங்கிரஸ் மகாசபைப் பந்தலில் நுழைய வேண்டியதாச்சா? என்னைத் தள்ளிக் கொண்டு போன வெள்ளைக் குல்லாக் கும்பல் அப்படிப்பட்ட இக்கட்டான நிலைமையிலே வச்சுடுத்து. நான் என்ன செய்ய! கும்பலோடே கோவிந்தா போட்டேன்" என்றார் அளப்ஸ்.

"அது சரி, என்னமோ 'சொல்லு சொல்லு, ஆமாம் ஆமாம்,' என்று பாடினயே, அது?" என்று கேட்டேன்.

"அதுதான் அப்பா லேட்டஸ்ட் ட்யூன்—அங்கே நான் கத்துண்டது. அதற்குப் பெயர் 'மக்கள் மெட்டு' என்கிறார்கள். இங்கிலீஷில் Folk Tune ஆம். எல்லோரும் கோஷ்டிகானமாகப் பாடவேண்டியது!"

"கோரஸா? அதற்கு நீ நாகபுரிக்குப் போய்க் கற்றுக்கொள்ள வேண்டுமா? இங்கேயே எந்தப் பஜனை மடத்துக்குப் போனாலும் போதுமே!"

"இது அசல் Folk Song அப்பா! நம்ம வில்லுப் பாட்டு இல்லை!"

"அதை இன்னும் இரண்டு மாசமானால் காமன் பண்டிகையில் கேட்கலாமே."

"இது இப்ப 'அன் காமன்' பண்டிகையிலே நான் கேட்டுக் கத்துக்கிட்டது அப்பா! என்னமோ சொல்றே! அந்தக் காங்கிரஸ் பந்தல், இந்த "ஆமாம் ஆமாம்" கோஷத்துலே பிச்சுண்டு போயிடுத்து!"

"என்ன அப்பா நம்ம கிட்டயே அளக்கறே! காங்கிரஸ் பந்தலுக்குத்தான் கூரையே கிடையாதாம். திறந்த வெளி தானே! எப்படிப் பிச்சுண்டு போகும்?"

"ஆமாம்! 'டாப்'பே இல்லை. அதனாலே தான் தைரியமாச் சொன்னேன்! கூரையிருந்தா அந்த 'ஆமாம்' கோஷத்தைக் கேட்டுப் பிச்சுண்டு போயிருக்கும். இப்ப நிலத்துக் கூரையைத்தான் பிச்சுண்டு போச்சு! விஷயங்களைச் சர்ச்சை செய்யறப்போ, தீர்மானங்கள் வர அப்போ 'ஆமாம்' கோஷம் வரும்......"

"அது என்ன தீர்மானம்? என்னமோ நிலத்துக் கூரை என்கிறயே!"

"முன்னாலேயே தீர்மானித்த தீர்மானம்! சாகுபடி நிலத்துக்கெல்லாம் கூரை போடணும்னு!"

"அடேயப்பா! அது சாத்தியமா?"

"அதுக்கு கோவாப்பரேட்டணும்."

"குழியைப் புரட்டணுமா?"

"இல்லை. கூட்டுறவு கூரை போடணும்."

"ஓகோ, கூட்டுறவு முறையிலே விவசாயம் பண்ணணுமா?"

"ஆமாம் ஆமாம்—சொல்லு சொல்லு."

"சரி, அப்புறம் நீ சொல்லு சொல்லு."

'' ஆமாம் ஆமாம்!
தனியானுக்கும் சொந்தக்காரனுக்கும்
நாசம் வந்ததே
உழுது பயிரிடுவோனுக்குப் பாசம்
வந்ததே
தன்னனேதானே தந்தனத்தானே
தந்தலையாட்டமும் போச்சே
தலையில்லாமல் வாட்டமுமாச்சே
யானைக்கும் எருதுக்கும் மவுசுபோச்சு!
பூனைக்கும்எலிக்கும்கொண்டாட்டமாச்சு''

'' என்ன அப்பா, உழுது உழைப்பவனுக்கு நிலத்தைப் பங்கு போட்டுக் கொடுத்தால் உனக்கு என்ன வந்தது? உனக்கும் எனக்கும் நிலமும் கிடையாது. உழைப்புக்கும் அவசியமில்லே.''

'' நாகபுரியில் அந்த அபயங்கர நகரத்தில் பார்த்த ஆட்கள் பல பேர்கள் நம்ம கட்சிதான். அந்த ஒரு மனுஷர் இல்லாவிட்டால் இந்த ஆமாம் பாட்டுக்கூட வராது அவர்களுக்கு.''

''ஓ! நம் ஒப்பற்ற தலைவர் நேருஜியா? அவர் என்ன செய்தார்?''

'' மன்னன்! அப்படி ஒருதரம் எழுந்து நின்றாலே போதும். கப்சிப் காமாசோமா! ஒரு ஒற்றைத் தும்மல் வருமா?''

'' ரொம்ப அளக்காதே! அப்புறம்?''

'' உலக சமாதானம், நம் வெளிநாட்டுக் கொள்கை — எல்லாம் ஷட்ஜத்தையும் ரிஷபத்தையும் எட்டிப் பிடிச்சுது.''

'' என்னப்பா! நாகபுரி போய் மூளை குழம்பி விட்டதா? சங்கீதத்தையும் ஜோதிஷத்தையும் கலக்கிறயே, ஒரேயடியாக ஷட்ஜமம் ரிஷபம் என்று.''

'' சரி, சரி, சரி, சரி, சரி அப்படீன்னு நம்ம வெளிநாட்டுக் கொள்கையை எல்லோரும் ஒரு வாயா ஆமோதிச்சுட்டா. அதைச் சொன்னேன்.''

'' ஓ, ஆமாம்; சொல்லு, அப்புறம்?''

'' நட்சத்திரங்களை எட்டிப் பிடிக்க முடியலே.''

'' அட, ராமச்சந்திரா! ஜோதிஷத்திலிருந்து வான சாஸ்திரத்துக்கும் தாவி விட்டாயே!''

'' அந்த மூங்கில் வேலிகளைத் தாவி சினிமா நட்சத்திரங்களைத் தரிசனம்செய்ய றத்துக்கு முந்தி சிவப்புத் தொப்பி குறுக்கிட்டது; மூங்கில் தடி முதுகில் பட்டது.''

'' ஓகோ! அந்த அறுபதிலே நீ ஒன்றா?''

'' இல்லே. கணக்கிலே அகப்படாததிலே நான் ஒன்று.''

'' அப்படியானால் சினிமா நட்சத்திரங்களுக்காக அப்படிக் கூட்டம் வந்ததுன்னு சொல்லு, சொல்லு!''

'' சந்தேகமென்ன? நம்ம வெண் தொப்பிகளைவிட வெண்முகப் பூச்சுக்கு அவ்வளவு மவுசு! நாளைக்கு யாராவது நட்சத்திரம் தேர்தலிலே போட்டி போட்டா வெண் தொப்பியானாலும் கருந் தொப்பியானாலும், செந்தொப்பியானாலும் மண் கவ்வ வேணும்!

'' நட்சத்திரங்கள் ஜொலித்தால்
உண்டு வாழ்வே!
அன்றி(பட) அடி குறைந்தால்
நம் எல்லோருக்கும் வீழ்வே!''

'' பேஷ்! உன் நாகபுரி வில்லுப் பாட்டு பகுத் அச்சா ஹை! வாஹ், வாஹ்! அனப்ஸ்ஜி! அது இருக்கட்டும்! புது காங்கிரஸ் தலைவர் யார் வரப் போகிறார்கள்?'' என்று ஸ்ரீமான் அனப்ஸைக் கேட்டேன்.

'' என் தலை தப்பினது தம்பிரான் புண்ணியம்'' என்றார் அனப்ஸ்.

''என்னப்பா அப்படி ஆபத்து வந்தது?''

'' எப்படியாவது ஒரு தெற்கத்தியார் தலையில் காங்கிரஸ் தலைமைத் தொப்பியைப் போட வேண்டும் என்று முயற்சி நடந்தது. சரியான தலை சிக்கவில்லே. ஆறு மாதத்துக்கும் எட்டு மாதத்துக்கும் யார்தலைவலியைவிலைக்குவாங்குவார்கள்?''

'' ஏன் நம் நிதி மந்திரியின் பெயர் பலமாக அடிபட்டதே!''

'' அவரைக் காங்கிரஸ் சிம்மாசனத்தில் ஏற்றிவிட்டால் நம்ம ராஜ்ய பொக்கிஷத்தை யார் பாதுகாப்பார்கள்? மைசூர்க்காரரும் வேண்டா வெறுப்பாக இருந்து விட்டார். எங்கேயாவது என் தலையில் அந்த வெண் குல்லாய்ப் பாரம் ஏறிவிடுமோ என்று தலை மறைவாக இருந்தேன். கடைசியில் குல்லாய் போட முடியாத ஒருவரைத்தான் ஏக மனதாகத் தேர்ந்தெடுப்பார்கள்.''

'' சொல்லு! யாரது?''

'' காங்கிரஸின் தலைமைப் பதவியை இதுவரை ஒரு பெண் ரத்தினம்தான் பெற்றிருக்கிறார். ஸ்ரீமதி சரோஜினி தேவி. இப்போது இரண்டாவதாக ஓர் பெண் மாணிக்கம் அதை வகிக்கப் போகிறார்— ஸ்ரீமதி இந்திராகாந்தி. ஆமாம்! ஆமாம்!''

'' இந்திரா ஆமாம் ஆமாம்தானே!''

'' வேறு எப்படி இருக்க முடியும்? மற்றவைகளுக் கெல்லாம் போடும் ஏகோபித்த ஆமாம் கூச்சலைவிட இந்த மாதிரி ஒரு நல்ல காரியத்துக்கு ஆமாம் போடுவது சிறந்ததுதானே! நமது நாட்டின் மாணிக்கம் ஜவாஹர்ஜி பெற்றெடுத்த செல்வம்! நம் நாட்டுத் தந்தையின் பெயரும் சேர்ந்துள்ளது. இதைவிட வேறு நல்ல தேர்வு எப்படிச் செய்வது?''

'' ஆமாம்! ஆமாம்!''



## திருமணம்

பொள்ளாச்சி ஸ்டார் மில்ஸ் A. T. சுப்பி செட்டியார் பௌத்திரியும் A. T. S. கருப்புசாமி செட்டியார் குமாரத்தியுமான சௌ. விசாலாக்ஷிக்கும், கோட்டூர் A. ஆறுமுகம் செட்டியார் குமாரன் திரு. சோமசுந்தரத்துக்கும் பொள்ளாச்சியில் டிசம்பர் 14-ம் தேதி வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



நவீன விஞ்ஞானம் நமக்கு அளித்திருக்கும் புதுமைகள் பல. அவை நம்மை வியப்பில் ஆழ்த்துவது மட்டுமன்றி நம் வாழ்வு வளம் பெற்றுத் திகழவும் பெரிதும் துணை புரிந்திருக்கின்றன. அவற்றுள் ஒன்றுதான் எக்ஸ்ரேக்கள் எனப்படும் புதிர்க் கதிர்கள். அக் கதிர்களின் புதிர் என்னவோ இன்று அவிழ்க்கப்பட்டு விட்டது; எனினும், புதிர்க்கதிர்கள் என்றே அவை அழைக்கப்பட்டு வருகின்றன.

# புதிர்க் கதிர்கள்

அ. நடராஜன்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி. மின்காந்தம், நீராவி இயந்திரம், தந்தி, புகைப்படம் எடுத்தல், செயற்கைச் சாயங்கள், பெட்ரோல் இயந்திரங்கள், நுண்ணுயிர்கள், தொலைபேசி, ஒலிப் பதிவுக் கருவி போன்ற விஞ்ஞானப் புதுமைகள் பல கண்டுபிடிக்கப்பட்டு விஞ்ஞானத்தின் வெற்றி எங்கும் ஓங்கியிருந்த காலம். இயற்கையின் இரகசியங்களைப் புரிந்து கொண்டு விட்ட களிப்பில் விஞ்ஞானம் பெருமிதத்துடன் தலைநிமிர்ந்து நின்றிருந்த காலம். அறிய வேண்டியவை அனைத்தையும் கண்டுபிடித்தாகி விட்டது என்றும், கண்டு பிடிக்கப்பட்டவைகளை மேன்மேலும் இனிமேல் அபிவிருத்தி செய்ய வேண்டியதுதான் பாக்கி என்றும் கூடச் சிலர் சொல்லத் தொடங்கி விட்டார்கள்! ஆனால், இயற்கையின் இரகசியங்கள் அவ்வளவு விரைவாக வற்றி விடுமா என்ன? அப்போதுதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது; இனம் தெரியாத ஒரு புது வகைக் கதிர்கள் இருப்பதை ரண்ட்கென்* என்னும் விஞ்ஞானி தற்செயலாகக் கண்டுபிடித்தார்.

ரண்ட்கென்: இந்தக் கதிர்கள் கண்டு பிடிக்கப்பட்ட வரலாற்றையும் அவற்றின் இயல்புகளையும் அறிந்து கொள்ளுவதற்கு முன் ஆராய்ச்சியாளர் ரண்ட்கெனைக் குறித்தும் சிறிது தெரிந்து கொள்ளலாம். ரண்ட்கென் (கி. பி 1845—1923) ஜெர்மனி தேசத்தைச் சேர்ந்த ஒரு பௌதிக ஆராய்ச்சியாளர்: ப்ரஷ்யாவிலுள்ள லென்னப் என்னும் இடத்தில் 1845-ம் ஆண்டு மார்ச் 8-ம் நாளன்று பிறந்தார். ஹாலந்திலும் ஜூரிச்சிலும் கல்வி பயின்ற பின் உர்ஸ்பெர்க் வந்து அங்கு அகஸ்ட் குண்ட் என்னும் விஞ்ஞானியிடம் சிறிது காலம் உதவியாளராக இருந்தார். பின்னர் ஸ்ட்ராஸ்பர்க், ஹோன்ஹீம், கைஸன் முதலிய இடங்களில் வேலை பார்த்து விட்டு மீண்டும் 1885-ல் உர்ஸ்பெர்க் பௌதிக ஆராய்ச்சிக் கழகத்தின் இயக்குனராகவும் பேராசிரியராகவும் அமர்ந்தார். அங்கு வேலை செய்துகொண்டிருந்த சமயத்தில் தான் அவர் எக்ஸ்-கதிர்களைக் கண்டு பிடிக்க நேர்ந்தது.



ரண்ட்கென்

தற்செயல் தலைகாட்டுகிறது: கண்ணாடிக் குழாய்களை ஊதித் தயாரிப்பதும், போட்டோ பிடிப்பதும் ரண்ட்கெனுக்கு விருப்பமான பொழுதுபோக்குகள். ஒரு வகையில் அந்தப் பொழுதுபோக்குகளே எக்ஸ் - கதிர்கள் கண்டுபிடிக்கப்பட்டதற்குக் காரணமாக இருந்தன என்று கூடச் சொல்லலாம். இரு நுனிகளிலும் S போன்ற வடிவமுடைய இரு குழல்கள் அமைந்த கண்ணாடிக் குழாய் ஒன்றை ரண்ட்கென் தயாரித்தார். அதிலிருந்து ஓர் இறைவையின் உதவியினால் வாயுவை நீக்கி அதில் பெரும் பாழிடம் ஒன்றை உண்டாக்கினார். மின்சாரத்தை அக் குழாயினுள் பாய்ச்சி, எதிர்முனைக் கதிர்கள் குழாயின் வளைவான இடங்களில் செல்லும்போது உராய்வு ஏதாவது உண்டாகிறதா என்பதை அறிய முற்பட்டார். அப்போதுதான் ஆராய்ச்சியில் தற்செயல் தலை காட்டியது.

புதிர்க் கதிர்கள்: ரண்ட்கென் பரிசோதனை நிகழ்த்திய பெஞ்சின்மீது ஒரு புத்தகமும் அதனுள் படித்த பக்கத்துக்கு அடையாளமாக ஒரு சாவியும் இருந்தன. தற்செயலாக அப் புத்தகம் போட்டோத்தட்டு வைக்கப்பட்டிருந்த உறை ஒன்றின்மீது கிடந்தது. பரிசோதனைகளை முடித்து விட்டு ஒரு நாள் உணவருந்தச் சென்றார் ரண்ட்கென். திரும்பி வந்தவுடன் வெளியிலுள்ள ஒரு காட்சியை போட்டோ எடுக்கலாம் எனக் கருதி மேஜையின் மீது கிடந்த போட்டோத் தட்டைப் பயன்படுத்திப் படம் பிடித்தார். படத்தைத் தயாரித்துப் பார்த்தபோது அதில் ஒரு சாவியின் நிழலும் இலேசாக விழுந்திருப்பதைக் கவனித்தார். அது அவருக்கு வியப்பளித்தது மட்டுமின்றி அவருடைய சிந்தனையையும் கிளறியது. மீண்டும் அதைச் செய்து பார்த்தபோது அங்ஙனமே

* ராண்ட்ஜென் என்றும் இதைச் சிலர் உச்சரிக்கின்றனர்.

நிகழ்ந்தது. எனவே கண்ணுக்குப் புலனாகாத கதிர்கள்தாம் அதற்குக் காரணமாக இருக்க வேண்டும் என்று அவர் அனுமானித்தார். மேலும், அவர் பரிசோதனை செய்து கொண்டிருந்த கண்ணாடிக் குழாயிலிருந்து சிறிது தூரத்தில் 'பேரியம் பிளாடினோ ஸயனைட்' என்னும் ரசாயனப் பொருள் பூசப்பெற்ற தட்டு ஒன்று பரிசோதனை நடக்கும்போது ஒளிர்வதையும் அவர் கண்டார். கண்ணாடிக் குழாயைக் கறுப்புக் காகிதத்தினால் முழுதும் மூடி மேலும் பல பரிசோதனைகளை அவர் நிகழ்த்தினார். அப்போதும் போட்டோத் தட்டுகள் பாதிக்கப் பட்டன. தோல் பையினுள், இருக்கும் நாணயங்கள், கையினுள் இருக்கும் எலும்புகள் எல்லாம் படத்தில் தெரிந்தன. எனவே அந்தக் கண்ணாடிக் குழாயினின்றுதான் அதுகாறும் அறியப்படாத, கண்ணுக்குப் புலனாகாத ஒரு வகைக் கதிர்கள் வெளிப்படுகின்றன என்று 1895 டிஸம்பரில் அறிவித்தார். அவற்றின் இயல்பு சரிவரத் தெரியவில்லை ஆதலால் 'எக்ஸ்-கதிர்கள்' (புதிர்க் கதிர்கள்) எனப் பெயரிட்டார். [விடை தெரியாத பொருளுக்கு 'எக்ஸ்' என்று வைத்துக் கொள்வது கணிதவியல் மரபு.] இதற்காக 1901-ம் ஆண்டில் ரண்ட்கெனுக்கு 'நோபெல் பரிசு' அளிக்கப்பட்டது.



'எக்ஸ்ரே' படத்தில் மனிதனின் தலை

அறிவிப்பு வெளியானவுடன் விஞ்ஞான உலகில் பெருத்த பரபரப்பு ஏற்பட்டது என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அறிவிப்பு வெளியான சில வாரங்களுக்குள் ஒவ்வொரு விஞ்ஞானியும் எக்ஸ்—கதிர்களை உண்டாக்கி ஆராயத் தொடங்கினர். அதுமட்டுமன்று; எக்ஸ் - கதிர்களைப் பற்றிக் கிளம்பிய வேடிக்கைப் பேச்சுகளும் ஹாஸ்யங்களும் பல; 'எக்ஸ்ரே கண்ணாடிகளை நாடகங்களின் போது உபயோகிப்பதைத் தடை செய்துவிடுவதற்குச் சட்டம் இயற்ற வேண்டும்' என்றாராம் ஒருவர்! 'தாங்கள் தயாரிக்கும் உள்ளாடைகள் எக்ஸ்-கதிர்களால் பாதிக்கப்படாதவை' என்று கூட ஒரு துணிக்கடை விளம்பரம் செய்ததாம்!



எக்ஸ்ரே எடுக்கும் கருவி.

**எக்ஸ் – கதிர்களின் அரும்பணி:** மருத்துவத் துறையில் மட்டுமின்றித் தொழில் போன்ற வேறு பல துறைகளிலும் எக்ஸ் கதிர்கள் புரிந்து வரும் மகத்தான தொண்டு நம்மைத் திகைக்க வைப்பதாகவே உள்ளது.

சதை, எலும்பு, உலோகங்கள் ஆகியவற்றினூடே வெவ்வேறு அளவுக்கு இவை ஊடுருவிச் செல்வதால் வைத்தியத்தில் இவற்றுக்குள்ள சிறப்பிடத்தை எளிதில் நாம் புரிந்துகொள்ளலாம். உடலினுள் நிகழும் அலுவல்கள் அனைத்தையும் 'எக்ஸ்-ரே'யின் உதவியினால் பார்க்கலாம். 1897-ல் நியூயார்க்கில் டாக்டர் மார்டன் என்பவர் முழு உடை அணிந்த, உயிருள்ள மனிதன் ஒருவனின் 'எக்ஸ்-ரே' படத்தை எடுத்துக் காண்பித்தாராம்! உடலினுள் புதைந்து போன குண்டுகள், குழந்தைகள் தவறுதலாக விழுங்கி விட்ட ஊசி போன்றவை, எலும்பு முறிவு ஆகியவை இருக்கும் இடங்களைத் திட்டமாகக் கண்டுபிடிக்க எக்ஸ் - கதிர்கள் துணை செய்கின்றன. அன்றியும், நோய்களைக் கண்டுபிடிக்கவும் அவற்றைக் குணப்படுத்தவும் அவை பயன்படுகின்றன. பல்லின் அடிப்பகுதியில் ஏற்படும் கட்டிகளைக் கண்டுபிடிக்கவும்; காச நோய், நிமோனியா, புற்றுநோய் ஆகியவற்றைக் கவனித்து ஆராயவும்; மூளை, முள்ளந்தண்டு சம்பந்தமான நோய்களையும் பெண்களின் கருப்பையைச் சார்ந்த கோளாறுகளையும் எலும்புகளில் ஏற்படும் கோளாறுகளையும் புரிந்து கொள்ளவும் எக்ஸ்-கதிர்கள்தாம் உதவுகின்றன. குடல், நுரையீரல் போன்ற எலும்பினால் ஆகியிருக்காத பகுதிகளை ஆராய்வதற்குப் பேரியம் ஸல்பேட் போன்ற ரஸாயனப் பொருள்கள் கலந்த மருந்து கொடுக்கப்படும்; இப்பொருள்களினூடே எக்ஸ் - கதிர்கள் ஊடுருவிச் செல்லாதாகையால் அப்பகுதிகளை நன்கு கவனிக்க முடியும்; நிரந்தரமான 'எக்ஸ்-ரே' படங்களும் எடுக்கலாம்.

நோய்களைக் குணப்படுத்தவும் எக்ஸ் - கதிர்கள் பயன்படுகின்றன. தோலின் மீது உண்டாகும் படை நோய், பலவகைச் சீழ்க் கட்டிகள், உள் உறுப்புக்களில் ஏற்படும் வேண்டாத சதை வளர்ச்சி, நரம்பு வலி, மூட்டுக்களில் நிகழும் வலியும், கக்குவான் இருமல், முகத்தில் ஏற்படும்

ஒருவகைப் பாரிச வாயு போன்றவைகளைக் குணப்படுத்த 'ஆழ் எக்ஸ்-ரே வைத்தியம்' என்னும் முறையை வைத்தியர்கள் பயன்படுத்துகின்றனர்.

உலோகப் பாலங்கள், ஆகாய விமானங்கள் முதலியவற்றுக்குத் தேவையான உலோக வார்ப்புகளிலுள்ளும், பிங்கான் தயாரிப்புக்களிலுள்ளும் ஏதாவதொரு காரணத்தினால் பிளவுகள் இருக்க நேரிடலாம். அவற்றைக் கண்டுபிடிக்கவும் எக்ஸ்-கதிர்கள் பயன்படுகின்றன. மேலும் அசல் ரத்தினங்களுக்கும் போலிகளுக்குமுள்ள வேறுபாட்டை உணரவும், சிப்பியிலுள்ள முத்து இருக்கிறதா என்பதை அறியவும், மூட்டைகளுக்குள் கள்ளச் சரக்குகள் பதுக்கப்பட்டுள்ளனவா என்பதைப் பார்க்கவும் இவை பெரிதும் உதவி புரிகின்றன.

பொருள்களின் உள் அமைப்பைக் குறித்த ஆய ஆராய்ச்சியில் புதிர்க் கதிர்கள் புதியதொரு சகாப்தத்தையே தோற்றுவித்தன எனக் கூறுதல் மிகையன்று. எதிர்முனைக் கதிர்கள் எதிர் மின்கலைத் துகள்களே (எலெக்ட்ரான்களே) எனக் கண்ட ஜே. ஜே. தாம்ஸன் எக்ஸ்-கதிர்கள் ஜடப்பொருள் மீது தாக்கும் போது எலெக்ட்ரான்கள் உண்டாவதைக் கவனித்தார்; மேலும், எலெக்ட்ரான்கள் எப்பொருளிலிருந்து உண்டாகும் அவை ஒரே தன்மையனவே என்பதையும் அவர் ஆராய்ந்தறிந்தார். தவிரவும், ஒவ்வொரு பொருளும் தக்க முறையில் இயக்கப்பட்டால் அதற்கே உரித்தான அலை நீளம் கொண்ட எக்ஸ் - கதிர்களை உண்டாக்கும் விவரமும் அறியப்பட்டது. 'எக்ஸ்-ரே அலைமாலை நோக்கி' என்னும் கருவியின் துணைகொண்டு அத்தகைய ஆராய்ச்சிகள் நிகழ்த்தப் பெறுகின்றன. வைரமும் க்ராபைட் என்னும் கரியும் ஒரே வகையைச் சேர்ந்தவையே. ஆனாலும் அவற்றின் அமைப்பில் வேறுபாடு உள்ளது; இதை அறிய உதவுவது புதிர்க் கதிர்களே. அம்மாதிரியே பல்வேறு படிகங்களின் உள்ளமைப்பும் இன்று தெரிய வந்துள்ளது.

உயிரியல் ஆராய்ச்சியிலும் எக்ஸ்-கதிர்களுக்கு முக்கியமானதொரு பங்கு உண்டு. தாவரங்கள், பிராணிகள் ஆகியவைகளின் அடிப்படை உயிர்ச் சத்தில் அவை என்னென்ன மாறுதல்களை உண்டாக்குகின்றன என்பதைப் பற்றி அறிஞர்கள் ஆராய்ந்து வருகின்றனர். உயிர்ப்பொருளின் அமைப்பு பற்றிய இரகசியத்தை அறிய இவ்வாராய்ச்சி பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை.

இப்போது சொல்லுங்கள், இப் புதிர்க் கதிர்களை வாழ்வளிக்கும் வண்ணக் கதிர்கள் என்று அழைத்தல் சாலப் பொருத்தும் அல்லவா?

---

இக் கட்டுரையில் வரும் போட்டோப் படங்களைக் கொடுத்து உதவியவர்கள்: பிலிப்ஸ் இந்தியா லிமிடெட், சென்னை - 2.












# மாளவிகாக்நிமித்ரம்




ஆங்கிலக் கவி ஷேக்ஸ்பியர் உயர்ந்தவரா, பாரதநாட்டுக் கவி காளிதாஸன் உயர்ந்தவரா என்றெல்லாம் கல்லூரி மாணாக்கர்களிடையே விவாதம் நடப்பது வழக்கம். ஷேக்ஸ்பியரின் கவிதை நயங்களையும், நாடகக் கலைத் திறனையும் பற்றி ஆங்கிலத்தில் மோகங் கொண்டவர்கள் ஓயாது பேசுவார்கள். அவருடைய நாடகங்களை நடித்தும் காட்டுவார்கள். வெனிஸ் தேசத்து வர்த்தகனையும் ஜூலியஸ் ஸீஸரையும் ஒதெல்லோவையும் சில மாணவர் சங்கங்கள் நடித்து மகிழ்வர். நம் நாட்டுப் பண்பில் பற்றுள்ளவர்கள் காளிதாஸனுடைய ரஸ உணர்ச்சிகளையும், உவமைகளையும் ரஸித்து மகிழ்ந்து இது காளிதாஸனால்தான் முடியும் என்று பூரிப்புடன் பேசுவர். சாகுந்தலத்தையும் நடித்துக் காட்டுவர்.

இதெல்லாம் கல்லூரியில் நடக்கும் நிகழ்ச்சிகள். கலாசாலையை விட்டுப் பொது நாடகமேடைக்குச் சாதாரணமாக வருவதில்லை. ஒவ்வொரு சமயம் சென்னை ஸம்ஸ்கிருத அகாடமி, சுகுணவிலாஸ சபை போன்ற குழுவினர்கள் இதர நாடகங்களைப் போல இவற்றையும் நடத்தியிருக்கின்றனர். அப்படியிருந்தாலும் முன்னதாகவே டிக்கட்டுகளை நண்பர்கள் தலையில் கட்டிவிட்டு நாடகங்களுக்கு ஆள் சேர்த்துக் கொள்ளுவார்கள். ஸம்ஸ்கிருத நாடகம் பகிரங்கமாக வெளி வராமைக்கு ஒரு முக்கிய காரணம் பயம். நடிப்பவர்களுக்கும் பயம்; பார்ப்பவர்களுக்கும் பயம். பழக்கத்தில் இல்லாத பாஷையை நாடகத்தில் பேசி, பாட்டாகவும் பாடி, எப்படிப் புரிய வைப்பது. இம்முயற்சியில் எப்படி வெற்றி காண்பது என்று நாடகக் குழுவினருக்குப் பயம். "ஸம்ஸ்கிருதம் தான் செத்த பாஷையாயிற்றே, நமக்கு எங்கே விளங்கப் போகிறது?" என்று



எண்ணி நாடகம் பார்ப்பவர்களுக்கும் பயம். இந்த இரண்டு பயங்களுக்கிடையில் ஸம்ஸ்கிருத நாடகங்கள் "பர்தா" முறையிலிருந்து வந்தன. காளிதாஸனும் பவபூதியும் ஓரியண்டல் லைப்ரரியில் நித்திரையில் ஆழ்ந்திருந்தனர்.

இந்தப் பர்தாவிலிருந்து வெளிவரும் யோகம் இப்போது அவர்களுக்கு வந்துள்ளது. தேசிய மொழிகளில் ஸம்ஸ்கிருதமும் ஒன்றல்லவா? நமது நாட்டின் உயர் செல்வங்களெல்லாம் அந்த மொழியில் இருக்கின்றன அல்லவா? காளிதாஸனைப் பற்றிக் கவனம் வந்துவிட்டது. அவன் காலத்தில் உஜ்ஜயினி சமஸ்தானம் சகல கலைகளிலும் சிறப்புற்று விளங்கியது. இப்போது அதே உஜ்ஜயினி நகரத்தில் சமீபத்தில் காளிதாஸன் விழா கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. அந்த விழாவில் அவனுடைய நாடகங்களில் ஒன்றாகிய 'மாளவிகாக்நிமித்ர'த்தை மத்திய பிரதேச அரசாங்கத்தின் அழைப்புக்கு இணங்கி நமது சென்னையிலிருந்து ஒரு கோஷ்டி அங்கு சென்று நடத்திச் சபையோரைப் பிரமிக்க வைத்தது. "சபாஷ்," "சபாஷ்" என்று வந்திருந்தவர்கள் மெச்சினார்கள். இந்த அற்புத சிருஷ்டியை மீண்டும் ஒருமுறை கண்டுகளிக்க வேண்டுமென்று மத்தியப் பிரதேச கவர்னர் இக்குழுவினரைப் போபாலுக்கு (இதுதான் அந்த ராஜ்யத்தின் தலைநகரம்) அழைத்து அங்கும் இந்த நாடகம் நடிக்கப்பட்டது.

இதில் வியப்பொன்றும் இல்லைதான். ஸம்ஸ்கிருதத்தைத் தென்னாட்டில் நாம் பேணி வளர்ப்பதுபோல இப்போதெல்லாம் யார் வளர்க்கிறார்கள்? அதன் கவி நயங்களையும் ஒலி இன்பத்தையும் நம்மைப் போல் யார் அனுபவிக்கிறார்கள்? வெற்றிகரமாக ஒரு நாடகத்தை நடத்திப் புகழ் அடைய வேண்டுமானால் நம்மைத் தவிர யார் செய்ய முடியும்? சென்னையிலிருந்து ஒரு குழுவினர் சென்று ஜெயக்கொடியை உஜ்ஜயினியிலும் போபாலிலும் நாட்டிய தென்றால் அது நாம் எதிர்பார்க்கக் கூடியதே. நமக்கு ஆச்சரியமில்லை. மத்தியப் பிரதேசக்காரர்களுக்குத்தான் ஆச்சரியம்.

ஆனால் நமது சென்னைக் கோஷ்டியினர் உஜ்ஜயினி சென்று செய்து காட்டிய அற்புதத்தை நாமே பார்த்து அனுபவிக்க வேண்டாமா? அந்த அரிய சந்தர்ப்பத்தைச் சென்னை சங்கீத வித்வத் சபை இந்த சீஸனில் சென்னை ரசிகப் பெருமக்களுக்கு அளித்தது. சரியாகச் சொல்ல வேண்டுமானால் 'ஸம்ஸ்கிருத ரங்கம்' வித்வத் சபை

ஆதரவில் வழங்கிற்று என்று சொல்ல வேண்டும். சாதாரணமாக வித்வத் சபை நிகழ்ச்சிகளில் சங்கீதக் கச்சேரிகளும் பரத நாட்டியமும் தான் இடம் பெற்றிருக்கும். இந்த வருஷமும் அப்படியேதான் நிகழ்ச்சி நிரலும் அமைந்திருந்தது. வழக்கம்போல் ஜனவரி 2-ம் தேதி வித்வத் சதஸுடன் விழா முடிந்தது. ஆனால் பிரதான உத்ஸவத்துக்குப் பின் விடாயாத்தி நடத்துவது போல், இந்த நாடகம் சதஸுக்கு அடுத்த நாள் நடந்தது. "பலருடைய வேண்டுகோளுக்கு இணங்கி இந்த நாடகம் நடத்தப்படும்" என்று நாடகபாணியில் அறிவித்தனர்.

இவ்வாறு தயங்குவதற்கு என்ன காரணமிருக்கக் கூடும் என்று யோசித்தேன். பின்னால்தான் விவரம் புரிந்தது. காரணம், பயந்தான். ரசிகர்கள் பாராட்டுவார்களோ அல்லது முன்காலங்களில் நாடகங்களில் நடப்பதுபோல் நடத்தி விடுவார்களோ என்று பயம். வித்வத் சபை அரங்கம் கச்சேரி செய்வதற்கு மட்டும் ஏற்பட்டது. நாடகத்துக்கு ஏற்றதல்ல. குறுகிய இடம், வசதிகள் குறைவு. ஆகவே இங்கே நடப்பதைப் பார்த்து விட்டு, "உஜ்ஜயினியில்கூட இப்படித்தான் இருந்ததோ?" என்று ரசிகர்கள் எண்ணி விட்டால் என்ன செய்வது என்று மற்றொரு பயம்.

ஆனால் ரசிகர்கள் மட்டும் ஏமாறவில்லை. சென்னை ரசிகர்களல்லவா? நோட்டம் தெரிந்தவர்கள். ஒரு நல்ல விருந்து என்றால் கூட்டம் குவிவது போல் அன்று கொட்டகையில் ஒரு நாற்காலிகூடக் காலி இல்லை. சம்ஸ்கிருத பண்டிதர் முதல் சாதாரணத் தமிழ் மகன் வரை, தொழிலதிபர் முதல் குமாஸ்தா வரை, ஆண்களும் பெண்களும் குழுமியிருந்தனர். ஏதோ ஒரு புதுமையைக் காணப் போகிறோம் என்ற ஆர்வத்தில் கூடியிருந்தனர். ஆனால் அதைவிட ஆச்சரியம், அத்தனை பேரும் கடைசிக் காட்சி முடியும் வரையில் உட்கார்ந்து, இடம் விட்டுப் பெயராமல் ரசித்துக் கொண்டிருந்தனர். இரண்டரை மணி நேரம் நாடகம் பார்த்த பின், "இது ஒரு மெச்சத்தக்க நிகழ்ச்சி", "அபாரம்", "பேஷ்". "பலே பேஷ்" என்றெல்லாம் புகழ்ந்து பேசியவண்ணமிருந்தனர்.

ஒரு ஸம்ஸ்கிருத நாடகத்துக்கு எவ்வளவு ஆதரவு இருக்கிறது என்பதை அன்று காண முடிந்தது. இந்தப் பாஷையை எவ்வளவு தெளிவாக உச்சரிக்க முடியும், எவ்வளவு சுலபமாக கருத்துக்களைப் புரிய வைக்க முடியும் என்பதையும் அன்று காண முடிந்தது. குரலை உயர்த்தியும் தாழ்த்தியும், பாவங்களை எவ்வளவு சுலபமாக பாஷைப் பரிச்சயமில்லாதவர்களுக்கும் விளங்க வைக்க முடியும் என்பதையும் அன்று காண முடிந்தது.

கதை என்னமோ சிறியது. இல்லை, நடிப்பதற்காகச் சுருக்கப்பட்டிருந்தது. நடன ஆசிரியர் கணதாசரிடம் பரத



நாட்டியம் பயின்று புகழ் அடைந்த மாளவிகை என்னும் அழகு உருவத்தைக் காண ஆவல் கொள்கிறான் விதிசா நாட்டு மன்னன் அக்னிமித்திரன். அரண்மனை நாடகசாலையில் மன்னன் முன் நடனத்துக்கு ஏற்பாடாகிறது. நடனத்தைக் கண்டு களித்த அரசன் உள்ளத்தில் காதல் எழுகிறது. தனிமையில் மாளவிகையைக் கண்டு தன் விருப்பத்தைத் தெரிவிக்கத் துடிக்கிறான். ஏற்கனவே ராணி; இளைய ராணி என்று இரண்டு பத்னியரையுடைய அக்னிமித்திரனுக்கு, மாளவிகையுடன் காதல் புரியச் சந்தர்ப்பம் எழவில்லை. ஏற்ற சந்தர்ப்பங்களை வெகு தந்திரமாக உண்டாக்கித் தருகிறார் அரசனின் தோழர் விதூஷகர். அதற்கு உடந்தையாக மாளவிகையின் தோழியும் உதவிபுரிகின்றனர். சந்திப்பு ஏற்படுகிறது. காதல் நிறைவேறுகிறது. மாளவிகை வெறும் நாட்டியப் பெண் அன்று. ஒரு ராஜகுமாரி என்ற செய்தி வெளியாகிறது. மாளவிகைக்கும் அக்னிமித்திரனுக்கும் மணமாகிறது.

பதினொரு காட்சிகளுக்குள் நாடகம் அடங்கி விடுகிறது. மாளவிகையின் நடனமும், அசோகமரம் பூத்துக் குலுங்கப் பத்தினிப் பெண் மாளவிகை தன் பாதத்தால் மரத்தை உதைக்கும் "தோஹத-பூரண"க் காட்சியும் பார்ப்பவர்களைக் காளிதாசன் காலத்து விதிசா நகருக்கே அழைத்துச் சென்றன. கணதாஸரின் கட்டுவாங்கமும், விதூஷகரின் ஹாஸ்ய நடிப்புக்களும் மிகவும் பாராட்டப்பட வேண்டிய அம்சங்கள். அக்னிமித்திரன் தன் காதலைத் தெரிவித்துத் தன்னை ஏற்றுக் கொள்ளும்படி மாளவிகையிடம் கூறும் கட்டம் கண்யம் நிறைந்த பாகம். அக்னிமித்திரனின் நடிப்பில் ராஜனுடைய கம்பீரத்தையும் கலைஞனின் ரசிக உள்ளத்தையும், கட்டுப்பாட்டுக்குள் அடங்கி நிற்கும் உணர்ச்சியையும்காண முடிகிறது. இனிமையான வீணை ஒலியும் குழலோசையும் குரலுடன் இணையப் பின்னணி கீதம் உண்மையில் பின்னணியாகவே ஒலித்துக் கொண்டிருந்தது.

இவ்வளவு வெற்றிகரமாக நாடகத்தை நடத்தியதற்குப் பொறுப்பாளிகள் யார் என்று நீங்கள் அறிய ஆவல் கொள்

வீர்களல்லவா? எல்லோரும் உயர்ந்த உத்தியோகங்களும் பதவிகளும் வகிப்பவர்கள். ஏறக்குறைய எல்லோருமே உயர் படிப்புப் படித்த பட்டதாரிகள். நாடகத்தைத் தயாரித்து அளித்தவர் சென்னை சர்வகலாசாலை ஸம்ஸ்கிருதப் பேராசிரியரும் ஸம்ஸ்கிருத ரங்கத் தலைவருமான டாக்டர் வி. ராகவன். விரிவான ஆராய்ச்சிகள் நடத்திக் கீதம், நாட்டியம், நிருத்தம் எல்லாம் காளிதாஸன் காலத்தில் எப்படி இருந்தனவோ, அவற்றைப்போல் நம் முன் காட்ட மிகுந்த பிரயாசை எடுத்து அதில் வெற்றியும் கண்டிருக்கிறார். ராகங்களும், ஆலாபனக் கிரமங்களும் கூட விரிவான ஆராய்ச்சியின் பேரில் அமைக்கப்பட்டிருந்தன. அவருக்கு உதவியா யிருந்தவர்கள் திரு ஜி. கே. சேஷகிரியும், சென்னை சர்வகலாசாலையைச் சார்ந்த திரு வி. எஸ். சுந்தரமும். விதூஷகராக நடித்த மாநிலக் கல்லூரி ஸம்ஸ்கிருதப் பேராசிரியர் திரு டி. கே. வேங்கடேச்வரனும். தென்னிந்திய கல்வி டிரஸ்டின் பெண்கள் கல்லூரியைச் சேர்ந்த பலரும் இதில் கலந்து கொண்டனர். முக்கியமாக மாளவிகையின் பாகத்தை ஏற்றுத் திறமையாக நடித்த ஸ்ரீமதி நிர்மலா ராமச்சந்திரனையும், பண்டித கௌசிகியின் பாகத்தை ஏற்று நடித்த வித்வத் சபையில் அரசாங்க உபகாரச் சம்பளம் பெற்றுச் சங்கீதம் பயிலும் குமாரி ரங்கநாயகியையும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். பின்னணி கீதம் வழங்கியவர்கள் எல்லாம் சங்கீத பூஷணங்களும் வித்வான்களும். சங்கீத கலாநிதி திரு டி. என். சுவாமிநாதப் பிள்ளை அமைத்துத் தந்த மெட்டில் மாளவிகையின் ஆட்டத்தில் வரும் பாட்டு பாடப்பட்டது. முறை தவறாது பின்னணி இசையை வழங்கிய பெருமை வீணை வாசித்த திரு எஸ். ராமநாதனையும், வித்வான் திரு பி. கிருஷ்ணமூர்த்தியையும், குழலோசை திரு விச்வநாத ராவையும் சாரும். நாட்டிய பாகத்தைப் பொறுப் பேற்று நிறைவேற்றி வைத்தவர்கள் ஸ்ரீமதி டி. பாலசரஸ்வதியும் திரு கணேசனும். காட்சி ஜோடனைகளுக்கும், ஆடை அலங்காரங்களுக்கும் கலாசாகரம் ராஜகோபால் பொறுப்பேற்றுத் திறமையாக நிர்வகித்தார்.

இப்போது தெரிகிறதல்லவா நாடகம் முதல்தரமாக அமைந்ததற்குக் காரணம். ரசிகர்களின் பெருமதிப்பைப் பெற்றுவிட்ட 'ஸம்ஸ்கிருத ரங்கம்' இந்த நாடகத்தை மற்றொரு முறை கூடிய சீக்கிரத்தில் நடித்துக்காட்டத் தீர்மானித்திருக்கிறது. ஏற்கனவே மூன்று முறை நடித்து விட்டதால், அடுத்த முறை இந்நாடகத்தைக் காணும்போது இன்னும் மெருகு பெற்றுப் பிரகாசிக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

## தேனலைகள்

நித்திக்கும் தேனெனப் பன்னிரண்டு சிறுகதைகள் கவிதை நடையிலே இந்நூலில் இடம் பெற்றுள்ளன. சொல்லாட்சியிலே திறம் பெற்ற கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் புனைந்தவை என்றால், கேட்கவும் வேண்டுமா? இன்பத்தேன் பாய்ச்சும் கவிநயம் கொண்ட கருத்துச் செறிந்த கதைகளிலே 'சிற்பி'யின் கதை சிறந்து விளங்குகிறது.

பொன்னமுகன் என்னும் கலைஞன் படைத்த சேரன் செங்குட்டுவனின் சிலையைக் கண்டு பாண்டிநாட்டு இளவரசி வேல்விழி, உயிர் கொண்ட மானிடனே, தன்னைக் காமக்கண் கண்டு நோக்குவதாகக் கருதி—தன் கற்பு அழிந்துவிடும் என்று எண்ணிக் கூர்மையான கருங்கல் எடுத்துக் கண்ணைக் குறி வைத்து எய்கிறாள். 'தன் கலை ஒழிந்தது' என்று வீறிட்டபடி ஓடி வருகிறான் சிற்பி.

அவனும் அவளும் அம்பிகாபதியும் அமராவதியுமாக ஆகும் கதை—அம்பிகாபதி—அமராவதி சிலை அவர்களை வாழ்த்தும் கதை—காவிய நயமும் ஓவியச் சிறப்பும் சேரச் சமைக்கப்பட்டிருக்கிறது.

'மருதாணி' என்னும் கதையிலே—காதலர்களின் உள்ளப் போக்கையும், 'யாழ்' என்னும் கதையிலே கற்பின் சிறப்பையும், 'மடல்' என்னும் கதையிலே 'சிலப்பதிகார'க் காவியத்தின் சிறப்பியல்பு பெற்ற 'வரிப் பாடல்'களின் வளத்தையும் காணலாம்.

பிரசுரம்: முத்துவேல் பதிப்பகம்., 77, மதுரைச்சாலை, திருச்சி—8. விலை: ரூ.1-50

## ஒன்பதாவது இரவு

வாள் பிடிக்க வேண்டிய கை, எழுதுகோலைப் பிடித்தது. "வீரனுக்கு அடையாளம் வாள், எழுதுகோல் அல்ல" என்றார் அக்பர். "கவியை விடச் சிறந்த நண்பன் இடையாது. வாளினும் கூரியவை சொற்கள்!" என்றான் பிருத்விகுமார்.

பாதுஷா அக்பர் கொண்டாடும் 'கவரோஸா'வின் உண்மை உருவத்தையும், பெண்களின் பூஷணமான கற்பின் பெருமையையும் சித்திரிக்கும் சுவாரஸ்யமான கதைதான் 'ஒன்பதாவது இரவு'.

'பாலைவனத்துப் புஷ்பம்' என்னும் கதையில் அவுரங்கசீப், ராஜபுத்ர ஸ்திரீயான நிருபமாவிடம் தகாத முறையில் நடந்து கொள்ள முற்படுவதையும், நிருபமா ராஜபுத்ர ஸ்திரீகளுக்கே உரித்தான வீரத்துடன் அவனோடு எதிர்த்துப் போராடுவதையும், நாட்டின் சுதந்திரத்தைக் காக்கக் கவி கருணாபதிக்திரனின் எழுதுகோல் கூரிய வாளாக உபயோகப் படுவதையும் காண்கிறோம்.

ராஜபுதனத்தை நிலைக் களனாகக் கொண்டு சரித்திரச் சான்றுகளுடன் அமைக்கப்பட்டுள்ள ஐந்து கதைகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. ஆவலைத் தூண்டிவிடும் வண்ணம் கதைகளைப் புனைந்துள்ளார் ஆசிரியர் சாண்டில்யன்.

பிரசுரம்: புத்தகப் பூங்கா, 29 ஹாரிங்டன் சாலை, சென்னை—30. விலை: 1-50

## நீங்களும் உங்கள் மோட்டாரும்

மோட்டார் கார்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே போகிறது நம் நாட்டில்.

மோட்டார்களின் எண்ணிக்கை அதிகரிக்க, அதிகரிக்க அதன் சொந்தக்காரர்கள் ஓட்டுபவர்கள் ஆகியோரின் பொறுப்பும் அதிகமாகிறது. அப்பொறுப்பைத் தட்டிக் கழிக்க முற்பட்டால் விபத்துக்கள் அதிகரிக்கின்றன. இதோ ஒரு நல்ல உதாரணம். ஒரு மோட்டார் இருபது மைல் வேகத்தில் போகும்போது அதை பிரேக் போட்டு நிறுத்தினால் வண்டி உடனே நின்று விடுவதில்லை. ஐம்பத்திரண்டு அடி நகர்ந்த பின்னர்தான் மோட்டார் நிற்கிறது. அதுவே நாற்பது மைல் வேகத்தில் போகும்போது 'பிரேக்' போட்டால் நூற்று அறுபத்தி நான்கு அடி தூரம் போன பிறகுதான் வண்டி நிற்கிறது. அதாவது 'பிரேக்' சரியானபடி இயங்கினால்!

இதிலிருந்து மோட்டார் ஓட்டிகள் வேகக் கட்டுப்பாடு சட்டத்தை மீறக் கூடாததன் அவசியமும், 'பிரேக்கு'களைப் பழுதில்லாமல் வைத்திருக்க வேண்டியதன் அவசியமும் தெளிவாகிறதல்லவா?

இதைப் போன்று இன்னும் எத்தனை எத்தனையோ உபயோகமான, அவசியமான விஷயங்களைத் தெளிவாக எடுத்துக் கூறுகிறது இந்தப் புத்தகம். மோட்டாரை ஓட்ட ஆரம்பிப்பதிலிருந்து, ஒவ்வொரு சிறு கோளாறையும் கண்டுபிடித்துச் சரிப்படுத்தும் விதம் வரையில் எல்லா விவரங்களும் அடங்கிய புத்தகம் இது.

மோட்டார் ஓட்டக் கற்றுக் கொண்டால் மட்டும் போதாது. அதைப் பாதுகாக்கவும் அறிந்துகொள்ள வேண்டும். இயந்திரமாக அதனைக் கருதாமல் உயிருள்ளதாக எண்ணி அன்பு செலுத்த வேண்டும். குழந்தையைப் போல் பாவித்துக் காக்க வேண்டும்.

மோட்டாரை ஓட்டும் ஒவ்வொருவரும் அது இயங்கும் விதத்தையும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். மெக்கானிக்குகளுக்கும் சரி, கார் ஓட்டுபவர்களுக்கும் சரி, இந்தப் புத்தகம் பேருதவி புரியும்.

பிரசுரம்: ஹிக்கிம் பாதம்ஸ் பிரைவேட் லிமிடெட், மவுண்ட் ரோட், சென்னை 2. விலை: ரூபாய் 2-00.

# குடும்பத்தில்

வீட்டுக்குள் நுழைந்து கோட்டைக் கழற்றிச் சுவரிலிருந்த பெரிய ஆணியின்மீது மாட்டினார் ராதாகிருஷ்ணன். ஆவலுடன் எதிர்பார்த்திருந்த காரியம் தோல்வியாக முடிந்த சோகம், அவருடைய முகத்தில் இருந்த சுருக்கங்களை அதிகமாக எடுத்துக் காட்டியது.

தந்தையின் வரவுக்காக ஆவலுடன் காத்திருந்த சுமதி அவருடைய காலடி ஓசையைக் கேட்டுச் சமையலறையிலிருந்து ஓடி வந்தாள். அவர் முகத்தில் தாண்டவமாடிக் கொண்டிருந்த வேதனையைக் கண்ட அவளுக்கு வருத்தம் தாங்கவில்லை. தந்தையின் துயரம் மகளின் மனத்தைச் சுட்டெரித்தது. அப்போது, மறுபடியும் போன காரியம் தோல்விதானு?

ராதாகிருஷ்ணன் அவள் அருகே சென்று அவளுடைய தலைமயிரைக் கோதி விட்டார். உடனே பேசவில்லை. கடைசியாக வார்த்தைகள் வெளிவந்தபோது அவருடைய குரல் ஏமாற்றத்தினுல் நடுங்கியது.

"இந்த இடமும் கூடிவராது போலிருக்கிறது, அம்மா!"

சுமதி மௌனமாயிருந்தாள். நற்குணமே உருவான தன் தந்தையைப் பயனில்லாமல் மேலும் கீழும் நடக்க வைத்த பிள்ளை வீட்டுக்காரர் எல்லோரையும் சேர்த்து வைத்து அறைய வேண்டும் போலிருந்தது அவளுக்கு.

ஏதோ தவறு செய்துவிட்டு மன்னிப்பு கேட்பவர் போல் அவர் தொடர்ந்தார்: "பத்தாயிரம் ரூபாய் கையில் கொடுத்து அதைத்



ருக்மிணி பார்த்தசாரதி



தவிர, கல்யாணத்தை நன்ருகச் செய்து கொடுக்க வேண்டுமாம். அவ்வளவுபணத்துக்கு நான் எங்கேயம்மா போவேன்?"

"அப்பா! நான் எவ்வளவு சொன்னுலும் நீங்கள் கேட்க மாட்டேன் என்கிறீர்கள். நாம் ஏழைகள் என்பதற்காக எவ்வளவு அவமானம்தான் பொறுக்க முடியும்? என்னைப் பிள்ளையாக நினைத்துக் கொள்ளுங்கள். மேலே படிக்க வையுங்கள்."

"அப்படிச் செய்தேனுனல் உலகம் என்னை என்ன சொல்லும், தெரியுமா? 'கல்யாணம் செய்ய வேண்டிய காலத்தில் பெண்ணை உழைக்க வைத்து வீட்டில் உட்கார்ந்து கொண்டு வயிறு புடைக்கச் சாப்பிடுகிருன் கிழவன்' என்று அவதூறு பேசும், அம்மா!"

"அது உண்மையென்றே வைத்துக் கொள்ளலாம். நாம் செய்யக் கூடியது என்ன இருக்கிறது? இரண்டாவது தாரமாக யாருக்காவது...." என்ருள் சுமதி.

"சுமதி! உன் பெயருக்கேற்ற புத்தி உன்னிடம் இல்லையே! அப்படிச் செய்ய என் மனம் எப்படியம்மா ஒப்பும்? வேறு வழி இல்லாவிட்டால் உன்னைப் படிக்க வைத்து விடுகிறேன்."

எதையோ நினைத்துக் கொண்டவள் போல் உள்ளே ஓடிச் சென்றாள் சுமதி. காப்பியும் கையுமாய் வெளியேவந்தாள்.

"முதலில் இதைச் சாப்பிடுங்கள், அப்பா! பேசிக் கொண்டேயிருந்ததில் மறந்தே போய்விட்டேன்."

தந்தையிடம் காப்பியைக் கொடுத்த வாறே முறுவலித்தாள் சுமதி. அந்த முறுவல் கிழவரின் மனச்சுமையைச் சற்றே குறைத்தது. "உம்! இவளை மணக்க எவன் கொடுத்து வைத்திருக் கிறானோ!" என்று மனத்தில் எண்ணிக் கொண்டார்.

எண்ணிறந்த எண்ணங்கள் ஒரே சம யத்தில் மனத்தைத் தாக்க, தனிமையை நாடிச் சமையலறைக்குச் சென்றாள் சுமதி. கல்யாணத்தில் அவளுக்கு அதிகம் விருப்பமில்லை யென்றாலும் தந்தையின் தோல்வி அவளை வாட்டியது. அவருக் காக, அவருடைய மனச்சாந்திக்காக ஏதாவது இடம் கூடி வராதா என்று ஏங்கினாள். ராதாகிருஷ்ணன் பழைய காலத்து மனிதர். பெண்ணென்றால் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்பது அவருடைய இரத்தத்தில் ஊறி, மனத்தில் இடம் பெற்ற மறுக்க முடி யாத விதி. அதை மறுத்துப் பேசவும் முடியும் என்ற எண்ணம் அவர் இத யத்தை எட்டிப் பார்த்ததும் கிடையாது. பலரைப் போல் அவரும் பெண்ணை இண்டர்மீடியட் வரையில் படிக்கவைத்த தென்னவோ உண்மைதான். சுமதி பரீட்சையில் எல்லோரையும் விட அதி அற்புதமாய் வெற்றியடைந்த போது அவர் மகிழ்ந்தார். ஆனால் அதை அவர் பெரிய விஷயமாகக் கருதவில்லை. நல்ல இடத்தில் அவளுக்குக் கல்யாணம் நிச் சயமாகி யிருந்தால் அவர் எவ்வளவோ அதிகமாக மகிழ்ந்திருப்பார். பாவம்! அவருடைய துரதிருஷ்டமோ, அல்லது சுமதியின் தலைவிதிதானோ, நல்ல வரனே கிடைக்கவில்லை.

கடைசியாக, அவர் பார்த்த இடம் கூடி வருமென்றே சுமதி எண்ணியிருந் தாள். பாலசந்திரன் படித்தவன். படிப்பு அவனுக்கு அகன்ற நோக்கையளித்துப் பழக்க வழக்கங்களிலிருந்து மாறுபட்டு நடக்கவல்ல தைரியத்தைக் கொடுத் திருக்குமென்று எதிர்பார்த்தாள். ஆனால் அவனும்....தாய் தந்தையர் பணம் கேட்டால் மறுத்துப் பேச அவ னுக்கும் தைரியமில்லையே!

மனத்தில் இருந்த தயக்கத்தை அகற்றி னாள் சுமதி. விடுவிடென்று தன் அறைக் குச் சென்றாள். ஒரு காகிதத்தை எடுத்து முன்பின் பாராத அந்தப் பால சந்திரனுக்குக் கடிதம் எழுதுவதற்குத் தொடங்கினாள்.

"ஐயா,

என் தந்தையார் ராதாகிருஷ்ணன் இன்று மத்தியானம் உங்கள் தந்தையா ரைக் கண்டு உங்கள் வீட்டில் நான் வாழ்க்கைப்படுவதைப் பற்றிப் பேசி னார். பத்தாயிரம் ரூபாய் வரதட்சிணை வேண்டுமென்று உங்கள் தகப்பனார் கூறினாராம். எங்களிடம் அந்தத் தொகை இல்லை. நாங்கள் ஏழைகள். எங்கள் ஏழைமையையும் குடும்ப கௌர வத்தையும் எண்ணிப் பார்க்கும்படி வேண்டுகிறேன். நீங்கள் படித்தவர். வரதட்சிணை வாங்குவதன் விளைவைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்கக் கூடியவர். அப்படி நீங்கள் கல்யாணத்துக்குச் சம்ம தித்தால், உலகத்தில் வாழும் எந்த ஜந்துவுக்கும் தீமை செய்யக் கனவிலும் எண்ணாத என் தந்தையாரின் மனம் உவந்த நன்றிக்குப் பாத்திரமாவீர்கள்.

மிஸ் சுமதி ராதாகிருஷ்ணன்."

தபால்காரன் கொண்டு வந்து போட்ட அந்த அதிசயக் கடிதத்தைப் பன்னிரண்டாவது தடவையாகப் படித் தான் பாலசந்திரன்.

அதற்கு ஏதாவதொரு பதில் போட்டு ஆகவேண்டுமென்று அவனுக்குத் தோன் றியது. என்னவென்று எழுதுவது? அன்று காலைதான் அவனுடைய தகப்ப னார் அவனிடம் அந்தப் பெண்ணைப் பார்க்கப் போக வேண்டியதில்லை என்று கூறியிருந்தார். சீர் செய்ய முடியாத வர் வீட்டுப் பெண்ணைப் பார்த்து என்ன பயன்? பாலசந்திரனுக்குத் தந்தையின் பேச்சை எதிர்த்து ஒரு வார்த்தை கூடச் சொல்லத் துணிவில்லை. அவர் குறிப் பிட்ட பெண்ணையே மணந்துகொள்ள அவன் சித்தமா யிருந்தான்.

என்னவென்று எழுதுவது? வரதட் சிணை கொடுத்தே தீரவேண்டுமென்று எழுதினால் முற்போக்கு எண்ணங்களற்ற வன் என்று அவள் நினைக்கக் கூடும். என்னவென்று எழுதுவது?

கடைசியாக, பாலசந்திரனுக்கு ஒரு எண்ணம் தோன்றியது. உடனே கடிதம் எழுதித் தள்ளி விட்டான்.

"மிஸ் சுமதி ராதாகிருஷ்ணன் அவர் களுக்கு,

உங்கள் கடிதத்தைக் கண்டு நாங்கள் எல்லோரும் அதிசயித்தோம். முன்பின்

Lakmé



டால்கம் பௌடர்



யூ டி கோலான்



லிப்ஸ்டிக்



டஸ்டிங் பௌடர்



பேஸ் பௌடர்

Lakmé

லக்மே

அழகின் அலங்காரத்திற்கென
ப்ரஞ்சு முறையிலிருந்து
தயாரிக்கப்பட்ட சாதனங்கள்

Lakmé லக்மே ஒரு டாடா தயாரிப்பு

27-2-1959-ல் வெளிவருகிறது



தெரியாத ஆண்மகனுக்கு ஒரு பெண் கடிதம் எழுதுவது எங்கள் குடும்பத்தில் இதுவரை நடைபெற்றதில்லை. அதனால் என் பெற்றோர்கள் தங்களை மருமகனாக ஏற்றுக் கொள்ளத் தயங்குகின்றனர். அந்தத் தயக்கம் அப்படிப் புரியாத புதிரொன்றுமில்லை என்பதுதான் என்னுடைய அபிப்பிராயமும்.

எம். வி. பாலசந்திரன்.

இந்தப் பதிலை எழுதித் தபால் பெட்டியில் சேர்த்தபின் ஒரு வாரம் வரை அதைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தான் பாலசந்திரன். பின் அது ஏதோ விநோதக் கனவுபோல் நினைவிலிருந்து மங்கி விட்டது.

*　*　*

**ப**தினைந்து வருடங்கள் எவ்வளவு விரைவில் கழிந்து விட்டன!

அன்று வேலையிலிருந்து திரும்பிய பாலசந்திரன் தாயாரின் மகிழ்ச்சி பொங்கும் முகத்தைக் கண்டான்.

"என்னம்மா அவ்வளவு சந்தோஷம்?"

"இருக்காதா, பாலு? நான் பாட்டியாகப் போகிறேன்!"

பாலசந்திரனுக்கு மகிழ்ச்சியில் நாவெழவில்லை.

அவன் தாயார் பேசிக் கொண்டே போனாள். "உனக்குக் கல்யாணம் செய்து வைத்துப் பதினைந்து வருடங்கள் ஆகிவிட்டன. நான் வேண்டாத தெய்வமில்லை, பேரனைப் பார்ப்பதற்கு. தூய மனத்தோடு உருகிப் பிரார்த்தித்தால் கடவுள் இரங்காமல் போய்விடுவாரா?"

அப்போது விமலா அங்கு வந்தாள். மனைவியின் முகத்திலும் தாயின் முகத்தில் விளங்கிய இன்பத்தையே கண்டான் பாலசந்திரன். தன் வாழ்வின் குறை நீங்கி விட்டதாகத் தோன்றியது அவனுக்கு.

அவன் தாயார் விமலாவிடம் கூறினாள்: "உடம்பை அதிகமாக அலட்டிக் கொள்ளாதேயம்மா! எல்லாம் நல்லபடியாக முடிந்தால்தான் எனக்கும் சரி, உன் தாயாருக்கும் சரி, நிம்மதியாக இருக்கும். அவளும்தான் உன் வயிற்றில் பிறக்கும் பேரனை எடுத்துச் சீராட்ட வேண்டுமென்று எவ்வளவு நாட்களாக ஆசைப்பட்டிருக்கிறாள்!"

மாதங்கள் ஒவ்வொன்றாகக் கழிந்தன. விமலா அடிக்கடி லேடி டாக்டரைப் போய்ப் பார்த்துக் கொண்டு வந்தாள். முப்பத்தைந்து வயதில் முதல் பிரசவமாதலால் எல்லோருக்கும் ஒரு மாதிரி கவலையாய்த்தான் இருந்தது.

அன்று விமலா உடம்பை என்னமோ செய்ததாக மாமியாரிடம் கூறினாள். உடனே அவளைக் காரில் ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். எல்லாம் நல்லபடியாக முடிய வேண்டுமே என்ற கவலை பாலசந்திரனைப் புழுவாய்த் துடிக்கச் செய்தது.

அப்போது அவன் முன் லேடி டாக்டர் தோன்றினாள். அவளுக்கு முப்பத்தைந்து வயதுதானிருக்கும். அழகி யென்று சொல்ல முடியாவிட்டாலும் நல்ல களையான முகம்.

"நீங்கள்தானே மிஸ்டர் பாலசந்திரன்?" என்று கேட்டாள் அவள்.

○●○

வித்வத்சபை இசை நிகழ்ச்சி வரிசையில் 29-12-58 அன்று பிற்பகல் ஸ்ரீமதி லலிதாபானு அவர்களின் கச்சேரி நடைபெற்றது. திருவனந்தபுரம் ஸ்வாதித்திருநாள் சங்கீத வித்யாலயத்திலும் பின்னால் சென்னையில் வித்வான் முசிரி சுப்பிரமணிய அய்யரிடமும் முறைப்படி சங்கீதம் பயின்றவர் இவர். எனவே இவருடைய கச்சேரியில் ஞான பாவமும் வித்வத் அம்சமும் நிரம்பிக் காணப்பட்டன. விரிவாகக் கீர்த்தனங்களைப் பாடிவிட்டதால் பல்லவி ராகத்தைச் சுருக்கிக் கொள்ள வேண்டியிருந்தது. ஏராளமான ரசிகர்கள் ஸ்ரீமதி லலிதா அவர்களின் இனிமையான இசையைக் கேட்டு மகிழ்ந்து பாராட்டினர்.





மனைவி: என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? இந்தப் பிளாஸ்டிக் பிளேட்டை நேற்றுத்தான் வாங்கினேன்!

கணவர்: ஒன்றுமில்லை. இதிலிருக்கும் தோசையும் பிளாஸ்டிக்கா என்றுதான் பார்த்தேன்!

"ஆமாம்!"

"உங்கள் மனைவிக்கு ஸிஸேரியன் ஆபரேஷன் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் பெரிய உயிர் பிழைக்க முடியாது. உங்கள் சம்மதம் வேண்டும்."

"ஆபரேஷனா? நம் குடும்பத்திலேயே இதற்கு முன் நடக்காததாயிற்றே, பாலு!" என்று அவன் தாயார் இடிந்து போய் உட்கார்ந்து விட்டாள்.

"அதற்காக என்னம்மா செய்ய முடியும்? எனக்குச் சம்மதம், டாக்டர்!" என்றான் பாலசந்திரன்.

லேடி டாக்டர் உள்ளே சென்றாள்.

பாலசந்திரன் மேலும் கீழுமாக நடக்கத் தொடங்கினான். அவன் தாயார் "நம் குடும்பத்தில் நடந்ததே கிடையாதே! நம் குடும்பத்தில் நடந்ததே கிடையாதே!" என்று விடாமல் சொல்லிக்கொண்டேயிருந்தாள். இந்த வார்த்தைகள் பாலசந்திரனின் மூளைக்குள் சென்று ரீங்காரம் செய்து இனம் விளங்காத திகில் உண்டாக்கின.

"அம்மா! சும்மா இரு!" என்று அதட்டினான்.

ஒரு மணி நேரம் முள்மேல் நின்ற பிறகுதான் லேடி டாக்டர் வரமளிக்கும் தெய்வம் போல் தோன்றினாள்.

"ஆபரேஷன் வெற்றி. பெண் குழந்தை. கன்கிராஜுலேஷன்ஸ்!"

பாலசந்திரனின் தாயாருக்கு அந்தக் கணம் முன்பின் தெரியாத லேடி டாக்டர் மீது பொங்கி வழிந்த நன்றியை என்னவென்று சொல்வது? "அம்மா! உன்னால் எங்கள் குடும்பமே புத்துயிர் பெற்றுவிட்டது!" என்று அவள் கைகளைப் பற்றிக் கொண்டாள்.

"இது என்னுடைய கடமை, அம்மா!" என்று சொல்லி இலேசாகப் புன்னகை புரிந்து விட்டு, அங்கிருந்து சென்று விட்டாள் அவள்.

ஒரு மாதம் கழித்து விமலா குழந்தையும் கையுமாய் வீட்டுக்குத் திரும்பினாள்.

குழந்தைக்கு என்ன பெயரிடுவது என்பதைப் பற்றிச் சிறு விவாதங்கள் நடந்தன. பாலசந்திரன் தன் தாயார் பெயரையே இடவேண்டுமென்றான். ஆனால் விமலாவின் பிடிவாதத்தின் முன் அவன் என்ன செய்ய முடியும்?

"நீங்கள் என்னதான் சொல்லுங்கள்; நான் அந்த லேடி டாக்டர் பெயரைத்தான் வைக்கப் போகிறேன்" என்றாள் விமலா.

"ஏன்?" பாலசந்திரனுக்கு வேடிக்கையாக இருந்தது. "அவள் நிலையில் எந்த டாக்டர் இருந்திருந்தாலும் உன்னைப் பிழைக்க வைத்திருப்பாள்" என்றான்.

"இருந்தாலும் அவளைப் போல் அன்பும் திறமையும் ஒருங்கே சேர்ந்தவர்கள் இருக்க முடியாது. அவள் எதிரே வந்து நின்றாலே போதும், மகாலட்சுமி மாதிரி இருக்கும். அவளுடைய மலர்ந்த முகத்தைப் பார்த்தாலே நோய் நொடியெல்லாம் பறந்து போய் விடும். இத்தனைக்கும் பாவம், அவளை வரதட்சிணையில்லாமல் உங்கள் பெயர் கொண்டவன் ஒருவன், அவள் ஏதோ சாதாரணமாக எழுதியதற்குத் தப்புக் கண்டுபிடித்து 'இது எங்கள் குடும்பத்தில் நடக்காதது' என்று சொல்லிக் கல்யாணம் செய்து கொள்ள மறுத்து விட்டானாம். நீங்கள் ஆபரேஷனுக்கு உடனே சம்மதம் தெரிவித்தீர்களே, 'இது எங்கள் குடும்பத்தில் நடக்காதது' என்று சொல்லி மறுத்திருந்தால் என் கதி என்னவாகியிருக்கும்? அந்த லேடி டாக்டர்கூட உங்களை ரொம்பவும் புகழ்ந்தாள். எல்லோரும் உங்களைப் போல் உடனே சம்மதம் தெரிவித்துக் குடும்பத்தில் நடக்காததைச் செய்திருக்க மாட்டார்கள்!" என்றாள்.

பாலசந்திரனுக்குத் தலை சுற்றியது.

"எனக்கு அவளைப் பிடித்து விட்டது. அதனால் நான் குழந்தைக்குச் சுமதி என்றுதான் பெயர் வைக்கப் போகிறேன்!" என்றாள் விமலா அழுத்தமாக.

# அவருடைய அசிரத்தை என்னுடைய லாபம்!

இது என்னுடைய கோட்டு அல்ல; ஆனால் இப்பொழுது என்னுடையதாகி விட்டது. என் எஜமானர் மிகச்சிறந்த தையல்காரர்களிடம் தம் ஆடைகளைத் தைத்துக்கொள்கிறார் என்பது உண்மையே. ஆனால் 'ஸான்பொரைஸ்ட்' முத்திரையுள்ள துணிகளையோ, தயாரான ஆடைகளையோ அவர் சிரத்தையுடன் கவனித்து வாங்குவதில்லை என்பது தெளிவான விஷயம். இப்படியே எப்பொழுதும் அவர் அசிரத்தையாக இருக்கட்டும்! அவர் ஆடைகளும் அவர் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்கி, எனக்குச் சொந்தமாகட்டும்! பருத்தித் துணியோ, தயாரான ஆடைகளோ வாங்கும்போது 'ஸான்பொரைஸ்ட்' முத்திரை இருக்கிறதா என்று கவனிப்பது அவசியம் என்பதை மட்டும் என் எஜமானர் அறிவாரானால், பல சலவைகளுக்குப் பிறகும் அவை உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்காது என்பது திண்ணம். ஆனால் இதுபோன்ற அற்புதமான இலவசப் பரிசுகள் எனக்குக் கிடைக்காதே!

லேபில் மேல்




என்ற முத்திரையுள்ளதா என்று பாருங்கள். உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்காது.

'ஸான்பொரைஸ்ட்' என்ற ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்கின் சொந்தக்காரர்களான க்ளுயட் பீபாடி அண்டு கோ. இன்கார்பொரேடட் (வரை யறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப் பெற்றது) அவர்களால் இந்த விளம்பரம் வெளியிடப் பட்டுள்ளது. இந்தக் கம்பெனியின், 'சுருங்காது' என்பதற்கான கடும் நிபந்தனைகளுக்குட்பட்டுத் தயாரிக்கப்படும் துணிகளில் மட்டுமே 'ஸான்பொரைஸ்ட்' டிரேட் மார்க் உபயோகிக்க அனுமதிக்கப்படுகிறது.

**விவரங்களுக்கு: 'ஸான்பொரைஸ்ட்' ஸர்வீஸ், 95, மெரீன் டிரைவ், பம்பாய்-2.**

SAN-58-4A-TAM



ஜனவரி 23ம் முதல்

சென்னை :

சித்ரா • பிரபாத்

....சரஸ்வதி....

மற்றும்

திராவிடமெங்கும்!

ஏவி எம் புரொடக்ஷன்ஸ்

# மாமியார் மெச்சிய மருமகள்



AVM
புரொடக்ஷன்ஸ்

தயாரிப்பு-டைரக்ஷன் : கிருஷ்ணன் பஞ்சு

# வானத்தாமரை

சுதர்சன் தமிழாக்கம் ரா.வீ.

## 2. யார் இந்தப் பெண்?

கண்களில் நீரைக் கண்டால்,—அதுவும் பெண்களின் கண்களில் நீரைக் கண்டால், கல்நெஞ்சனுக்கும் கனிவு பிறப்பது இயல்புதானே? குருக்கள் அப் பெண்மணியின் கண்களிலே நீர் முத்திட்டு நிற்பதைக் கண்டதும் கலங்கி விட்டார். 'துயரம் நேரும் பொழுது ஆண்டவனை நினைப்பது யாருக்கும் சகஜம். சுகமாயிருக்கும் பொழுது அவனை நினைப்பது அபூர்வம். அப்படிச் சுகத்திலும் ஒருவன் ஆண்டவனை நினைத்து விட்டால் அவனுக்குத் துயரம் ஏன் வரப் போகிறது?' என்ற பொருள் கொண்ட கபீர்தாஸரின் கவிதை அவர் கண் முன்னே நின்றது. 'அடக்க மாட்டாத துயரம் ஏதோ நேர்ந்திருப்பதனால்தான், இந்தப் பெண்மணியும் இப்படி க்ஷேத்திராடனம் என்று புறப்பட்டிருக்கிறாளோ?'—இப்படி எண்ணியவர், பெரியவளையும் சிறியவளையும் ஒரு முறை உற்றுப் பார்த்தார். உற்றுப் பார்த்து விடுவதனால் மட்டும் ஒருவருடைய மனத்தைப் புரிந்து கொண்டு விட முடிந்தால்தான் எவ்வளவோ தேவலையே! சிறியவளுக்கும் பெரியவளுக்கும் உள்ள உறவை, உருவத்தைக் கொண்டு ஒருவாறு ஊகித்து அறிந்த பொழுதிலும், தமது சந்தேகத்தைப் போக்கிக் கொள்வதற்காக, "இந்தப் பெண் யார்? உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று பெரியவளைக் கேட்டார் குருக்கள்.

"இவள் என் பெண், சுவாமி!"

"அப்படியா? க்ஷேத்திராடனத்துக்காகப் புறப்பட்டிருக்கிறீர்களோ?"

"ஆமாம், சுவாமி! இந்த உடல் என்ன? சோற்றால் அடித்த சுவர் தானே? மண்ணால் ஆன வீடுதானே? இதை நம்பி என்ன பயன்? இன்றைக்கு இருப்பாரை நாளைக்குக் காணோம். காலன் கைநீட்டி அழைக்கும்பொழுது போய்விட வேண்டியதுதானே? மாட்டேன் என்றால்தான் அவன் விடுவானா? இல்லை, இரண்டு நாள் பொறு என்றால்தான் அவன் பொறுப்பானா? உடம்பில் திடம் இருக்கும்பொழுது நாலு ஊருக்குச் சென்று தெய்வங்களைத் தரிசித்தால்தானே உண்டு? ஆகவேதான் போகிற காலத்துக்குப் புண்ணியமாவது கிட்டட்டும் என்று எண்ணி க்ஷேத்திராடனம் செய்யப் புறப்பட்டிருக்கிறோம்" என்றாள் அந்தப் பெண்மணி.

"அம்மா! நீங்கள் சொல்லுவது நூற்றுக்கு ஒரு வார்த்தை; ரொம்ப நியாயமான வார்த்தை. ஆனால் இந்த நாளில் உலகம் போகிற போக்கைச் சொல்லி முடியாது. உலகம் ஒரே குருடாகி விட்டது. பரலோகத்தைப் பற்றி யாருமே கவலைப்படுவதில்லை. 'சாமியாவது, பூதமாவது! உங்கள் சாமியையும் கண்டார்கள், பூதத்தையும் கண்டார்கள்? கல்லுச் சாமிக்குக் கர்ப்பூரம் வேறு!' என்று எதையும் விட்டெறிந்து நாஸ்திக வாதம் பேசுபவர்கள்தான் இந்த உலகத்தில் ஏராளமாயிருக்கிறார்கள். இப்போக்கொத்த இந்த உலகத்தில், உங்கள் மனத்தில் இந்த நல்ல எண்ணம் புகுந்ததே, அதைக் கடவுளின் கருணை என்றுதான் சொல்ல வேண்டும். பூர்வ ஜன்மத்தில் நீங்கள் செய்த புண்ணியம் என்றுதான் சொல்ல வேண்டும். நீங்கள் மகா பாக்கியசாலிகள். உங்களைக் கடவுள் காப்பாராக!" என்று வாழ்த்தினார் குருக்கள்.

அதற்கு அந்தப் பெண்மணி ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவள் அந்தப் பேச்சை மாற்றி, "சுவாமி! இராப் பொழுதைப் போக்க ஏதாவது ஒரு அறை கிடைத்தால் சௌகரியமாக இருக்கும்!" என்றாள்.

"இங்கே அறை ஏது? மண்டபத்தில் வேண்டுமானால் படுத்துக் கொள்ளுங்கள்!" என்றார் குருக்கள்.

"பயம் ஒன்றும் இல்லையே!"

"தெய்வங்கள் வாழும் கோயிலில் பயம் ஏது? கவலையற்றுத் தூங்குங்கள்!" என்று தைரியம் சொல்லிவிட்டுப் பகவானையும் தரிசனம் செய்து வைத்து விட்டுக் குருக்கள் தம் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டார்.

குருக்கள் சென்ற பிறகு இரு பெண்மணிகளும் சிறிது நேரம் பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். பிறகு எழுந்து



மண்டபத்துக்குச் சென்று துணியை உதறிப் போட்டுப் படுத்து உறங்கிவிட்டார்கள்.

**ம**றுநாள் குருக்கள் கோயிலுக்கு வந்தபொழுது சிறியவளான பெண் மட்டும் இருந்தாள். பெரியவளான தாயாரைக் காணோம். அதைக் கண்டதும் குருக்களுக்குத் தூக்கி வாரிப் போட்டது. காரிருளில் மின்னல் மின்னி மறைந்தது.

தாயார் தன் மகளை இப்படித் தன்னந் தனியாகத் தவிக்க விட்டு விட்டுப் போக மாட்டாள். தாயாருக்குத் தன் குழந்தை என்றால் உயிர் அல்லவா? உயிர் என்று சொன்னால் மட்டும் போதாது. உயிரைக் காட்டிலும் ஒரு படி மேல் என்று சொல்ல வேண்டும். தாய் என்றாலே அன்பு; அன்பு என்றாலே தாய் என்று பொருள். அன்பு எந்நாளும் மாறாது; எடுக்க எடுக்கக் குறையாது. என்னதான் கஷ்டம் நேரிடினும், என்னதான் சங்கடம் ஏற்படினும் அன்பு அழியாது; அஞ்சாது. ஏற்படும் இன்னல்களைச் சிறிதும் இலட்சியம் செய்யாமல் தாயன்பு தன் குழந்தைக்காகத் தன்னையே தியாகம் செய்யத் தயாரா

யிருக்கும். தாய் தன் குழந்தைக்காகத் தியாக வேள்வியில் குதிப்பாளே ஒழிய தன் குழந்தையைத் தள்ளி ஒதுக்கி விட்டு ஓடிவிட மாட்டாள். இவள் ஏதோ தகாத தீச்செயல் செய்திருக்க வேண்டும். மாபெரும் பாதகச் செயல் புரிந்திருக்க வேண்டும். இவள் செய்திருக்கும் அச்செய்கை தாயுள்ளத்தினால்கூட மன்னிக்க முடியாத மாபெரும் குற்றமாக இருக்கவேண்டும். அம்மாதிரி நிலைமை ஏற்பட்டால் ஒழியத் தாயுள்ளம் இப்படிக் கல்லாகச் சமையாது. தாயுள்ளத்தையும் கல்லாக்கிய இந்தப் பெண் என்ன பெண்?—இவ்வாறெல்லாம் குருக்கள் தம் மனத்திலே எண்ணமிட்டார். அடுக்கடுக்காக அவருடைய மனக் கடலிலே எண்ண அலைகள் எழும்பி விழுந்த வண்ணம் இருந்தன.

பெண் அழுதாள், அழுதாள்; அப்படி அழுதாள். உள்ளத்தைத் துளைக்கும் அவளுடைய அந்த அழுகையைக் கேட்டு உயிரற்ற மலைப்பாறைகள் கூட உள்ளம் வெதும்பி வெடித்து விடும் போலிருந்தன.

'இனி என்ன செய்வேன்? முன்பின் அறிமுகமில்லாத இந்த ஊரில் எனக்கென்று யார் இருக்கிறார்கள்? எனக்கு யார் உதவி செய்ய இருக்கிறார்கள்?' என்றெல்லாம் எண்ணி எண்ணிப் பொருமினாள்; புலம்பினாள்.



பாவம்! அந்த அபலை நாற்புறமும் சுற்றிப் பேந்தப் பேந்த விழித்தாள். எல்லோரும் முகம் தெரியாத பேர்வழிகள்; முன்பின் அறிமுகம் இல்லாத பேர்வழிகள். அவளுக்குத் தெரிந்தவர்கள் அங்கு யாரும் இல்லை. அங்கே நின்றிருந்த யாருக்குமே, முன் வந்து ஆறுதல் சொல்லி அவளைத் தேற்றும் தைரியமோ, தாராள குணமோ, தயவோ உண்டாகவில்லை. ஏன்? அந்த அபாக்கியவதிக்கு இரண்டு அநுதாப வார்த்தைகள் சொல்ல வேண்டும் என்ற எண்ணம் கூட யாருக்கும் எழவில்லை.



இச்சமயம் சதாசுகர் அப்பக்கமாக வருவது தெரிந்தது. மக்கள் விலகி அவருக்கு வழி விட்டனர். அப்பெண்ணின் அருகிலே வந்துநின்ற அவர் அந்தப் பெண்ணை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "என்ன சமாசாரம்? இந்தப் பெண்ணுக்கு என்ன? இவள் ஏன் அழுகிறாள்?" என்று கேட்டார்.

குருக்கள் சதாசுகரைப் பொருள் பொதிந்த பார்வையுடன் பார்த்தார். பிறகு, "இவள் தாய் இவளை இங்கேயே விட்டுவிட்டுப் போய் விட்டாள். இந்தப் பெண் பாவம், 'என்ன செய்வது, எங்கே போவது?' என்று ஒன்றும் புரியாமல் அழுது கொண்டிருக்கிறாள். ஏதோ பெருங் கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டவளாகத் தோன்றுகிறது!" என்றார்.

இதைக் கேட்ட சதாசுகரின் கண்களில் நீர் முட்டியது. அவர் நீண்ட பெருமூச்சு விட்டு, "அப்படிப்பட்ட தாய் தாயாக இருக்க மாட்டாள். பேயாகத்தான் இருப்பாள். அவள் தாயாக இருந்தால், வயது வந்த பெண்ணை இப்படித் தனியே தவிக்க விட்டுப் போக மாட்டாள். தாயாக இருந்தால் ஒன்று, தானும் சேர்ந்து வாழ்வாள்; அல்லது சேர்ந்தே மடிவாள்!" என்று குரல் கம்மக் கூறினார்.

கூட்டத்திலிருந்த ஒருவன் மிகவும் மெதுவான குரலில், "ஆனால், சுவாமி! ஒருவேளை இந்தப் பெண் அவனுக்குப் பெண்ணாகவே இல்லாமல் இருக்கலாம் அல்லவா? தாய் உள்ளம் இப்படிக் கருங்கல்லாக ஆகாது என்பது உண்மைதான். கட்டாயம் ஏதோ நடந்திருக்க வேண்டும். உண்மைக் காரணம் வேண்டுமானால் உங்களுக்கும் எங்களுக்கும் தெரியவில்லையே ஒழிய..." என்றான்.

மலை நாட்டு மக்கள் நேர்மையானவர்கள். கள்ளங்கபடமற்றவர்கள். ஆனால் அவர்களும் ஆசார-அநாசாரத்தைப் பற்றி நன்கு அறிவார்கள். இந்தச் சொல்லின் உள் அர்த்தத்தை அவர்கள் புரிந்து கொண்டு ஒருவரையொருவர் அர்த்தபுஷ்டியுடன் பார்த்துக் கொண்டனர்.

'இந்தக் களங்கம் இங்கே எங்கே வந்து சேர்ந்தது?' என்று கண் ஜாடையினாலேயே ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டனர்.

அதுவோ சின்னஞ்சிறு கிராமம். அங்கே பாவச் செயலை அரைநிமிஷம் கூட மறைத்து வைத்திருக்க முடியாது! ஆனால் சதாசுகருக்கு அதைப் பற்றியெல்லாம் அக்கறையில்லை. இவர்கள் எல்லோரும் என்ன இப்படிச் சொல்லுகிறார்கள் என்று யோசித்தார். தவறிப்போய்த் தனது பலவீனமான நிலையில் ஒருவன் ஒரு தவறு இழைத்து விட்டால், அதைத் திருத்திக்கொள்ளுவதற்குக்கூட அவனுக்கு ஒரு சிறு சந்தர்ப்பம் அளிக்கக் கூடாதா? என்ன உலகமடா இது? தவறு இவனுடையதாக இல்லாமல் வேறு யாருடையதாகவாவது இருக்கக் கூடும் அல்லவா? இவர்கள் தவறே இழைக்காமல் இருப்பதற்கு என்ன தெய்வங்களா? பிறர் குற்றங்களைக் கையும் களவுமாகப் பிடிப்பது போல் கண்டு பிடித்து விடுகிறோம். ஆனால் நம் குற்றங்களை நாம் கவனிப்பதும் இல்லை; போக்கிக் கொள்ள முயலுவதும் இல்லை. நம் குற்றங்களை நாமே கண்டு பிடிப்பது என்று ஏற்பட்டு விட்டால், பிறர் குற்றத்தைப் பார்க்கத் தோன்றாது. ஒவ்வொருவரும் இந்தப் பண்பை வளர்த்துக் கொண்டால், இந்த உலகம் சீர்திருந்தி விடும்; பூலோக சொர்க்கமாகி விடும். பிறர் குற்றத்தை மட்டும் பார்க்கும் சாபக்கேட்டிலிருந்து இந்த உலகத்துக்கு விடிவு காலம் ஏற்பட்டு விட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்? இந்தக் கும்பலிலே அப்படி ஒரு மனிதன் இருக்கக் கூடாதா?

சதாசுகர் இவ்விதம் யோசித்தவாறே அங்கே கூடியிருந்த மக்கள் அனைவரையும் ஒரு முறை கவனித்துப் பார்த்தார். பிறகு, "சகோதரர்களே! இதைப் பற்றியெல்லாம் யோசிப்பதற்கு இதுவா தருணம்? எரியும் வீட்டுத் தீயை அணைக்கத்தான் கையினால் ஆகவில்லை என்றால், எரியும் தீக்கு இன்னும் மேலும்மேலும் எண்ணெய் வார்க்காமலாவது இருக்கலாம் அல்லவா? ஆனால் நான் உங்களிடம் வேண்டிக் கொள்ளுவது என்னவென்றால் எரியும் தீயை எப்பாடு பட்டாவது அணைத்தே ஆக வேண்டும் என்பதுதான். மனம் நொந்து வெதும்பிப் போன இவனுக்கு உதவி செய்யுங்கள்; உபகாரம் செய்யுங்கள்; கைகொடுத்து உதவுங்கள். மனிதப் பிறவி எடுத்ததற்கு அழகு இதுதான். இதற்கு யார் தயாராயிருக்கிறீர்கள்? இவனுக்கு ஒத்தாசை செய்ய யார் முன் வருகிறீர்கள்? தன்வீட்டில் இடம்கொடுத்து இவனை ரட்சிக்கும் பொறுப்பை யார் ஏற்றுக் கொள்ளுகிறீர்கள்? சொல்லுங்கள்!" என்று உள்ளத்தைத்



தொடும் உணர்ச்சி மிக்க குரலில் கேட்டார் சுதாகர்.

மக்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கலாயினர். 'சுதாகர் ஏன் இப்படிப் பேசுகிறார்? துர்நடத்தையுள்ள ஒரு பெண்ணுக்கு வீட்டில் இடம் கொடுத்து வைத்துக் கொள்ளச் சொல்லுகிறாரே! இவருக்கு மூளை-கிளை புரண்டு விட்டதா?' என்று ஆச்சரியம் கொண்டனர்.

இதே சொற்கள் சுதாகரின் வாயிலிருந்து வராமல் வேறு யாருடைய வாயில் இருந்தாவது வந்திருந்தால், வரிந்து கட்டிக் கொண்டு வாய்ச் சண்டை, கைச் சண்டை வரைக்கும் கூடத் தயாராயிருந்திருப்பார்கள். ஆனால் அவரோ சுதாகர். அவர் எதிரே தலை எடுக்க யாருக்கும் துணிவு கிடையாது. எல்லோரும் வாய் அடைத்துப்போய்ப் பேசாமல் நின்று கொண்டிருந்தனர்; கண்களைக் கொட்டிக் கொட்டி விழித்துக் கொண்டிருந்தனர். ஆனால் வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

சுதாகர் ஒவ்வொருவராக எல்லோருடைய முகத்தையும் பார்த்தார். யாருமே முன் வரவில்லை. அதைக் கண்ட அவர் நம்பிக்கையிழந்து ஒரு நீண்ட மூச்சு விட்டார். பிறகு, "வா, அம்மா! என் குடிசையில் உனக்கு இடம் இருக்கிறது. எல்லோருக்குமே எப்பொழுதுமே அது திறந்து கிடக்கிறது. வெகு நாட்களுக்கு முன்னால் எனக்கும் ஒரு பெண் இருந்தாள். இன்று அவள் எலும்புகள் கூடக் கங்கையில் உருத்தெரியாமல் கரைந்து போயிருக்கும். இன்று என்னுடைய அதே பெண் உயிர் பெற்றுத் திரும்பி வந்து விட்டாள் என்று நினைத்துக் கொள்ளுகிறேன். வா, அம்மா!" என்று அன்புடன் அழைத்தார்.

நீர் ஆறாகப் பெருக அழுது கொண்டிருந்த அந்தப் பெண்ணின் கண்ணீர் நின்றது. வியப்புடன் சுதாகரைப் பார்த்த அவள் நடுநடுங்கி விட்டாள். இந்த மனுஷ்யன் அரக்கனா அல்லது தெய்வந்தானா என்று அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. உருவம் பார்ப்பதற்கு அசுரனைப் போலிருந்தது. ஆனால் குரல் தெய்வத்தைப் போன்றிருந்தது. அவள் துயரம் அடைத்த தொண்டையுடன் "நீங்கள் போய் வாருங்கள். நான் ஆற்றில் முழுகிச்சாக வேண்டியவள். முழுகிச் செத்தால் தான் எனக்குக் கதி மோட்சம் கிடைக்கும்!" என்று சொன்னாள். சுதாகர் தம் குரலில் இன்னும் மென்மையை வரவழைத்துக் கொண்டு, "அம்மா, குழந்தாய்! அப்படி முழுகிச் சாக வேண்டிய அவசியம் உனக்கு என்ன வந்து விட்டது? நான் உயிருடன் இருக்கும் வரையில் உனக்கு ஒருவிதக் கஷ்டமும் நேராமல் பார்த்துக் கொள்ளுகிறேன். வா, வந்து உன் வீட்டைக் கவனித்துக் கொள். இன்று முதல் நீ என் மகள்; நான் உன் தந்தை!" என்றார்.



வல்வெட்டித்துறை பிரபல வர்த்தகர் திரு அ. இரத்தினசாமி அவர்களின் குமாரி சௌ. ஞானம்பிகைக்கும், திரு க. நடேசனுக்கும் செல்வச் சந்நிதியில் மிகச் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

அன்பு மனத்தை வசீகரித்து விடுகிறது. பெண்ணின் உள்ளத்திலே போராட்டம் மூண்டது. அந்தக் குரல் பாவக் குரலாகத் தோன்றவில்லை. அதில் செயற்கை அன்போ, மேல்பூச்சு வார்த்தைகளோ, வெறும் படாடோபச் சொற்களோ தென்படவில்லை. உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து எழும்பி உள்ளத்தின் அடித்தளத்திலே போய்ப் பதியும் உண்மைக் குரலாகவேதான் அது தொனித்தது; உன்னத நோக்கமும் உணர்ச்சி மேம்பாடும் உள்ள சொல்லாகவே தான் பட்டது. பெண்ணுக்குத் தன் காலஞ்சென்ற தந்தையின் நினைவு வந்தது. அவரும் இப்படித்தான் பேசுவார். அவருடைய குரலிலும் இதே இனிமையும் மென்மையும் தாண்டவமாடின. அவளால் சுதாகரின் பேச்சை மறுக்க முடியவில்லை.

சிறிதுநேரத்துக்கெல்லாம் சுதாகர் ஒரு மூட்டையைத் தூக்கிக் கொண்டு தம் குடிசையை நோக்கிச் செல்வதையும், அந்தப் பெண் அவர் அடிச் சுவட்டைப் பின்பற்றிப் பின்னே செல்வதையும், ஜனங்கள் கண் கொட்டாமல் பார்த்தவாறு நின்றனர். (தொடரும்)

# ஒரு சுவாரஸ்யமான விளையாட்டு



'கிரிக்கெட்' மாட்ச் என்றாலே உங்களுக்கெல்லாம் ஒரே உற்சாகம்தான் இல்லையா? உங்கள் அப்பாவும் அண்ணனும் பதை பதைக்கும் வெயிலிலே பந்தய மைதானத்திலே பந்தடிக்கும் வீரர்களைக் கண்டு குதூகலப்பட்டுக் கொண்டிருப்பார்கள். நீங்கள் உங்கள் அறைக்குள் உட்கார்ந்த இடத்திலிருந்தே இந்த 'டெஸ்ட்' மாட்ச் விளையாட்டை விளையாடி மகிழலாம்.

இதற்கு வேண்டியதெல்லாம் கட்டங்களில் நகர்த்த ஒரு காய் (மட்டை), ஒரு காகிதம், பென்ஸில் அல்லது சிலேட். உங்கள் அப்பாவோ தாத்தாவோ விளையாடிய பழைய சீட்டுக் கட்டிலிருந்து ஆஸ் (A) 2, 3, 4, 5, 6 இவைகளை மட்டும்—நான்கு வகைகளிலும் எடுத்துக் கொள்ளுங்கள். இனி அடுத்த பக்கத்திலுள்ள பந்தய மைதானத்திலே பந்து விளையாடப் போகலாம், வாருங்கள்.

1. முதலில் அவரவர்களின் 'டீமை'த் தேர்ந்தெடுத்துப் பெயர்களை ஒரு காகிதத்தில் 'ஸ்கோர் கார்டு' முறைப்படி எழுதிக் கொள்ளுங்கள். (அடுத்த பக்கத்திலுள்ள படத்தின் நடுவில் மாதிரிக்கு இரண்டு 'டீம்'களைக் குறித்து விளையாட்டின் ஸ்கோர்களையும் குறித்திருக்கிறது.)

2. இனி கலைத்துத் தயாராக வைத்துள்ள சீட்டுக் கட்டை ஆட்டக்காரர்கள் இருவரும் இரண்டு பிரிவாக விண்டு (வெட்டி) பார்க்க வேண்டும். யாருக்கு அதிக எண்ணுள்ள சீட்டு கிடைக்கிறதோ அவர்கள் டீம் பவுலராகவும் மற்றவர் டீம் பாட்ஸ்மென்னாகவும் இயங்க வேண்டும்.

3. பாட்டிங் செய்யக் கூடிய கட்சிக்காரர் தனது காயைப் (மட்டையை) படத்திலுள்ள ஆரம்பக் கட்டத்தில் வைக்க வேண்டும். இனி பவுலர் பந்தை வீசலாம். அதாவது கலைத்துக் கவிழ்த்து வைக்கப்பட்டுள்ள சீட்டுக் கட்டின்மேல் சீட்டை எடுத்து நிமிர்த்த வேண்டும்.

4. பந்தை அடிக்கும் 'பாட்ஸ்மேன்,' 'பவுலர்' திருப்பிய சீட்டுக் காட்டும் எண்ணிக்கைக்கு ஏற்றபடி தனது காயைக் கட்டங்களில் நகர்த்த வேண்டும். 'ஆஸ்'க்கு (A) எண்ணிக்கை ஒன்று. காய் நகர்ந்து போய் முடிவாக நிற்கும் கட்டத்திலுள்ள எண்ணிக்கையே 'ஸ்கோர்'. இதை ஸ்கோர் கார்டிலுள்ள முதல் 'பாட்ஸ்மேனு'க்கு எதிரே குறித்துக் கொள்ள வேண்டும். 'பைஸ்,' 'லெக்பை' 'பை' ஆகியவைகள் (நட்சத்திரக் குறிகளிட்ட கட்டங்கள்) பாட்ஸ்மேனின் ஸ்கோருக்குக் கணக்காகாது. ஆனால் இவைகளை 'எக்ஸ்ட்ரா' என்று தனியாகக் கீழே குறித்துக் கொள்ள வேண்டும். இதை 'டீமின்' மொத்த ரன்களைக் கணக்கெடுக்கும்போது கூட்டிக் கொள்ள வேண்டும்.

5. 'பவுலர்' மறுபடியும் கவிழ்த்து வைக்கப் பட்டுள்ள சீட்டுக் கட்டின் அடுத்த சீட்டை நிமிர்த்துவார். முன்போலவே காயை நகர்த்தி அது முடியும் கட்டத்தின் எண்ணிக்கையை 'பாட்டிங் சைடின்' இரண்டாவது 'பாட்ஸ்மேனுக்கு' எதிரே குறித்துக் கொள்ள வேண்டும். இப்படியே முதல் இரண்டு பாட்ஸ்மேனுக்கும் மாற்றி மாற்றிச் சீட்டைத் திருப்பி எண்ணிக்கையைக் குறித்துக் கொள்ள வேண்டும்.

6. ஒரு 'பாட்ஸ்மேன்' அவுட்டானதும், பாட்டிங் டீமிலுள்ள அடுத்த பாட்ஸ்மேனுக்கும் முதல் இரண்டு பேரில் ஆட்டம் இழக்காதிருப்பவருக்கும் முன்போலவே பந்தை மாற்றி மாற்றிப் போட்டு ஆட்டத்தைத் தொடர வேண்டும். சீட்டுகளெல்லாம் நிமிர்த்தப்பட்டால் மறுபடியும் நன்றாகக் கலைத்து வைத்துக் கொண்டு ஒவ்வொன்றாக நிமிர்த்தி விளையாட்டைத் தொடர வேண்டும். கட்டங்களிலே காயை நகர்த்தும்போது 'இங்கிருந்து ஆரம்பி' என்ற கட்டம் கணக்கில் சேராது.

7. ஒருவர் 'அவுட்' ஆனதும் ஆட்டம் இழக்காதவருக்கும் அடுத்து ஆடத் தயாராக இருப்பவருக்கும் பந்தை வீசி (சீட்டை நிமிர்த்தி) விளையாட்டைத் தொடர வேண்டும். அந்த அந்தப் பாட்ஸ்மேனுக்கு நேரே அவரவர்களுடைய ரன்னை (ஸ்கோராக)க் குறித்துக் கொண்டு வர மறக்கக் கூடாது. இப்படியே பத்தாவது 'விக்கெட்' வரையில் விழுந்து கடைசி ஆட்டக்காரர் விளையாடாமல் 'நாட் அவுட்' ஆக இருக்கும் வரையில் விளையாட வேண்டும்.

8. பிறகு 'பவுலிங் சைடு' (இத்தனை நேரம் சீட்டைக் கலைத்து நிமிர்த்தியவர்) பாட்டிங் சைடாக மாற வேண்டும். மேலே சொன்னபடியே இரண்டாவது டீமும் ஆடி முடித்ததும், யாருக்கு அதிக எண்ணிக்கையுள்ள 'ஸ்கோர்' கிடைத்திருக்கிறதோ, அவர்கள்தான் விளையாட்டிலே வெற்றி பெற்றவர்கள்.






# கிரிக்கெட் டெஸ்ட்



அவுட் ஸ்டம்ப்டு (S)

0

3

லெக் பை 1☆

4

அவுட் காட் (C)

2



நோ. பால் 1



4

அவுட் பவுல்டு (B)



1

2

பைஸ் ☆2

இங்கிருந்து ஆரம்பி

| | | | |
|---|---|---|---|
| 1 | குலாம் அஹமத் | 1,4,3. L.B.W | 8 |
| 2 | ராய் | 2,0,6,1,2,1,0,2,1, HW | 15 |
| 3 | உம்ரிகர் | B. | 0 |
| 4 | மஞ்ரேகர் | 4,3,2,3,6,3,1. 6.T | 22 |
| 5 | ஹார்டிகார் | 0,4,1,2 C. | 7 |
| 6 | ராம்சந்த் | H.W | |
| 7 | தமானே | 2, S.T. | 2 |
| 8 | குப்தே | 1,4,2,1 S.T. | 8 |
| 9 | போர்டே | 2 L.B.W | 2 |
| 10 | கன்ட்ராக்டர் | 1,3,4,3,4,3,1,6,1.C | 26 |
| 11 | ரஞ்சனே | 6,4,1,3,0,4 நாட் அவுட் | 18 |
| எக்ஸ்ட்ராஸ் = 1,1,1,2, | | | 5 |
| மொத்த ரன்கள் | | | 113 |



# மாட்ச்

வாண்டுமாமா



| 4 | ஒய்டு 1 | 1 | அவுட் ரன் அவுட் (R.O.) |
|---|---|---|---|

| 1 | அலெக்ஸாண்டர் | | |
|---|---|---|---|
| 2 | ஹோல்ட் | | |
| 3 | ஹண்ட் | | |
| 4 | ஸோபர்ஸ் | | |
| 5 | கன்ஹாய் | | |
| 6 | ஸ்மித் | | |
| 7 | புட்சர் | | |
| 8 | ஸாலமன் | | |
| 9 | கிப்ஸ் | | |
| 10 | ஹால் | | |
| 11 | டெய்லர் | | |
| எக்ஸ்ட்ராஸ் | | | |
| மொத்த ரன்கள் | | | |





| 3 | பை 1☆ | 6 | 2 | அவுட் ஹிட் விக்கெட் (H.W) | 3 | 0 | 4 | அவுட் லெக் பிஃபோர் விக்கெட் (L.B.W.) | 1 |
|---|---|---|---|---|---|---|---|---|---|

15





# திருச்சி உலகநாதன்

## 2. பழைய நினைவும் புதிய வாழ்வும்

உலகநாதன் எங்கே போயிருப்பான் என்பதைப் பொன்னு கண்டு பிடிப்பதற்கு முன்னதாகவே நாம், உலகநாதன் யார் என்ற விவரத்தைக் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டும்.

உலகநாதனுக்குத் திருநெல்வேலிப் பக்கம், மதவக்குறிச்சி என்ற சிற்றூர். அந்தக் கிராமத்துள்ளே கோவில் உண்டு; குளம் உண்டு. மக்கள் மாடு கன்று உண்டு; ஆனால் மழை என்பது தான் அங்கே அருமையான பண்டம். மழையில்லாத ஊரில் வாழ்வது எவ்வளவு கடினம் என்பது நமக்குத் தெரியும். உலகநாதன் திருச்சிக்கு வருவதற்கு முன்னதாக அந்தக் கிராமத்தில்தான் வாழ்ந்து வந்தான். அவனுக்குப் பாட்டி ஒருத்தி இருந்தாள். பாட்டி காலமாகி விடவே, அநாதையான அவனுக்கு வேறு ஆதரவு இல்லை. பாட்டியிடம் கொஞ்சம் சொத்து உண்டு. அதுவும் ரொக்கமாக இருந்தது. பாட்டிக்கு ஆபத்து வந்த போது உலகநாதன் என்ன செய்வான் என்பது பலருக்குப் பிரச்னையாக இருந்தது. பாட்டி வீட்டில் மோர், பால் இருந்ததால் வஞ்சனையில்லாது உண்பதும், பள்ளிக்கூடம் போவதுமாக இருந்தான். ஆனால் பாட்டி இறந்து போவதற்கு ஒரு மாதத்துக்கு முன்னதாக, அவனுடைய சித்தப்பா வந்தார். சித்தப்பா சித்திவிநாயகம் பட்டாளத்துச் சிப்பாய். அவனுடைய தந்தைக்கு உடன் பிறந்த தம்பி; பாட்டிக்கு மகன். ஆகவே தாய்க்கு உடல் நலம் சரியில்லை

யென்று கேள்விப்பட்டதும், சித்திவிநாயகம் உடனே அவனைப் பார்க்கப் புறப்பட்டு வந்தார்.

சித்திவிநாயகம் பட்டாளத்துள்ளே சேவை செய்தாலும் நிரம்பவும் இரக்க சித்தம் உள்ளவர். குழந்தையென்றால் வெகு பிரியம். சிறு வயதிலேயே தாயையும் தந்தையையும் இழந்த உலகநாதனை அழைத்துப் போய்த் தாம் வளர்க்க ஆசைப் பட்டார். ஆனால் அவர் முடிவுக்குப் பாட்டி குறுக்கே நின்றாள்.

பாட்டி, "டேய், சித்திவிநாயகம்! உன் மனைவி ஜானகி குணங் கெட்டவள். தன் பிள்ளை தவறு செய்தாலே அடிப்பாள். இந்த உலகநாதனைக் கொடுமைப் படுத்துவாள். ஆகவே நானே வளர்க்கிறேன். இவனை நீ திருச்சிக்கு அழைத்துப் போகவேண்டாம்" என்று தடுத்துப்பார்த்தாள். தாயிடம் அன்புகொண்ட சிப்பாய், சும்மா இருந்து விட்டார். இப்போது தடுப்பதற்கு யார் இருக்கிறார்கள்? தாய்க்குச் செய்ய வேண்டிய அந்திமக் கடமைகளைச் செய்து விட்டு, சித்திவிநாயகம் அண்ணன் மகனையும் அழைத்துக் கொண்டு திருச்சியிலுள்ள தமது வீட்டுக்கு வந்தார்.

கணவன் மட்டும் திரும்பி வருவார் என்று பார்த்தாள்; இதற்கு மாறாகச் சிறு பையனையும் அழைத்துக் கொண்டு வரவே, ஜானகியம்மாள் புலியாகச் சீறினாள். தன் தாய் எப்போதோ சொன்ன சொற்கள் அனைத்தும் சிப்பாய்க்கு நினைவில் வந்தன. அண்ணன் மகனுக்குச்



செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாது போனாலும், அவன் சும்மா வரவில்லை; ஆயிரம் ரூபாய் பணம் கொண்டு வந்திருக்கிறான். இதைச் சொன்ன பிறகு தான், "வாடா, கண்ணு! நீ அம்மா அப்பாவை இழந்து விட்ட பிள்ளை. உன்னை அன்போடு வளர்த்த பாட்டியும் போய் விட்டாள். ஆகவே, இனி நாங்கள் தான் உன் அம்மா அப்பா. இவன் உனக்கு அண்ணா, பொன்னுரங்கம். இவன் சீனு. உனக்குத் தம்பி. நீங்கள் மூவரும் ஒற்றுமையாக வாழ வேண்டும்" என்று பிரசங்கம் செய்தாள். பணத்தைப் பற்றிக் கேட்டதால் புதிய அன்புப் பேச்சு அது!

உலகநாதன் கிராமத்துப் பையன். திருச்சிபோன்ற பெரிய நகரமே பார்க்காதவன். அதோடு இடம் புதிது. அவனுக்கு எல்லாமே கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல் இருந்தது. சித்தப்பா மட்டும் புதிதாக நாலைந்து சட்டைகள், கால்சட்டைகள் வாங்கித் தந்திருந்தார். தின்பதற்கும் காரம், தித்திப்புப் பண்டங்கள் வாங்கிக் கொடுத்தார். அன்பாகப் பேசினார். ரயிலில் வரும்போது, "உலகநாதன்! நீயாக வீட்டில் எதையும் செய்யாதே. உன்னுடைய சித்தி பொல்லாதவள் இல்லை. ஆனால் அவளிடம் கேட்டுச் செய்ய வேண்டும். அவளுக்கு முன் கோபம் அதிகம். அதனால் கவனமாக இருக்க வேண்டும். சொல்கிறது நினைவில் இருக்கிறதா?" என்பதை ரயிலுக்குள் ஆயிரம் தடவைகள் சொன்னார். சித்தியை இதற்கு முன் ஒரு முறை அவன் பார்த்திருக்கிறான். கிராமத்துக்கு வந்திருக்கிறாள். அவள் வந்தது முதல் பாட்டிக்கும் அவளுக்கும் சண்டை நடந்தது மட்டும் அவன் நினைவுக்கு வந்தது. கிராமத்துக்கு வந்தபோது, சீனுப் பயலுக்கு இலந்தைப் பழம் பறித்துக் கொடுத்ததும், பனை நுங்கு வெட்டிக் கொடுத்ததும் நினைவில் வந்தன.

"ஏன், அண்ணா! நீ நுங்கு வெட்டித் தந்தாயே அந்த ஊர்தானே அண்ணா" என்று சீனுப்பயல் கேட்டான்.

"இவனை எதற்கு அப்பா இழுத்து வந்தே? சோத்துக்குத் தண்டமா?" என்று பொன்னு கேட்டான். பொன்னு தானாகக் கேட்கவில்லை. அவனுடைய தாயார் இரண்டு மூன்று தினங்களாகச் சொன்ன சொல்லின் எதிரொலி. ஊருக்குப் போன சித்திவிநாயகம் வராமற் போகவே அவள் புலம்பிக் கொண்டிருந்தாள்.

"அந்த அநாதைப் பயலை இவர் இழுத்துக்கொண்டு வந்தால் நாம் தானே வடித்துக்கொட்ட வேண்டும்? இவர் இந்தச் சமயம் ஊரில் இருக்க வேண்டுமா? வடக்கே பம்பாய்ப் பட்டணத்தில் இருக்கக் கூடாதா? சோற்றுக்குக் கேடாக அந்த உலகுப் பயல் வந்து தொலைப்பான்." என்று தாய் அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களிடம் சொன்னது உண்மை. இதைக் கேட்டுத்தான் பொன்னுரங்கம் இப்போது சொன்னான். பொன்னுரங்கம், 'சோத்துக்குத் தண்டமா?' என்று சொன்னதும் உலகநாதன் முகம் சுளித்தது. அச்சொல் அவன் நெஞ்சிலே ஊசியாகக் குத்தியிருக்க வேண்டும். இதை எப்படியோ பார்த்து விட்டார் சிப்பாய்.

"ஏண்டா, கருமிப் பயலே! அவனைத் திட்டுகிறாய்? அவன் ஒன்றும் சும்மா வரவில்லை. பாட்டி ஆயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறாள். அதை வைத்துக் கொண்டு சாப்பிடுவான். சும்மா மிரட்டாதே!" என்று சீறி விழுந்தார்.

கணவன் இவ்வாறு தன் பிள்ளையைத் திட்டியதைப் பார்த்ததும், "எதற்காக நீங்கள் பொன்னு மீது சீறி விழ வேண்டும்? செத்துப்போன பாட்டி ஆயிரம் வைத்திருந்தால் என்ன ஆச்சு? அதிலே உங்கள் பிள்ளைக்குப் பங்கு கிடையாதா? அப்படிப் பார்த்தால் ஐந்நூறு சேர வேண்டும். அந்தப் பங்கைக் கேட்கிறான் என் பிள்ளை" என்று கோபம் கொண்டாள். சிப்பாய், எப்படியாவது சண்டையில்லாமல் இருந்தால் போதும் என்ற எண்ணத்துடனே, "ஆமாம்! உன் பிள்ளை பொல்லாத பயல். தனக்கும் பாட்டியின் பணத்தில் பங்குகேட்கிறான்" என்று பொய்ச் சந்தோஷத்தோடு பொன்னுரங்கத்தைத் தட்டிக் கொடுத்தார்.

பொன்னுரங்கத்துக்கும், அவனைப் பெற்ற தாய்க்கும் உச்சி குளிர்ந்து விட்டது. ஆனாலும் வீட்டுக்குள் நுழைய உலகநாதன் பயங் கொண்டான். அவனுக்குப் பாட்டியின் அன்புக் கண்கள் நினைவில் வந்தன. அவனிடம் அந்த நேரம் பாட்டி கதை சொல்லிக் கொண்டே மோர்சாதம் உருட்டிப் போடுவாள். பாட்டி கையால் பிசைந்த சாதத்துக்குத் தனி ருசி. அவன் தூங்க வைத்துக் கொண்டே விடுகதைகள் சொல்லுவாள். சமயா சமயத்தில் முறுக்கு, தேன்குழல் தானகச் சுட்டுத் தருவாள். யார் வீட்டிலாவது பண்டங்கள் கொடுத்தால் உறியில் வைத்து,

"வாடா என் ராசா, வாடா, உலகுக் கண்ணு! இதோ உனக்குப் பண்டம், இன்று பார்" என்று அன்பாகக் கூப்பிட்டுக் கொடுப்பாள். நிலவிலே கதைகள் பல சொல்வாள். இதெல்லாம் ஒவ்வொன்றாக நினைவில் வந்தன. அவனுக்கு இனி யார் பண்டங்கள், பட்சணங்கள் எல்லாம் அன்போடு கொடுப்பார்கள்?

பணத்தோடு பையன் வந்திருக்கிறான் என்றதும், ஜானகியம்மாள் கொஞ்சம் சிரித்துப் பழகினாள். இரண்டு மூன்று நாட்கள் மிகவும் அன்பாக நடந்தாள். சித்திவிநாயகம் ஒரு வாரத்தில் பட்டாளத்துக்காக ஜபல்பூர் போக வேண்டிய நாள் நெருங்கி விட்டது. ஒவ்வொரு நாளும், மனைவியிடமும் மக்களிடமும், "உலகுப் பயல் அநாதையாக வந்திருக்கிறான். அவன் வேறு, நாம் வேறு இல்லை. நீங்கள் அவனை அன்போடு நடத்தி வைக்க வேண்டும். அவனுக்கு மாதா மாதம், பாட்டியின் பணம் நிற்கும் இடத்திலிருந்து வட்டிப் பணம் மணியார்டர் வரும். அதற்குப் பத்து ரூபாய் வட்டி. அவனும் நன்றாகப் படிப்பான். எல்லோரும் ஒற்றுமையாக இருக்க வேண்டும்" என்று கிளிப்பிள்ளைக்குச் சொல்லுவது போன்று சொல்லுவார்.

எல்லோரும் தலையாட்டினார்கள். வாய் திறந்தும் செய்வதாகச் சொன்னார்கள். சித்திவிநாயகம் ஊருக்குப் போன மூன்றாம் நாள் வீட்டிலே சண்டை வந்து விட்டது. சித்தியிடம் மிகவும் கவனமாக இருக்கவேண்டுவதைத் திருநெல்வேலியில் ஏறியது முதல் ரயில் திருச்சி வந்து நிற்கும் வரை சித்தப்பா சொல்லியது அவனுக்கு நினைவில் இருந்தது. அதுவும் தவிர, சித்தியின் குணம் இன்னது என்று கண்டு கொண்டான். அப்படி இருந்தும் உலகநாதன், வீட்டுக்கு வேண்டிய தண்ணீர் எடுத்து வருவான்; விறகு எடுத்து அடுக்குவான். அவர்கள் வீட்டிலே உள்ள எருமையைக் கட்டுவது, அதற்கு வைக்கோல் எடுத்துப் போடுவது எல்லாம் வர வர அவன் வேலையாகப் போய் விட்டன. மேலும் மதவக்குறிச்சி கிராமத்தில் மாடு கன்று கட்டும் பழக்கம் அவனுக்கு இருந்தது. வேலை செய்தால்தான் சித்தியைக் கோபத்திலிருந்து திருப்ப முடியும் என்பதையும் கண்டுகொண்டான்.

காரணமில்லாமல் மூன்றாம் நாள் சித்தி கோபங்கொண்டாள். சாப்பாடு போடும் நேரத்தில் தனியாகச் சீனுவும் பொன்னுவும் சாப்பிட்டார்கள். அந்தச் சமயம் அவனைக் கூப்பிடவில்லை. மேலும் அவர்கள் சாப்பிட்டது தோசை என்பது கூட வாசனையிலிருந்து அறிந்தான் உலகு. ஆனால் இவன் சாப்பிடப் போனபோது, பழையது ஒரு தட்டில் வைக்கப்பட்டிருந்தது. உலகு அதையும் சிரித்துக் கொண்டே சாப்பிட்டான். அவன் செய்த தவறு இதுதான்:

"சித்தி! கொஞ்சம் மோர் மட்டும் போடு. பழையது நன்றாக இருக்கிறது. ஒரு துண்டு ஊறுகாய் கொடுத்து விடு."

"ஓகோ! நீ உழைக்கிற உழைப்புக்கு மோர் வேண்டும்; ஊறுகாய் வேண்டும். இங்கே அதெல்லாம் கொட்டியா வைத்திருக்கிறது..."

இவ்வாறு பேச ஆரம்பித்தவள் வார்த்தையை முடிப்பதற்கு மூன்று நிமிஷங்கள் ஆயின. அதற்குள்ளே சாப்பிட்டு விட்டுத் தாலத்தைக் கழுவி அறையின் ஓரத்தில் வைத்து விட்டு நின்று கொண்டிருந்தான் உலகு. அப்படியும் சித்தி பேச்சை முடிக்கவில்லை. மறுநாள் அவன் மோர் இல்லாமல் சாப்பிட வேண்டும் என்று முடிவு கட்டிக் கொண்டாள். அப்படியே அவனுக்குத் தனிச் சாப்பாடு. அவள் பெற்ற பிள்ளைகளுக்குத் தனிச் சாப்பாடு; மோரும் பாலும் நெய்யும் சீனியும் கொடுத்த கையே உப்பும், சாதமும் கொடுக்க மறுத்தன.

சீனுப் பயலுக்குத் தாயின் வஞ்சனை தெரியாது. அவனோ, "உலகு அண்ணன் சாப்பிடும்போது நானும் சாப்பிடுவேன்" என்பதாகப் பிடிவாதம் பிடித்தான். இதற்கு அவனுக்குக் கிடைத்ததைப் பார்த்தபோதுதான் சித்தியின் விரல்கள் எவ்வளவு பலம் பொருந்தியவை என்பதை உலகு அறிந்தான். சீனுவின் வலது துடையில் அரையணா அகலத்துக்கு ரத்தம் கட்டிக் கறுத்துப் போய்க் காயம் பட்டிருந்தது. அழுக்குக் கின்னாகவே கிள்ளிவிட்டாள். பாவம்! அவன் அழுது துடிதுடித்துப் போனான்.

அன்று முதல் சீனுவும் பொன்னுவும் என்ன சாப்பிடுகிறார்கள் என்பதே உலகுக்குத் தெரியாது. இரவிலே யாரும் பார்க்காத இருட்டிலே அமர்ந்துகொண்டு அன்பாக வளர்த்த பாட்டியை நினைவில் கொண்டு வருவான். சீனுப்பயலையே அவ்வாறு திருகியவள் தன்னைத் திருகினால் எப்படித் திருகுவாள்? ரத்தமே கொட்டிவிடும் என்று அவன் பயந்தான். (தொடரும்)

வாசு தன் அறைக்குள்ளேயிருந்து ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தான். அவனுடைய ஆராய்ச்சி இன்னும் முடிந்தபாடில்லை. முதலும் முடிவுமற்ற காலத் தொடர்போல் அது நீடித்துக் கொண்டே போயிற்று. சதா கவலை சூழ்ந்த முகமும் நெற்றிச் சுருக்கத்தைத் தொடர்ந்து, கவலை தோய்ந்த சிந்தனையும் இப்படியாகவே உட்கார்ந்திருந்தான். 'காப்பி குடிக்கப் போகிறாயா, இல்லையோ?' என்பது மாதிரி அவனுடைய தாயார் அறை வாசலில் வந்து நின்றபடியே ஒருமுறை எட்டிப் பார்த்து விட்டுப் போய் விட்டாள். இப்போதெல்லாம் அவன் அறைக்குள் நுழைவது புலிக் கூண்டில் நுழைவது போன்றிருந்தது. அவன் தன் அறைக்குள் யாரையும் அனுமதிப்பதில்லை. எவருடனும் முகம் கொடுத்துப் பேசுவதில்லை. உலாவுவது இல்லை; விளையாட்டு இல்லை; வெட்டிப் பேச்சு இல்லை; ஏன்? பணம் தரக்கூடிய 'பேஷண்டு'களைக்கூட அவன் சிறிதும் விரும்பவில்லை.

அவன் தான் உண்டு, தன் 'எக்ஸ்ரே' சாதனங்கள் உண்டு, தன் அறை உண்டு என்று அடைந்து கிடந்தான்.

வாசு டாக்டர் பரீட்சை கொடுத்து முடிந்ததும், வெளிநாடு போனான். வியன்னா முதலிய இடங்களில் சென்று வைத்தியப் படிப்பும், 'எக்ஸ்ரே' கலையும் கற்று வந்தான். அந்தக் கலையில் வாசு நிபுணனாகவே விளங்கினான். இந்தியாவிலேயே வாசுதான், தலைசிறந்த 'எக்ஸ்ரே' நிபுணன் என்று அனைவரும் பாராட்டும் அளவுக்கு வாசு தேர்ந்து விட்டிருந்தான். தொழிலும் சுமாராக நடந்து வந்தது. அப்போதுதான் வாசுவுக்கு இந்த ஆராய்ச்சிப் பைத்தியம் பிடித்தது.

தன் தொழிலுக்காகச் சேகரித்திருந்த 'எக்ஸ்ரே' சாதனங்களை வைத்துக் கொண்டு தன் ஆராய்ச்சியில் நூற்றுக்கு நூறு முழுசாக ஈடுபட்டான். இரவு, பகல், போது, வேளை, பசி, தாகம் எல்லாவற்றையும் மறந்து, எந்நேரமும் தன் ஆராய்ச்சியிலேயே மூழ்கி விட்டான். வாசுவின் முந்தைய நாட்களை அறிந்தவர்கள் இப்போது அவனைக் கண்டால் 'வாசு பைத்தியமாகி விட்டான்' என்று தான் சொல்ல முடியும். அப்படி மாறிப் போய் விட்டான்.

சம்பாதிக்க ஆரம்பித்தவுடனேயே தான் ஆராய்ச்சியில் பைத்தியம் பிடித்துக் கொண்டு விட்டதா? கல்யாண விஷயமாக வந்த விசாரணைகள் அனைத்தையும் நிராகரித்து விட்டான். வெளிநாடு சென்று வந்து நல்ல சம்பாத்தியத்தில் ஈடுபட்டுள்ள, நல்ல அழகனான




விளையாட்டுக்காரனான டாக்டர் வாசுவுக்குப் பெண்கள் வந்து குவிந்ததில் ஆச்சரியமேயில்லை. ஆனால் வாசு அனைத்தையும் நிராகரித்து விட்டான். ஏனோ?

இப்போது வாசுவின் நண்பர்கள்கூட அவனைப் பார்க்க வருவதில்லை. ஆனால் கிருஷ்ணமூர்த்தி மட்டும் அப்படி ஒதுங்கி விடவில்லை. என்றாவது பத்தில், எட்டில் வருவான். வாசுவின் ஆராய்ச்சியைப் பற்றி நையாண்டி செய்து விட்டுப் போவான்.

“உனக்கு என்னடா தெரியும், கிட்டு! இந்த ஆராய்ச்சி மட்டும் வெற்றியடைந்து விட்டால், என் லட்சியம் நிறைவேறுவதுடன், அப்புறம் பாரடா! உலகம் உன் நண்பனை ஒரு 'ஜேம்ஸ் வாட்டாக' 'மார்க்கோனி'யாக வைத்துப் போற்றுமடா!” என்று நம்பிக்கையுடன் சொல்லுவான் வாசு.

“போடா, போ! நீயும், உன் லட்சியமும். சராசரி மனிதனுக்கு இயற்கையிலேயே அமைந்துள்ள இந்தச் சக்திக்கு ஒரு புது இயந்திரம் வேறு வேண்டுமா?” என்பான் கிருஷ்ணமூர்த்தி.

“அது என்னவோ? எனக்கு அந்தச் சக்தி இல்லை. அதனால் ஒரு இயந்திரத்தையே சிருஷ்டி செய்து விடப் போகிறேன். நீ பார்த்துக் கொண்டே இரு. என்னுடைய ஆராய்ச்சி மட்டும் வெற்றி











யடைந்து விட்டால், மீனாக்ஷி என்ன, எல்லோருடைய ஆத்மாவுமே என்னுடன் பேசுமடா. அதுதான் எனது லட்சியம்'' என்பான் வாசு.

* * *

வாசு எம். பி. பி. எஸ். பாஸ் செய்த அன்றுதான் மீனாக்ஷி அவன் வாழ்க்கையில் எதிர்ப்பட்டாள். ''கன்க்ராஜுலேஷன்ஸ், டாக்டர் வாசு!'' என்றாள்.

அதற்கு முன்னர் வாசு மீனாக்ஷியைக் கண்டதில்லை, பேசியதில்லை. அன்று வலுவில் வந்து தன்னை வெளிப்படுத்திக் கொண்ட வரையில் வாசுவுக்கு அவளைத் தெரியாது. அன்று முதல் வாசுவின் உள்ளம் துள்ளியது. எத்தனையோ ஆயிரமாயிரம் எண்ணங்கள். எண்ணங்களில் ஆபரேஷன்கள், சிதைவுகள். அதற்குப் பின்னர் வாசுவும் மீனாக்ஷியும் ஒரு நாளைக்கு ஒருமுறை என்ற அளவில் தினசரி சந்திப்பார்கள். உலகிலுள்ள அத்தனை விஷயங்களையும் பற்றி விவாதிப்பார்கள். வீதியில் உலாவுவார்கள். கடை வீதிக்குப் போவார்கள் கோவிலுக்குப் போவார்கள். பார்ப்பவர்கள் இவர்கள் ஜோடிக் காதலர்கள் என்று நம்புவதற்கு வேண்டிய அத்தனை களையும் இருந்தன.

பின், வாசு மேல்நாடுகளில் சென்று கல்வி கற்ற சமயங்களில் மீனாக்ஷி கடிதங்களாக அவனை வந்தடைவாள். வாசு எத்தனையோ மாற்றுச் செய்திகளாகத் தன் மனத்தின் காதலை, மீனாக்ஷியைப் பற்றி அவன் கொண்டுள்ள ஆதுரங்களைக் கவிதையாகப் பொழிந்து எழுதுவான். ஆனால் மீனாக்ஷியிடமிருந்து அதற்குப் பதில் வராது. சாதாரண க்ஷேம லாபங்களும் ஊர் உலக நிலவரங்களுமேதான் அந்தக் கடிதத்தில் இருக்கும். வாசு பெருமூச்சு விடுவான். பாவம்! பெடையின் எதிரொலியற்ற ஒற்றைக் குயில் போல் வெளிநாட்டில் நின்று குரல் கொடுத்துக் கொண்டிருந்தான் வாசு.

ஊர் வந்து சேர்ந்தவுடன் ரயில்வே ஸ்டேஷனிலேயே சென்று மீனாக்ஷி வரவேற்றாள். ஊர் வந்தவுடன் முதல் வேலையாக மீனாக்ஷியைப் பார்த்துத் தன் காதலையெல்லாம் சொல்லி அவள் சம்மதத்தைப் பெற்றுவிட வேண்டும் என்று வழியெல்லாம் சிந்தனை செய்து வந்தான் வாசு. மீனாக்ஷி நேரே ஸ்டேஷனுக்கே வந்து விட்டாள். அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். ரம்பை போல் அழகு கொழிக்கும் முகத்தில் மை வளையத்துக்குள்ளே நின்று வளைந்த அந்தக் கண்களைக் கண்டவுடன் வாசுவுக்குப் பேச்சே வரவில்லை.

மீண்டும் கடிதங்கள்தான். அத்தனை கடிதங்களையும் மீனாக்ஷி படித்தாள். ஆனால் இந்தக் கடிதங்களுக்குப் பதிலே எழுதவில்லை. மறுபடியும் மீனா-வாசு ஜோடி பூங்காவில், சினிமாவில், ஆற்றங்கரையில் சந்தித்தது. வாசு பேசுவான். மீனா பேசுவாள். எல்லாம் பேசினார்கள். எதையும் பேசினார்கள். ஆனால் வாசு தன் உள்ளக் கிடக்கையைச் சொல்லவே முடியவில்லை. மீனாக்ஷியும் 'உன் கடிதத்துக்குப் பதிலாக' என்று ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஆனாலும் மீனாக்ஷி வாசுவை வெறுக்கவில்லை. அன்புடன்தான் பழகி வந்தாள். அந்த அன்புதான் புரியவில்லை. நாட்கள் செல்லச்செல்ல வாசு அதே கவலைப்படலானான். மீனா தன்னைக் காதலிக்கிறாளா, இல்லையா என்பதை எப்படி அறிவது? இதே அவனுடைய முழு நேர வாழ்க்கைப் பிரச்னையாகி விட்டது.

'மனிதரின் மனத்து எண்ணங்களை அறிய இன்னும் யாரும் ஒன்றும் கண்டு பிடிக்கவில்லையே' என்று ஏங்கினான் வாசு. 'யாரும் கண்டு பிடிக்காவிட்டால் என்ன? நாமே கண்டுபிடித்து விடுவது' என்று எண்ணினான். அதற்காக, எத்தனையோ நூல்களை வரவழைத்துப் படித்தான். ஹிப்னாடிஸம், மெஸ்மெரிஸம் எல்லாம் கூடப் பயின்றான். 'எக்ஸ்ரே?' இயந்திரத்தில் சில திருத்தங்கள் செய்து மனத்தின் எண்ணங்களைப் படம் பிடிக்க முயன்றான். அதன் வாயிலாகக் கிடைத்த வெற்றிகள் சில. வாசு இதயத்தின் துடிப்பைப் படம் பிடிக்கக் கற்றான். நாடித் துடிப்பு, இரத்த ஓட்டம் முதலியவைகளைக் கூடப் படம் பிடித்து விட்டான். ஆயினும் இன்னும் மனத்தின் எண்ணங்கள் பற்றி அறியக் கூடவில்லை. இன்னும் ஆராய்கிறான். அல்லும் பகலும் ஆராய்கிறான். அவன் லட்சிய மெல்லாம், இந்த இயந்திரம் கண்டுபிடித்ததும், மீனாக்ஷியின் மனநிலையைப் புரிந்து கொண்டு விட்டால் போதும், அப்புறம் அந்த இயந்திரம் வேலை செய்யா விட்டால் போகட்டும் என்ற அளவில் முயன்றான். இன்னும் ஆராய்ச்சிச் சாலையில் முயற்சிகள் செய்துகொண்டே யிருந்தான். சாப்பிடக்கூட எழுந்தவனல்ல.




சிறிய அளவில் தயாரிக்கப்பட்ட 'எக்ஸ்ரே' இயந்திரத்தை உடம்பில் கவசம் அணிந்து கொண்டு, கண்களுக்கு ஒரு புதுவிதக் கண்ணாடி, காதுகளுக்கு 'ஹெட் போன்'கள், இப்படி ஐம்புலன்களுக்கும் ஐந்து துணை அவயவங்களைச் சேர்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். ஏதேதோ விசைகளைப் பிடித்து முடுக்கி விட்டுக் கொண்டிருந்தான்.

* * *

**யா**ராவது மனிதர் இருந்தால் தேவலை போல் இருந்தது. வான வெளி ஆராய்ச்சி, பாரம்பரியம் முதலியவைகளுக்கு வேண்டுமானால் எலி, குரங்கு, நாய் என்று இப்படிப்பட்ட உயிர்களை வைத்து ஆராயலாம். ஆனால் மனத்து எண்ணங்களைப் பரிசோதிப்பதற்கு மனமுடைய ஒரு மனிதனை வைத்துக் கொண்டு தானே பரிசோதிக்க முடியும்?

வாசுவின் சிந்தனைகளுக்கு இடையில் மனத்துள் சில புதிய எண்ணக் கொத்து உறைத்தது... "இந்தப் பைத்தியம் எவ்வளவோ சம்பாதிப்பான் என்று எண்ணினேனே! இப்படி விஞ்ஞான விழலுக்கிறைத்த நீராகி விட்டானே!

# இன்றும் - என்றும் நான் விரும்புவது டூமெக்ஸேதான்

முன்பு நீராடுவதென்றால் குழந்தைகளுக்குக் கோபம் பொங்கி வரும். இருந்தாலும்கூட இன்று அவர்கள் மகிழ்ச்சியுடன் புன்முறுவல் செய்துகொண்டே நீராடுகிறார்கள். அதன் ரகசியம் என்னவென்பீர்களோ? மனோரம்யமான இளஞ்சிவப்பு நிறம் கொண்ட டூமெக்ஸ் பேபி சோப்பினால் ஸ்நானம் செய்த பிற்பாடுதான் என்பதைச் சொல்லவும் வேண்டுமா! அது பச்சிளம் சருமத்தைக்கூட மிருதுவாக்குகிறது. டூமெக்ஸ் பேபி சோப் சிறு குழந்தைகளின் கண்களுக்கு கஷ்டம் இல்லாமல் ஸ்நானத்தின் பொழுது குணமே அளிக்கிறது.




## டூமெக்ஸ்
# பேபி சோப்

குழந்தைகளின் சருமத்திற்கு
சாலச் சிறந்தது



டூமெக்ஸ் ப்ரைவேட் லிமிடெட்,
வேலஸ் ஹவுஸ், பெல்லார்ட் எஸ்டேட்,
பம்பாய்—1.

இவனுக்குச் செய்த செலவெல்லாம் பாழாகி விட்டதே! இந்தக் குழந்தை இப்படி வளரும் என்று தெரிந்திருந்தால், இதற்காகத் தவம் செய்து பெற்றிருக்க வேண்டாமே? என்ன கஷ்டம்! ஊரெல்லாம் பைத்தியம் என்று கேலி செய்கிறது. இந்த நிலையில் இது வாழாமல் செத்துத் தொலைந்தால்கூட நிம்மதியாக, நமக்குக் குழந்தையே இல்லை என்று எண்ணிக் கொள்ளலாம்''—இந்த எண்ணங்கள் மனத்தில் உறைக்கவும் வாசு திடுக்கிட்டான். 'இவை யாருடைய எண்ணங்கள்?' என்று யோசிப்பதற்குள்ளேயே ''டேய் வாசு! இந்தக் கேலிக்கூத்தை நிறுத்தப் போகிறாயா, இல்லையா?'' என்று குரல் கேட்டது. கண் திறந்து பார்த்தான் வாசு. அவன் தந்தை எதிரே நின்றிருந்தார்.

''அப்பா! என் ஆராய்ச்சி வெற்றியடைந்து விட்டது, அப்பா! உன் பிள்ளை மனமறியும் இயந்திரம் கண்டுபிடித்து விட்டான்'' என்று வாசு கத்தினான்.

''சரிதான்டா, பைத்தியம்! சாப்பிடவா!'' என்று அதட்டினார் அப்பா.

வாசு தன் வெற்றியை மீண்டும் பரீட்சை செய்ய எண்ணினான். அந்த சாதனங்களையும் பொருத்திய படியே வீட்டுக்குள் ஓடினான். சமையலறைக்குள் நுழைந்தவுடன் மனத்தில் புதிய எண்ணங்களின் கோவை தாக்கியது. ''சேச்சே! பைத்தியம் முற்றி விட்டது போலிருக்கிறது. இந்த ஆராய்ச்சி அலங்கோலமெல்லாம் அறைக்குள்ளேயே இருந்தது போக இப்போது வெளியே கூட வந்து விட்டதா? இப்படியே வீதியில் ஓடினால் நமது குடும்பக் கௌரவம் என்ன ஆவது? என்னுடைய ஒரே பிள்ளை இப்படியா புத்தி கெட்டுப் போக வேண்டும். சாமி! தெய்வமே! இது யார் வைத்த சூனியமோ? அந்தக் குடிகேடி மீனுதான் குழைந்து குழைந்து பேசி மனத்தைக் கெடுத்து விட்டாளோ?''

தாயாரின் உள்ளத்தில் எழுந்த எண்ணம் வாசுவின் சுயமரியாதையைப் பாதித்தது. 'வரதட்சிணை வாங்குவதற்காகத்தான் என்னை வளர்த்தாள் போலிருக்கிறது, இந்த அம்மா' என்று எண்ணினான். இயந்திரம் வேலை செய்யும்போதே ஓடிச் சென்று மீனாக்ஷியின் மனத்தை அறிந்துவிட வேண்டுமென்ற துடிப்பும் அவ்வெண்ணத்தைத் தொடர்ந்து எழுந்தது.

போகும் வழியில் இயந்திரத்தை நிறுத்த மறந்து விட்டதால் எதிரில் நடந்து வந்து தன்னைக் கடந்து செல்வோரின் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் கூட வாசு உணர்ந்தான். ''ஆஸ்பத்திரியிலுள்ளவன் இறந்து விட்டால் கூடத் தேவலை. இந்த வாசற்காப்போனுடன் ஒவ்வொரு வேளையும் மாரடிக்க வேண்டாம்.'' ''பஸ் வந்தாலும் நின்றுதான் தொலைய வேண்டியிருக்கிறது!'' ''அயோக்கியப் பயல், வீட்டிலிருந்து கொண்டே 'இல்லை' என்று சொல்லிவிடுவான்.'' இப்படியாக எத்தனையோ கோடி எண்ணங்கள்.

''அடேடே! வாசு வருகிறதே! பைத்தியம் பகிரங்க வேஷம் வேறு போடுகிறதா? வெளியில் ஓடி வந்துவிட்டதே! பார்த்தால் பேசப் பிடித்துக் கொண்டு விடுமே! நடுவழியில் நாலு பேர் பார்க்க நின்று இதனுடன் பேசுவதா? சரி ஏதோ சாமான் வாங்குவது போலக் கடைக்குள் போய் விடுவோம். என்ன? பார்த்து விட்டதா? சரி! சரி! ஆபத்துத்தான். பாவம்! ஒரு பெண்ணைக் கவரக் கையாலாகாதவன், இயந்திரம் செய்கிறானாம்.'' வாசு இயந்திரத்தை நிறுத்தினான். எதிர் வரிசையில் நண்பன் கிருஷ்ணமூர்த்தி



சென்று ஒரு கடைக்குள் நுழைந்தான். 'சை! நண்பன்கூட நம்மைப் புரிந்து கொள்ள வில்லையே?'

வாசு ஓட்டமாக ஓடினான். மீனாக்ஷியின்வீடும் வந்துவிட்டது. இயந்திரத்தை விசைப்படுத்தியபடியே உள்ளே ஓடினான். மாடிப்படிகளை ஒரு எட்டில் கடந்தான். மீனாக்ஷி தன் அறையில் அமர்ந்து ஒரு புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். வாசு வந்ததை அவள் பார்க்கவில்லை. வாசுவின் இயந்திரம் வேலை செய்தது. ''எத்தனை அழகாக இருக்கிறார் ரங்கு. வாசுவும் அழகன் என்றாலும், ஒரு பெண்ணின் மனத்தைப் புரிந்து அதை வீணையாக்கி மீட்டத் தெரியாத ஜடம். இந்த ஒரு விஷயத்தில் கடவுள் இயற்கையாகவே அமைத்திருக்கும் சக்தியைப் பயன்படுத்தச் சக்தியில்லாதவர். இயந்திரம் கண்டுபிடித்து என்னை அறிகிறாராம்! இவர் என் காதலைப் புரிந்து கொள்வதற்குள் நான் கிழவியாகக் கூடப் போய் விடுவேன். பெண்கள் விருப்பத்தைக் கண்ணினால் காட்டினால் போதாதா? ஆண்களிடம்

அப்படியே போய், 'உங்களைக் காதலிக்கிறேன்' என்று சொல்லிவிட முடியுமா? அவரும் அவர் இயந்திரமும். எக்கேடு கெட்டுப் போகட்டும், ரங்குவின் முகம்தான் எத்தனை குறும்புடன் தோன்றுகிறது. பார்க்கும்போதே இருதயம் விம்முகிறதே! உடல் புல்லரிக்கிறதே! அப்படிப்பட்ட ஆழ்ந்த பார்வையைப் பாய்ச்சி என் மனத்தை எக்ஸ்ரே படம் எடுத்து அதன்படியே என்னை மீட்டி வருகிறாரே! நான் விரும்பும் சமயத்தில் என்னைத் தொட்டு விட்டால் பின்னர் நான் அவர் அடிமைதான். வாசு இத்தனை நெருங்கிப் பழகியும் என்னை ஏதோ ஒரு மின்சாரப் பொருளாக எண்ணி ஒதுங்கித் தானே வந்தார். சை! எதற்கு அந்தப் பைத்தியத்தின் சிந்தனை? அது தான் நம் வரையில் இல்லாத ஒன்று....''

வாசுவுக்கு உடல் எல்லாம் எரிந்தது. உள்ளம் கொதித்தது. அவன் இத்தனை நாட்கள் பாடுபட்டது எதற்காக? அந்தப் பாடெல்லாம் வீணாகப் போய்விட்டதே என்பதையும்தவிர இந்த மீனாக்ஷி நம்மை மறந்து வேறொரு ரங்குவைப் பற்றி நினைக்கிறாளே? வாசுவினால் தாங்க முடியவில்லை. ''மீனாக்ஷி....!'' என்று கத்தியே விட்டான். மீனாக்ஷி திரும்பிப் பார்த்தாள். ''ஐய்யய்யோ! வாசுவா! பைத்தியக்கார வேஷத்தில் என் வீட்டுக்கே வந்து விட்டதே! இதை எப்படி வெளியேற்றுவது? ரங்கு வரும் நேரமாயிற்றே! இத்துடன் பேசிக் கொண்டிருப்பதை அவர் பார்த்தால்....முன்பே நான் வாசுவுடன் பழகியதை எண்ணி என்னை அவர் கேள்விகளால் குடைந்தார். அவரை நம்ப வைக்க நான் பட்ட பாடு, 'தாளம் படுமோ, தறிபடுமோ?' என்றாகிவிட்டது. இந்தச் சமயத்தில்...சரி! இதை எப்படியாவது அனுப்ப வேண்டும். எப்படி அனுப்புவது?'' மீனாக்ஷி எழுந்து வந்தாள். ''மிஸ்டர் வாசு! வாருங்கள். உட்காருங்கள்.....''

வாசு துடித்துக் கொண்டிருந்தான். 'என்ன மாய்மாலம் பண்ணுகிறாள்....... மனத்துக்குள் ஒருவனை வைத்துக் கொண்டிருப்பது எனக்குத் தெரியாது என்று எண்ணுகிறாள். வாசுவுக்குக் கோபம் கோபமாக வந்தது. மீனாக்ஷியின் அகன்ற கண்களைப் பார்த்தான். அது சலனமற்றிருந்தது.

'அடி பாதகி..... இத்தனை மட்டமான எண்ணங்களைப் புதைத்துவிட்டு என்னை வாஞ்சையுடன் பார்க்கிறாளே?' வாசுவின் கோபம் தெறியாக மாறியது. உடல் படபடத்தது. ஓடினான். மாடிப்படி இறங்கினான். நேரே வாசலில் இறங்கி வந்த வழியே ஓடினான். இயந்திரங்களைக் கழற்றினான். அப்படியே தூக்கி எறிந்தான். வெகு வேகமாக ஓடிவந்த லாரி ஒன்று வாசுவின் படைப்பை நசுக்கி விட்டுச் சென்றது. வாசுவின் படைப்பு மாத்திரமா? வாசுவின் நெஞ்சத்தையே நசுக்கி விட்டுச் சென்றது அந்த லாரி. நெஞ்சு விம்மியது. தொண்டையை அடைத்தது. மூச்சு 'புஸ் புஸ்' என்று வந்தது. லாரிதான் வாசுவின்மேல் ஏறி விட்டதா?

* * *

திடுக்கிட்டுவிழித்தெழுந்தான் வாசு. தாயார் அறை வாசலில் நின்று அழைத்துக் கொண்டிருந்தாள்.

''ஏண்டா வாசு! தூங்கி விட்டாயா? ஆராய்ச்சியெல்லாம் அப்புறம் ஆகட்டும். வா. அவர்களெல்லாம் வந்திருக்கா பாரு....'' என்றாள்.

''ஏம்மா யாரு?'' என்று கேட்டபடியே எழுந்தான் வாசு.

''அதுதான் அந்தப் பெண் மீனாக்ஷியும், அவள் தகப்பனாரும் வந்திருக்கிறார்கள். பத்து நாட்களாக அந்த மனுஷர் நச்சரிக்கிறார். இன்றைக்கு வரதட்சிணை அட்வான்ஸ் செய்ய வந்திருக்கிறார். நீயும் வா.''

''ஓஹோ! அப்படியா? நீ ஒண்ணுமே சொல்லவில்லையே?'' என்றவன் சற்று முன் கண்ட காட்சியின் பயங்கரத்தில், ''மீனாக்ஷியா! வேண்டாம்'' என்றான்.

''என்னடா! ஒரு பெண்ணுடன் ரொம்ப நாள் பழகிவிட்டு, அப்புறம் வேண்டாமென்று கூறலாமா? நன்றாயிருக்கு. அவள் உன்னையேதான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று ஒற்றைக் காலில் நிற்கிறாள். நீயும்தான் அவள் மோகத்திலே யந்திரம் கண்டு பிடிக்க ஆரம்பிச்சிருக்கே. நன்றாயிருக்கு எழுந்து வா!'' என்று அதட்டினாள். வாசு பேசாமல் எழுந்து போனான்.

ஹாலில் மீனாக்ஷியும், அவள் தகப்பனாரும் இருந்தார்கள். வாசுவின் தந்தை அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். வாசு ஹாலில் நுழைந்ததும், மீனாக்ஷியைப் பார்த்தான். மீனாக்ஷி வாசுவைப் பார்த்தாள். அந்தக் கண்கள் பாய்ச்சிய ஒளி, அப்பப்பா! எத்தனையோ கதை கதையாகப் பேசின; காட்சிகளைக் கண்டன. இருவர் உள்ளமும் துள்ளியது. இருவரும் ஒருவரையொருவர் புரிந்து கொண்டு முறுவலித்தனர். 'இதற்கு ஒரு இயந்திரம் வேண்டுமா?' என்று வாசு எண்ணித் தன் பைத்தியக்காரத்தனத்துக்கு வெட்கினான். பெண் எண்ணினால் எதையும் சாதிக்க முடியாதா?

# நரை மயிரே தோன்றாமல் முதுமைப் பருவம் எய்தும் அழகு








## லோமா

அகில உலகும் வியந்து போற்றிட கேசத்திற்கு இயற்கைக் கருமையூட்டும் தைலம்,

நிச்சயமாகக் கருமையூட்டும் லோமாவின் சக்திக்கும் மீறி நரை மயிர் எய்தியவர் எவருமே கிடையாது! லோமா என்பது ஒரு சாயச் சரக்கல்ல, கேசத்திற்கு இயற்கை கருமையூட்டும் தைலமாகும்; அதே சமயம், இயற்கையான மூலப் பொருள்கள் கலந்துள்ள அது கேசத்திற்கு போஷாக்களிக்கும். தைலமுமாகும் அதோடு மனோகர நறுமணமுள்ளது.

ஏகபோக ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா அஹமதாபாத்-1.

ஏஜெண்டுகள் :

ஸி. நரோத்தம் & கம்பெனி, மங்கள்தாஸ் ரோடு, பம்பாய்-2.

MPS-TAM

சென்னை ஏஜண்டுகள் ஜே. பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1

இலங்கை ஏஜண்டுகள் : [illegible] & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

## உங்கள் வீட்டைச்

சுற்றிப்பாருங்கள்

தரை சுத்தமாக இருக்கிறதா? சில மணி நேரங்களுக்கு முன்புதான் அது சுத்தம் செய்யப்பட்டது. திரைச் சீலைகள் அழுக்கடைந்திருக்கின்றனவா? நேற்றுதான் அவை சலவையாகி வந்தன. பூக்கள் புதியனவா? ஆம் ஆனால் அவை இருக்கும் அந்தத் தாமிரப் பூந் தொட்டி—அது எப்பொழுது பிராஸோவினால் பாலிஷ் செய்யப் பட்டது? உங்கள் வீட்டில் வைப்பதற்குத் தகுந்த தாமிர, பித்தளை சாமான் கள் எவையேனும் இருந்தால் அவை பிராஸோவினால் பாலிஷ் செய்யப் பட்டு பளபளப்பாகவும் சுத்தமாகவும் இருப்பது அவசியம். எப்பொழு தேனும் ஒருதடவை செய்யப்பட்டல்ல- முறை தவறாமல்.

# பிராஸோ

மெட்டல் பாலிஷ்

உங்கள் வீட்டிற்குப் பிரகாசத்தைக் கொண்டு வருகிறது.

MAE 58

---

# 'அனஸின்'

உங்களுடைய

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு

நிவாரணமளிப்பதில் **சிறந்தது**

ஏனெனில் அதில் **நான்கு மருந்துகள்** சேர்ந்துள்ளன.

'அனஸின்' ஒரே ஒரு மருந்துமட்டுமல்ல. அது தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளிலிருந்து முற்றிலும் துரித நிவாரணம் அளிக்கும், ஒரு டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையாகும். ஒரே மருந்து சேர்ந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும் 'அனஸினை'ப் போல், துரிதமாகவும் ... அசௌகரியத்திலிருந்தும் நிச்சயமாகவும் நிவாரணம் அளிக்க இயலாது. எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.

WILL NOT UPSET THE STOMACH
DOES NOT HARM THE HEART
ANACIN

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER

K. 66 (B) TAM

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 87 நிஷ்காரணத் தலைவலி

ஆவோஜி! பைடோஜி! பீயோஜி! காவோஜி! ஸொஜ்ஜி! பஜ்ஜி! அலர்ஜி! அது எதுவானாலும் சரி! பெயரை விட்டுத் தள்ளுங்கள். சிகிச்சையாவது என்னவென்று சொல்லக் கூடாதா?

என்னைக் கேட்டால், பித்தம், பித்தாசயம் ஆகியவற்றின் 'ஏடாகூட'த்தால் இவை ஏற்படுகின்றன. இளிப்புச் சுவையும் தன்மையுமுள்ள மருந்துகளால் (அதிகமில்லாது) ஒன்றிரண்டு முறை மலம் இளகிப் போகும்படி செய்தால் போதும்; இவ்வகையான நிஷ்காரணத் தலைவலியை உடனே போக்கலாம்; அல்லது வலியின் கடுமையையாவது குறைக்கலாம். முன்கூட்டியே அவ்வப்போது மேற்சொன்ன வகையைச் சேர்ந்த 'மலமிளக்கி'களை உபயோகித்து வருவதால் இவ்வகைத் தலைவலியை வரவொட்டாமலே தடுக்கவுஞ் செய்துவிடலாம்.

இவ்வினத்தைச் சேர்ந்தவருக்கு நான் சொல்வது இரண்டே மருந்துகள். உள்ளுக்குத் திராக்ஷாரிஷ்டம். தலைக்குத் தினசரி தடவிச் சீவிக்கொள்ளவும் எண்ணெய்க்குளி நாளில் தலைக்குத் தேய்த்துக் குளிக்கவும் உபயோகிக்க வேண்டியது க்ஷீரபலா தைலம். இதனால் கணிசமான குணம் சில நாட்களில் கிடைக்காவிடில், மூன்று முறைகள் மடக்கிக் காய்ச்சிய க்ஷீரபலா தைலத்தைத் தலைக்கு மேற்சொன்ன விதம் உபயோகிக்கும்படி செய்வதுதான் முறை.

திராக்ஷாதி கஷாயத்தால் வாரத்துக்கொருமுறையோ பத்து தினங்களுக்கொருமுறையோ மலத்தை இளக்கி, பித்தம் பித்தாசயம் இவற்றை நல்வழியில் வைத்துக் கொள்ளவும் வேண்டும்.

"ஒரு பூ வேலை செய்ய ஆசையில்லே. ஒரு தையல் வேலை செய்தால் தானாது. ஆசைக்கு ஒரு நாள் ஒரு சினிமாவுக்குப் போனால் வந்துவிடும் ஆபத்து. சற்று நேரம் ஒரு வெளிச்சத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலும் ஆபத்துத்தான்..."

"என்னம்மா ஆபத்து?"

"ஆபத்தா? தலைவலின்னா தலைவலியா? எங்கள் வீட்டுத் தலைவலி, உங்கள் வீட்டுத் தலைவலியில்லே!..."

இப்படிப்பட்ட தலைவலி யொன்று. கண்ணுக்கு ஏற்படும் ஒரு விபரீத யோகம். காணக் கூடாத அல்லது காணத் தகாதவற்றைக் காண்பது கண்ணுக்கு ஏற்படக் கூடிய ஒரு கடுந் தண்டனை யல்லவா? மிகச் சிறியவை, மிகப் பிரகாசமானவை, மிகவும் பயங்கரமான காட்சிகள், மிகவும் அருகிலிருப்பவை, வெகு தூரத்தில் இருப்பவை, அருவருப்பை யூட்டுபவை, விகிருதியானவை ஆகியவற்றைக் காண்பது கண்ணுக்கு அளிக்கப்படும் கடுந் தண்டனையாகும். இதனால் பயங்கரமும் ஆபத்துகரமானதுமான விளைவுகள் ஏற்படுமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

மேற்கண்ட வகையில் கண்ணைச் செயல் புரியச் செய்வோமாகில் கண்களுக்கு அபிகாதமும் அதைத் தொடர்ந்து கண்களுக்குள்ள நரம்புகளுக்கோர் அதிர்ச்சியும் அழற்சியும் ஏற்படுகின்றன. ஒரே நரம்பிலிருந்து பிரியும் கிளை நரம்புகள்தான்...கண், காது, மூக்கு, நாக்கு, நெற்றி, பொட்டு என்னும் சங்கப் பிரதேசம், கன்னம், கழுத்து முதலிய இடங்களுக்கெல்லாம் சென்று பரவி அந்தந்தப் பாகத்துக்கும் செயலாற்றும் திறனையும் இயங்கும் திறனையும் அளிக்கின்றன. ஒரு செடியின் ஆணி வேர்... அதிலிருந்து பிரியும் சல்லி வேர் என்பது போல. இதில் ஒரு நரம்புக்கு அதிர்ச்சியும் அழற்சியும் ஏற்படுமானால் அதிலிருந்து அவ்வதிர்ச்சியும் அழற்சியும் அதன் தாய் நரம்பு வரையில் எட்டி, அங்கிருந்து இதர கிளை நரம்புகளுக்கும் பரவ நேரிடுகிறது...ஒரே ஒரு சொத்தைப் பல். அதில் சிறிது நோவு என்று ஏற்பட்டால் போதுமே! அதைத் தொடர்ந்து அந்தப் பக்கத்தில் காது வலி, தலைவலி, மூக்கு - கண் முதலிய பிரதேசங்களில் வலி, தொண்டை வலி விழுங்கவும் முடியாது. ஏன்? வாயை நன்றாகத் திறக்கவும் முடியாது.... நாவை அசைத்துப் பேச முடியாது. இப்படி எத்தனை உபாதைகள் ஏற்படுகின்றன! இதெல்லாம் எதனால்? ஒரு தாய் நரம்பின் பல கிளை நரம்புகளில் ஏதேனும் ஒன்றுக்கு அதிர்ச்சியோ அழற்சியோ ஏற்படுமானால், அவ்வதிர்ச்சியும் அழற்சியும் அதன் தாய் நரம்புக்கு ஏறி, அவ்விடமிருந்து மற்றுள்ள கிளை நரம்புகளுக்கும் பரவி, ஆங்காங்கும் உபாதைகளை உண்டாக்குவதால்தான். கண்களின் நரம்புக்கு அதிர்ச்சியும் அழற்சியும் ஏற்பட்டாலும் இவ்விதந்தான் தலைவலி உண்டாகக் கூடும்.

முதலாவதாக, இவ்வித அபத்தியம் மறுபடியும் கண்களுக்கு ஏற்படுமானால் ஜாக்கிரதையா யிருத்தல் அவசியம். கண்களின் நரம்புகளுக்குப் பலம், சகிப்புத் தன்மை ஆகியவற்றை அதிகரிக்கச் செய்யும் வகையில் தலைக்குத் தினசரி தடவி முடி சீவிக் கொள்ளவும், எண்ணெய்க் குளிக்கு உபயோகிக்கவும் பிருங்காமல தைலத்தை உபயோகிக்கவும். தஞ்சை அரண்மனை முறைப்படி தயாரித்த அச்வகந்தா லேகியத்தைக் காலை மாலை அரைத் தோலா வீதம் சாப்பிட்டு வருவது நல்லது. இவர்களுக்கு ஓரளவேனும் மல பந்தமும் இருக்குமானால் இரவு படுக்கப் போகும் நேரத்தில் அரை டீஸ்பூன் அளவு திரிபலா சூர்ணத்தைச் சில துளி தேனும் நிரம்ப நெய்யும் சேர்த்துக் குழைத்து அருந்திய பிறகு படுத்துத் தூங்குவது நல்லது. இதனால் கண்களின் நரம்பு முதலியவைகளுக்குப் பலமும் சகிப்புத் தன்மையும் அதிகரிக்கும்; மல பந்தமும் நீங்கும்.

கரிசாலை என்னும் கரிசலாங்கண்ணியை இடித்து (அவசியமானால் சிறிது ஜலம் தெளித்து இடித்து)ப் பிழிந்த ரஸம் 32 அவுன்ஸ் (4 ஆழாக்கு). நெல்லிக்காயை இடித்து அவ்விதமே பிழிந்த ரஸம் 32 அவுன்ஸ் (4 ஆழாக்கு). நல்லெண்ணெய் அரை வீசை இவற்றுடன் வெண்ணெய்போல் அரைத்தெடுத்த அதிமதுரம் ஒரு பலம் (3 தோலா எடை). பசுவின் பால் 2 படி ஆகியவற்றையெல்லாம் சேர்த்து அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். கல்கம் மொறமொறவென்று வரும் பாகத்தில் இறக்கி வடிகட்டிவைத்துக் கொள்ளவும். இதுதான் பிருங்காமலத் தைலம்.

இனி ஸூர்யாவர்த்தம் என்ற ஒற்றைத் தலைவலி(அல்லது இருபுறத்தில் உண்டானதாயினும்)க்குள்ள சிகிச்சையையும் சுருக்கமாகவாவது தெரிவிக்க வேண்டாமா? ஸூர்யாவர்த்தத்தில்.

(1) சீமைநெல்லிச் செடியின் வேர்,
(2) நஞ்சுமுறிச்சான் செடியின்வேர்,
(3) கிலுகிலுப்பைச் செடியின் வேர்,
(4) வட்டக் கிலுகிலுப்பைச் செடியின் வேர்
(5) தகரையின் வேர்
(6) வட்டத் தகரையின் வேர்

இவற்றில் ஏதாவது ஒன்றைச் சிறிது நசுக்கி எண்ணெயிலிட்டுக் காய்ச்சி எண்ணெய் பொறுக்குஞ் சூடாக உள்ள போது, ஸூர்யோதயத்துக்கு முன்னதாகவே தலைக்குத் தேய்த்து - ஊறாமல் பொறுக்கும் சூடுள்ள நீரில் ஸ்நானஞ் செய்து - தலையைத் துடைத்து ஈரம் போக்கிச் சாம்பிராணிப் புகை காட்டி, கடக்கட அரை வயிறு மட்டும் புளிப்புள்ள மிளகு ரஸம் சேர்த்து, சோறுண்டு ஓய்வு பெற்றிருத்தல், பகல் உறங்காமல் இருத்தல் ஆகியவை நல்ல பலன் தரும்.

தலைவலியின் கடுமை உடனே நிற்பதற்கும் சில உபாயங்களுண்டு.

எருக்கன் இலையைக் கசக்கிப் பிழிந்த ரஸத்தில் 2-3 துளிகளைக் காதில் விட்டு, இடது புறம் தலைவலியானால் வலது செவியிலும்-வலதுபுறம் தலைவலியானால் இடது செவியிலும், இரண்டுபுறமும் தலைவலியானால் இரண்டு செவிகளிலும் சிறிது நேரமிருந்து தலையைச் சாய்த்து ரஸத்தை வெளியே விட்டுக் காதைச் சுத்தமாக்கி விடவும்.

அல்லது காப்பி டிகாக்ஷனில் ஒரு சில துளிகளைச் சர்க்கரை சேர்க்காமல் மூக்கில் உறிஞ்சினால் போதும்.

அல்லது 101 தரம் மடக்கிக் காய்ச்சிய க்ஷீரபலா தைலத்தில் சில துளிகளை (ஸ்பூனில் எடுத்து உருக்கி) மூக்கிலிட்டு உறிஞ்சினால் போதும். இது எல்லா விதத் தலைவலிகளுக்கும் நல்லது.



# பி.ஓ.ஏ.ஸி
# பிரிட்டானியா மூலம்
# ஐரோப்பாவுக்கு
## பறந்து செல்லுங்கள்

இஸ்டான்புல் . அதேன்ஸ்* . ரோம . ஜூரிக்
ப்ராங்பர்ட் . லண்டன் ஆகிய இடங்களுக்குப்
பறந்து செல்லுங்கள். மற்றும் பாரிஸ்,
அம்ஸ்டர்டாம், ப்ருஸெல்ஸ்
அல்லது நீங்கள் விரும்பும் எந்த
நகரத்திற்கும் பறந்து செல்லலாம்

விவரங்களுக்கும், புக்கிங் செய்வதற்கும் பி.ஓ.ஏ.ஸியார்
நியமித்துள்ள உள்ளூர் ஏஜெண்டையோ அல்லது பம்பாய்,
கல்கத்தா, டில்லி மதராஸ் முதலான இடங்களிலுள்ள
பி.ஓ.ஏ.ஸி ஆபீஸ்களிலோ விசாரியுங்கள்

ஞாபகமிருக்கட்டும்—பி.ஓ.ஏ.ஸி மூலம் பறந்து செல்ல
கட்டணத்தில் அதிகம் ஒன்றும் இல்லை

*இங்கு குவான்டாஸ் மூலம் பறந்து செல்லவேண்டும்

விமானப் போக்குவரத்துகளில் உலகிலேயே
முன்னணிவகிப்பது.

**B·O·A·C**

பி. ஓ. ஏ. ஸி. உங்கள் நலனைப்பேணுகிறது

பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேய்ஸ் கார்ப்பரேஷன்



# காண்போரே அறியும் கவின்மிகு இந்தியா

நீங்கள் எவ்வளவுதான்
சுற்றுப்பிரயாணம் செய்திருந்தாலும்
விதவிதமான பல கவர்ச்சிகளுடன்
விரிந்து பரந்து கிடக்கும்
இந்த நாட்டிலே நீங்கள் பார்க்க
இன்னும் எவ்வளவோ உண்டு



உல்லாசப் பிரயாணப் பகுதி
போக்குவரத்து மற்றும் செய்தித்
தொடர்பு அமைச்சகம்
புது டில்லி



இந்திய அரசாங்க உல்லாசப்
பிரயாண அலுவலகங்கள்

நியூயார்க் ○ சான்பிரான்சிஸ்கோ ○ லண்டன் ○ பாரிஸ் ○ பிராங்பர்ட் ○ மெல்போர்ன் ○ கொழும்பு ○ பம்பாய் ○ கல்கத்தா ○ டில்லி ○ சென்னை ○ ஆக்ரா ○ அவுரங்காபாத் ○ பெங்களூர் ○ போபால் ○ டார்ஜீலிங் ○ ஜெய்ப்பூர்

DA-58/335



தாமரைப் பூவின் இதழ்போல் கமலிக்குப் பெரிய கண்கள். அந்தக் கண்களின் வனப்பைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் அவளுக்குஆச்சரியம் வரும்போதுபார்க்க வேண்டும். முகத்தில் ரோஜா மொட்டுக்கள் அரும்பியது போன்ற அவளுடைய சின்னஞ் சிறு உதடுகள் குவியக் கண்கள் காதோரங்களைத் தொட்டு மீன்கிழுத் போல அப்படி அகன்று நீளும்.

"கமலிக்குப் புரு முட்டை போலக் கண் பெரிசு, அப்பா!" என்று என் பையன் கேலி செய்வான்.

"உங்கள் வீட்டு ராமு என்னைக் கேலி செய்கிறான், மாமா! என் கண் புரு முட்டையாம். இவனுக்கு மட்டும் கிளி மூக்கு இல்லையோ?" என்னிடம் கட்சி கட்டிக் கொண்டு நியாயத்துக்கு வந்து சேருவாள் கமலி.

# அருமை அம்மாவுக்கு...

"அவன் கிடக்கிறான் அசட்டுப் பயல். உன் கண்கள் பார்க்க எவ்வளவு அழகாக இருக்கின்றன, தெரியுமா? கொள்ளை அழகு" என்று கமலிக்குச் சமாதானம் சொல்லி அனுப்புவேன் நான். என் சமாதானத்தைக் கேட்டுக் கொண்டு "வவ்வ-வே! உனக்குத் தாண்டா கிளிமூக்கு" என்று ராமுவுக்கு அழகு காட்டி விட்டுத் திரும்பிப் போய் விடுவாள் கமலி.

கமலி தாயில்லாக் குழந்தை. எட்டு அல்லது ஒன்பது வயதிருக்கும். அவள் தகப்பனுக்கு ஏதோ ஒரு திரைப் படவிநியோகக் கம்பெனியில் பிரதிநிதி வேலை. முக்கால்வாசி நாட்கள் வெளியூரில் இருப்பார். கம்பெனியின் படம் ஓடுகிற ஊரெல்லாம் போய்ச் சுற்ற வேண்டும். நான் குடியிருந்த வீட்டிலேயே பின் கட்டில் அவரும் குடியிருந்தார். தூரத்து உறவுள்ள வயதான பாட்டியம்மாள் ஒருத்தி வீட்டோடு இருந்து சமையல் செய்து போட்டுக் கொண்டிருந்தாள். தகப்பனார் ஊரில் இல்லாத நாட்களில் வீட்டில் பாட்டியும், கமலியும்தான் இருப்பார்கள். சின்ன வயதானாலும், குறும்புத்தனம், வேடிக்கைப் பேச்சு எல்லாம் கமலியிடம் நிறைய உண்டு.

"கமலீ! அப்பாவை எங்கே காணோம்? ஊரிலே இல்லையா?" என்று எப்போதாவது கேட்பேன்.

"மாமா! அதை ஏன் கேட்கிறீர்கள்? வீரமார்த்தாண்டனின் சபதம் முடிந்ததும், பாட்டியின் பசிக்காகவும், புருஷன் போற்றிய பெண்திலகத்துக்காகவும் அப்பா கிளம்பிவிட்டார்!" என்று சொல்லி விட்டு ரப்பர்ப் பந்து மாதிரித் துள்ளிக் குதித்துக் கொண்டே கை கொட்டிச் சிரிப்பாள் கமலி.

"நீ சொன்னதுக்கு என்ன அர்த்தம், கமலீ? எனக்குப் புரியலையே?" என்று தெரியாததுபோல் கேட்பேன்.

"ஐயோ, மாமாவே! நீங்கள் சுத்த அசடா யிருக்கிறீர்களே. அதெல்லாம் சினிமாப் பேரு மாமா! அந்தப் படங்கள் ஓடுகிற ஊருக்கெல்லாம் அப்பா போயிருக்கிறார் என்று அர்த்தம்!" என்பாள் கமலி.

கமலிக்கு அம்மா இறந்து போய் நாலைந்து மாதங்கள்கூட ஆகவில்லை. அம்மா இருந்தபோது கமலி நான்காம் வகுப்பிலோ என்னவோ, படித்துக் கொண்டிருந்தாள். தாய் போனதும் படிப்பு அரைகுறையாக நின்றுவிட்டது. படிப்பு நின்று விட்டாலும் அந்த வயதில் அம்மாதிரி ஒரு பெண் குழந்தைக்குச் சூடிகை, வக்கணைப் பேச்சு, விவாத முறை எல்லாம் இருப்பது ஆச்சரியம். வயதுக்கு மீறின பேச்செல்லாம் கமலியின்

வாயிலிருந்து வரும் சில சமயங்களில். "மாமா! உங்கள் வீட்டு ராமுவைக் கொஞ்சம் வாயை அடக்கிப் பேசச் சொல்லுங்கள். எனக்குக் கோபம் வரும் அப்புறம். காலித்தனமாகப் பேசுறான்."

"அப்படி என்ன பேசினான், கமலி!"

"நீ படிப்பை நிறுத்தினது நல்லதாகப் போச்சு. 'பொம்பளைக்கெல்லாம் படிப்பு வராது' என்று என்கிட்டேயே வந்து துணிச்சலாகச் சொல்கிறான், மாமா!"

'ஏ அப்பா!' இந்த வார்த்தைகளை என்னிடம் சொல்லி என்ன பயன்? ராமுவைப் பற்றிப் புகார் செய்யும்போது தான் கமலியின் முகத்தில் எவ்வளவு கோபம்? உதடு கோணிக் கொண்டு போக விம்மலும், விசும்பலுமாக அவள் இருந்த கோலத்தைப் பார்த்தால் நான் சமாதானப் படுத்தாவிட்டால் அழுது விடுவாள் போலிருந்தது.

"அவன் சொன்னதிலே எது காலித்தனம், கமலி!"

"போ, மாமா! நீ வேண்டுமென்றே தூண்டித் தூண்டிக் கேட்கிறே. உனக்கு ஒன்னும் தெரியாதோ? 'பொம்பளை' என்று சொல்றானே! அப்படி அவன் சொல்லலாமோ?"

"அடே! தேவலையே? வேறே எப்படிச் சொல்ல வேண்டும், கமலி?"

"பெண்கள், மாதர்கள் என்று சொல்லணும், மாமா!" முகத்தில் உறுதி ஒளிர உலகத்துப் பெண் குலத்தின் தன்மானமெல்லாம் தன் பொறுப்பில் பாதுகாக்கப்படுவது போல் ஆவேசத்தோடு சொன்னாள் அந்த மழலை திருந்தாத சிறுமி. மற்றச் சமயங்களில் நீங்கள், உங்களை என்று பேசும் சிறுமி கோபம் வந்து விட்டால் என்னை, நீ, உன்னை, என்று ஒருமையில் பேச ஆரம்பித்து விடுவாள்.

"கமலி! 'பொம்பளை' என்று சொன்னால் குற்றமா?"

"அதென்னமோ? சொல்லப்படாது. சொன்னால் எனக்குக் கோவம் வரும்."

"கோவம்வந்தால் என்ன செய்வாய்?"

"அழுவேன்."

அழகான கவிக்குப் பொருள் காண்பதைப் போலவே, குழந்தைகளின் மனத்தைப் புரிந்து கொள்ள முயல்வதிலும் ஒரு தெய்வீக இன்பம் கிடைக்கிறது.

"அடே! ராமு இங்கே வா....இனிமேல் கமலியைப் 'பொம்பளை'ன்னு சொன்னால் முதுகுத் தோலை உரித்து விடுவேன்" என்று என் பையனை உடனே கூப்பிட்டுக் கண்டித்தேன். கமலியின் முன்னிலையிலேயே ராமுவைக் கூப்பிட்டுக் கண்டித்ததில் அவளுக்குப் பரம திருப்தி. ஆனால் ராமு திரும்பவும் அவளை வம்புக்கு இழுத்து விட்டான்.

"மகாராணி கமலிதேவி அவர்களே! இனி அங்ஙனம் தங்களைப் பேசேன்" என்று நாடக பாணியில் வணங்கிய போது மறுபடியும் அவளுக்குக் கோபம் வந்து விட்டது.

"பாருங்க, மாமா....! உங்கள் முன்னேயே இப்படிச் சினிமாவிலே பேசற மாதிரிப் பேசுகிறான்."

"தடிக் கழுதை! போடா உள்ளே. போய் ஏதாவது படி!" நான் பையனை அதட்டி உள்ளே துரத்தினேன்.

"மாமா! இந்தக் காலத்து 'ஆம்பிளைப் பையன்களுக்கு' எது வருதோ வரவில்லையோ, இந்தமாதிரி வசனம் பேச மட்டும் வருகிறது...."

"அடிசக்கை! நூறு வயதுக் கிழவி மாதிரிப் பேசுகிறாயே? நீ எந்தக் காலத்துப் பெண்? நீயும் இந்தக் காலத்துப் பெண்தானே?"

கமலி பதில் சொல்லத் தெரியாமல் விழித்தாள்.

உள்ளே படிக்கப் போன என் பையன் அடிபட்ட புலி போல் சீறிக் கொண்டு வெளியே ஓடி வந்தான்.

"அப்பா! அவளை விடாதே, அப்பா. அவள் மட்டும் இப்போ 'ஆம்பளை' என்று சொன்னாளே. சொல்லலாமோ? கேளப்பா அவளை."

ராமு சண்டைக்குப் பிள்ளையார் சுழி போட்டுக் கொண்டு வந்தான். எனக்கும் அவன் கேள்வி நியாயமாகவேபட்டது.

"அவன் கேட்பது நியாயந்தானே, கமலி! அவன் உன்னைப் 'பொம்பளை' என்று சொல்லக்கூடாதென்கிறாய். நீ மட்டும் பையன்களை 'ஆம்பளை' என்று சொல்லலாமா?"

கமலியின் கன்னங்களில் ஆப்பிள் பழ ஒளி வழிந்தது. அவள் பதில் சொல்லாமல் வெட்கித் தலைகுனிந்தாள்.

"என்ன கமலி! பதிலைக் காணோம்!"

"தெரியாமற் சொல்லி விட்டேன், மாமா! ஏதோ வாயில் தவறி வந்து விட்டது. இனிமேல் 'ஆம்பளை' என்று சொல்ல மாட்டேன். அவனும் 'பொம்பளை' என்று சொல்லப்படாது."

இவ்வாறு கூறிக்கொண்டே குனிந்த தலை நிமிராமல் ஓடி விட்டாள் கமலி. தரையில் கால்கள் பாவாமல் துள்ளித் துள்ளிப் பாய்வது அவளுக்கென்றே அமைந்த ஒரு நடை. கமலி நடந்து வரும்போது பல நிறமும், பல மணமுமுள்ள பூக்களெல்லாம் ஒன்றுபட்டுக் குழந்தை என்ற ஒரு பெரு மலராகி என்னை நோக்கி அசைந்தாடி வருவது போல் எனக்கு ஒரு பிரமை உண்டாகும்.

எனக்கு ஆர். எம். எஸ். அலுவலகத்தில் உத்தியோகம். ரயிலில் ஊர்

ஊராகத் தபால் வண்டிக்குள் பயணம் செய்து கடிதங்களைப் பிரிக்கும்வேலை. தொடர்ந்தாற் போல் சில நாட்கள் வேலைக்குப்போனால் சிலநாட்கள் ஓய்வு கிடைக்கும். அப்படிக் கிடைக்கும் ஓய்வுநாட்களில் என் வீட்டின் பின்கட்டில் குடியிருக்கும் கமலி என்ற பெண் குழந்தையோடு வம்புபேசுவது எனக்குப் பிடித்தமான காரியம். ஆயிரம் புத்தகங்களைப் படித்தாலும் தெரிந்து கொள்ள முடியாத தூய எண்ணங்கள் குழந்தையின் கண்களிலும், சிரிப்பிலும், திருந்தாத பேச்சிலும் இருப்பதாக எனக்கு ஒரு நம்பிக்கை இருந்தது. கமலி எனது இந்த நம்பிக்கையின் உறைவிடமாக இருந்தாள்.

ஒருநாள் அதுவரையில் கேட்காத புதுக் கேள்வி ஒன்றைக் கமலி என்னிடம் கேட்டாள்:

"மாமா! நீங்க தபால் கடிதாசிகளை ஒவ்வொரு ஊருக்கும் இரயில்லே கொண்டுபோகிற உத்தியோகமா பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"ஆமாம்! உனக்கு யார் சொன்னார்கள், என் உத்தியோகத்தைப் பற்றி?"

"'ராமு அப்பாவுக்கு என்ன வேலை' என்று என் அப்பாவிடம் கேட்டேன். அவர்தான் சொன்னார்."

"அப்படியா?"

"மாமா! யார் கடிதாசு போட்டாலும் நீங்க கொண்டுபோய்க் கொடுப்பீங்களா?"

"தாராளமாகக் கொடுப்பேன்."

"நான் போட்டால் கூடவா?"

"நீ யாருக்குக் கடிதாசு போடணும், கமலீ?"

"அதெல்லாம் உங்களுக்கு என்ன கேள்வி? நான் ஒருத்தருக்கு இரகசியமா ஒண்ணு எழுதிப் போடணும். போட்டால் போய்ச்சேருமா, இல்லையா? அதை மட்டும் நீங்க சொன்னால் போதும்."

எனக்குச் சிரிப்பு வந்தது. அடக்கிக் கொண்டு கமலிக்குச் சரியாக உட்கார்ந்து கொண்டு பேசினேன்.

"கமலீ! நீ சொல்லாவிட்டால் எனக்குத் தெரியாமலா போய் விடும்? கடிதத்தை எழுதி என் கையில்தானே கொடுப்பாய்? அப்போது நான் படித்து விடுவேனே!"

"ஆசையைப் பாரு! நான் 'கார்டி'லே எழுதிக் குடுத்தால் தானே நீங்க படிக்க முடியும்? கவரிலே எழுதி ஒட்டித்தானே குடுப்பேன்."

## சரிதான்!




"கவரைப் பிரித்துப் படித்து விட்டால் என்ன செய்வாய்?"

"ஐயோ! ஒருத்தர் ஒட்டிப் போட்ட கவரை இன்னொருத்தர் பிரிப்பாளோ? நீங்க அப்படிச் செய்வீங்களா, மாமா? உங்களை நான் நல்ல மாமா என்று நினைத்துக் கொண்டிருக்கிறேனே!"

"சே! சே! நான் அப்படியெல்லாம் செய்வேனா, கமலீ! சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன். நீ கடிதாசு எழுதிக் கொடு, நான் கொண்டுபோறேன்."

"அதானே கேட்டேன்! நீங்க ரொம்ப நல்ல மாமாவாயிற்றே!"

என் சிரிப்பு இதழ்களுக்கு உட்புறமே சிறைப்பட்டு நின்றது.

"மாமா! நீங்க நாலு மணிக்குத் தானே கிளம்புவீர்கள்? அதற்குள் எழுதிக் கொண்டு வந்து உங்களிடம் கொடுத்துடறேன்." அப்படி அவள் சொன்னபோது பகல் பன்னிரண்டு மணி.

"சரி! கொண்டு வா...."

கமலி வீட்டுக்கு ஓடினாள்.

என் மனத்தில் சிந்தனை சூழ்ந்து கொண்டது. 'இந்தச் சிறுமி யாருக்குக் கடிதாசு எழுதப் போகிறாள்? என்ன இரகசியம் இருக்கும்? இவளாகத் தான் வந்து இவ்வளவும் விசாரித்தாளா? அல்லது பாட்டி ஏதாவது கடிதம் தபாலில் சேர்ப்பதற்காகக் கமலியை விட்டு விசாரித்துக்கொண்டு வரச்சொன்னாளா? எப்படியானால் என்ன? கடிதத்தைக் கொண்டு வந்து கொடுக்கும்போது, தானே தெரிந்து விடுகிறது' என்று மன அமைதி பெற்றேன்.

அன்று எனக்கு மாலை நான்கு மணிக்குப் புறப்பட வேண்டும். மூன்றரை மணிக்கே நான் தயாராகி விட்டேன். கிளம்பும்போது கமலி மூச்சு இரைக்க ஓடி வந்து ஒரு கவரைக் கொடுத்தாள். அதைப் பார்க்காமல் அப்படியே வாங்கிப் பையக்குள் போட்டுக் கொண்டேன்.

ஆர். எம். எஸ். ஊழியர்கள் பயணம் செய்யும் மெயில்காரேஜில் ஜன்னல்களையெல்லாம் அடைத்து விடுவதால் ரயில் ஓடிக் கொண்டிருந்தாலும் உள்ளே வேர்த்துக் கொட்டும். குவிந்து கிடக்கும் கடிதங்களைப் பகுதி பகுதியாகப் பிரித்துக் கொண்டிருந்தவன் வேர்வையைத் துடைத்துக் கொள்வதற்காகக் கைக்குட்டையைத் தேடிச் சட்டைப்பைக்குள் துழாவினேன்.

கைக்குட்டையோடு கமலி கொடுத்தனுப்பியிருந்த கவரும் வந்தது. 'அடேடே! மறந்தே போய்விட்டேனே! கமலியின் கவரைத் தபாலில் சேர்க்க வேண்டுமே. அவள் அப்பா எந்த ஊரில் டூரிங் சினிமாவில் சுற்றிக் கொண்டிருக்கிறாரோ! பாட்டி சொல்லச் சொல்லக் கேட்டுக் கமலி அப்பாவுக்கு எழுதியிருப்பாள், இந்தக் கடிதத்தை' என்று எண்ணியவனாய்க் கடித உறையைத் திருப்பி மேலே இருந்த முகவரியைப் படித்ததும் ஒன்றும் புரியாமல் திகைத்தேன். ஊர், பேர், தெரு ஒன்றும் புரியாமல் கோணல் மாணலான சிறு பிள்ளைக் கையெழுத்துக்களால், 'அருமை அம்மாவுக்கு' என்று மட்டும் உறையின்மேல் எழுதியிருந்தது.

"அசடே!" என்று வாய்க்குள் என் நாக்கு மெல்ல அசைந்தது. கவரைப் பிரித்தேன். உள்ளேயும் அதே சிறு பிள்ளைக் கையெழுத்தில் தாறுமாறாக ஏதோ கிறுக்கி வைத்திருந்தாள் கமலி! நெஞ்சில் பொங்கும் சோகக்கிளர்ச்சியும், ஆவலும் என்னை அதைப் படிக்குமாறு தூண்டின. எழுத்துக் கூட்டிப் பிழைகளை நீக்கிப் படிப்பதே கஷ்டமாக இருந்தது. ஆனாலும் பொறுமையோடு படித்தேன்.

"அருமை அம்மாவுக்குக் கமலி எழுதிக் கொள்வது என்னவென்றால், நீ போய் ரொம்ப நாட்களாயிற்று. இன்று வரையில் உன்னிடமிருந்து ஒரு கடிதாசும் கிடையாது. உன்னைப் பற்றி அப்பாவைக் கேட்டாலும் பதில் பேசமாட்டேங்கறு. பாட்டியைக் கேட்டா ஒண்ணும் பதில் சொல்லாமே அழ ஆரம்பிச்சுடறா.

"அன்னிக்கிச் சாயங்காலம் நான் பள்ளிக்கூடம் விட்டு வரதுக்கு முன்னால் சிவப்பா ஒரு கார்-ஆம்புலன்ஸ் காராமே; உன்னை அது வந்து ஏத்திண்டு போனதைப் பார்த்ததாகத் தபால் மாமா வீட்டு ராமு சொல்றான். எனக்கு ஒண்ணும் புரியலே இல்லே. நீ எப்போ வருவே? எங்கே போயிருக்கிறே? யாரைக் கேட்டாலும் தெரியலே. மேல் வீட்டுப் பிச்சி இருக்காளே, கோணவாயி...அவ வந்து ஒரு நாள், 'உங்கம்மா செத்துப் போயிட்டாடி'ன்னு என் கிட்டச் சொன்னா. எனக்கானா ஒரே கோவமா வந்தது. 'பளீர்'னு ஒரு அறை அவள் கன்னத்திலே விட்டேன் பாரு; அப்புறம் மூணு நாளைக்கு என் கூட அவ பேசவேயில்லே.

"பாட்டிக்குக் கண்ணே சரியாகத் தெரியலே. அவ சமைச்சுப் போடற சோறு வாயிலே வைக்க விளங்கலே. அப்பா முக்கால்வாசி நாள் ஊர் சுத்தப் போயிடறார். எனக்குத்தான் பொழுதே போகலே. பள்ளிக்கூடமும் நிறுத்தியாச்சு. உனக்குப் புதுப் பாப்பா பொறக்கப் போறதுன்னுதானே நீ ஆஸ்பத்திரிக்குப் போனே? இன்னும் பொறக்கலியாம்மா? எப்ப வருவே? நீ வரும்போது புதுப் பாப்பாவோடதானே வருவே?

ராமு இருக்கான் பாரு அம்மா; அவன் 'பொம்பளைக் கெல்லாம் படிப்பு வராது'ன்னான். எனக்குப் பொறுக்கல்லே.

'பொம்பளைன்னு சொல்லப்படாது' என்று அவன் அப்பாகிட்டப் போயிச் சண்டை பிடிச்சேன். அவர்தான்..... அந்த மாமாவை நீ பார்த்திருக்கிறயே, ரொம்ப நல்லவர். அவர் கூப்பிட்டு ராமுவைக் கண்டிச்சார்.

"இன்னொரு ரகசியம் உனக்குச் சொல்லிடணும் அம்மா! பாட்டி இல்லே, பாட்டி-அவ வந்து ஒரு நாள் ஒரு சங்கதி சொன்னாள்:

'கமலீ! சீக்கிரம் உனக்கு ஒரு புது அம்மா வந்திடுவா. அப்புறம் முன்னைப் போல நீ தினம் பள்ளிக்கூடம் போகலாம். பூ வைத்துத் தலையைப் பின்னிக்கலாம். புது அம்மா கிட்டச் சமர்த்தா இருப்பியோ, மாட்டியோ?' அப்படின்னு பாட்டி கேட்டாள்.

'ஏன்? பழைய அம்மா வரமாட்டாளா பாட்டி....' அப்படின்னு நான் பாட்டியைக் கேட்டேன். அவ பதில் சொல்லாமல் அழுதாள்.

"நீயே சொல்லும்மா! எனக்குப் புது அம்மா எதுக்கு? நீதான் இன்னுங் கொஞ்ச நாளிலே புதுப் பாப்பாவோடே வீட்டுக்கு வந்திடுவியே......நீ வீட்டுக்கு வந்ததும், முதல் வேலையாப் பாட்டியை அவ ஊருக்குத் தொரத்திப்பிடணும். நீ சுருக்க வெரசா வந்திடு அம்மா.

கமலி"

என் கண்களில் ஈரம் கசிந்து விட்டது. ஆயிரமாயிரம் கடிதங்களை விலாசம் பார்த்து ஊர் பிரித்து அனுப்பிப் பழகியவை என் கைகள். கமலியின் கடிதத்தை எங்கே அனுப்புவது? எந்த ஊர் முத்திரை குத்தி அனுப்புவதென்று எனக்கு விளங்கவே இல்லை. கைக்குட்டையால் ஈரம் கசிந்த என் கண்களைத் துடைத்துக் கொண்டேன்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras 10
Managing Editor: T. Sadasivam



வெற்றியோ தோல்வியோ

அக்கறையில்லை

—அங்கே நம்மை

உற்சாக மூட்டுவதற்கு

டீ இருக்கும் வரை!



நான்தான் டீ

ஆடுபவர்களுக்கும் பார்ப்பவர்களுக்கும் நான் சேவை செய்கிறேன்






PST 313

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



பூவைப் போல . . .

உங்கள் மேனியை மலரச் செய்வது







ரெக்ஸோனு






ரெக்ஸோனு சோப்பில் இருப்பது கேடில் —பற்பல எண்ணெய்கள் கலந்த விசேஷத் தைலமாகிய கேடில், சருமத்திற்கு ஊட்டமளித்து உங்கள் இயற்கை அழகை வெளிக்கொணரத் துணை புரியும்.

**கேடில் கலந்த டாய்லெட் சோப் இது ஒன்றே**

R.P. 152-50 TM